| | | |
|---|---|---|
| நூல் தலைப்பு | : | சர்ப்ப வியூகம் |
| ஆசிரியர் | : | ராஜேஷ்குமார் |
| மொழி | : | தமிழ் |
| பதிப்பகம் | : | நிலாச்சாரல் லிமிடட் |
| காப்புரிமை | : | ஆசிரியருக்கு |
| பதிப்பாசிரியர் | : | நிலா |
| பதிப்பு எண் | : | 1.0 |
| காலம் | : | பிப்ரவரி 2014 |
| அட்டை வடிவமைப்பு | : | Michelle |
| Wrapper Image Courtesy | : | Claudette Gallant |
| | | Pixabay.com |


**“உலகம் முழுவதும் பரவியுள்ள தமிழ் சமுதாயத்திற்குத் தமிழ் இலக்கியங்களைப் படிக்க வாய்ப்பளிப்பதும், வளரும் எழுத்தாளர்களை ஊக்கப்படுத்துவதும், வருங்கால சந்ததிகளுக்குத் தமிழ் இலக்கியப் பொக்கிஷங்களை பாதுகாத்துத் தருவதுமே 'நிலா புக்ஸ்'-ன் இலட்சியம்”**





**Nilacharal Ltd**
**18 Collingwood Road**
**Crawley**
**RH10 7WG**
**UK**
**E-mail: team@nilacharal.com**

# பொருளடக்கம்

# சர்ப்ப வியூகம்

## 1

“ஜெயா…”

ட்ரஸ்ஸிங் டேபிளுக்கு முன்பாய் நின்று இரண்டாம் முறையாக பௌடர் கோட்டிங் கொடுத்துக் கொண்டிருக்க, ஜெயா கணவன் ஹரி கூப்பிட திரும்பிப் பார்க்காமலேயே “ம்” என்றாள்.

“உன்னோட தம்பி வருண் நல்லா தூங்கிட்டிருக்கான். அவனை அப்படியே தூங்க விட்டு நாம மட்டும் போட் ஹவுஸ்க்குப் போயிட்டு வந்துடலாமா…?”

“என்ன சொன்னீங்க… என்னோட தம்பி வருணை விட்டுட்டுப் போறதா….?”

“ஆமா…”

“இந்த ஊட்டிக்கு அவன் நம்மகூட வந்ததே போட் ஹவுஸுக்குத்தான்…”

“இது ரொம்பவும் கொடுமை ஜெயா…”

“எது…?”

“ஊட்டிக்கு வந்து நாலைஞ்சு நாள் ஜாலியா இருக்கலாம்ன்னு பார்த்தா உன்னோட தம்பியும் வர்றேன்னு ஒட்டிகிட்டது.., அவனை ஏதாவது ஒரு காரணம் சொல்லி ஊர்லேயே கட் பண்ணிட்டு வந்திருக்கணும்…”

“பாவங்க… ஒரு சின்னப் பையனோட ஆசையை 'மளுக்'குன்னு முறிச்சிட்டு வர்றது ரொம்பத் தப்பு…”

“அவனா… சின்னப் பையன்..?”

“பின்னே… வயசு எட்டுதானே….?”

“வயசு என்னமோ எட்டுதான். ஆனா அவன் பேசுற பேச்சு இருக்கே…! அறுபது வயசு கிழவன் மாதிரி பேசுவான்…”

“எங்க பரம்பரை அப்படி…”

“பெரிசா பீத்திக்காதே... இப்ப அவனை என்ன பண்ணலாம்? தூங்கிட்டிருக்கிறவனை இப்படியே ரூமுக்குள்ளே விட்டு பூட்டிட்டுப் போயிடலாமா... இல்லை... எழுப்பிக் கூட்டிட்டுப் போயிடலாமா...?”

“கூட்டிட்டுப் போயிடலாங்க.. “

“சரி.. அவனை எழுப்பு...”

ஜெயா வேகமாய் போய் கம்பளிப் போர்வைக்குள் இந்த தன் தம்பியை உசுப்பினாள்.

“டேய்... வருண்....”

“....”

கம்பளியை உருவினாள் ஜெயா.

“டேய் வருண்... எந்திரி... நானும் அத்திம்பேரும் போட் ஹவுஸுக்குக் கிளம்பிட்டிருக்கோம்....”

வருண் எழுந்து உட்கார்ந்தான். முகத்தைப் பெரிய மனுஷத் தோரணையில் வைத்துக் கொண்டு சொன்னான்.

“அக்கா....! நான் போட் ஹவுஸுக்கு வரலை. நீயும் அத்திம்பேரும் போய்ட்டு வந்துடுங்க.....”

“நீ...?”

“நான் ரூம்லேயே இருந்துக்கறேன்...”

“ஏண்டா...?”

வருண் இரண்டு கைகளாலும் தன் கன்னங்களைத் தாங்கிக் கொண்டான். பார்வையை எங்கோ வைத்தபடி சொன்னான். “எனக்கு ரூம்ல இருக்கத்தான் பிடிக்குது.”

“என்னது... ரூம்ல இருக்கத்தான் பிடிக்குதா?”

“ஆமா...”

“ஏண்டா....! ஊர்ல இருக்கும்போது ‘ஊட்டிக்குப் போகணும் போகணும்’ன்னு பாடாய் படுத்தினியே? ஊட்டிக்கு வந்ததுமே ஏண்டா இப்படி அழிச்சாட்டியம் பண்றே? எந்திரிச்சு ட்ரஸ் பண்ணிக்கோ. போட் ஹவுஸுக்குப் போகலாம்.”

“நான் வரலை....”

“என்னங்க... இவன் இப்படி அடம் பிடிக்கிறான். இவனை ரூம்ல தனியா விட்டுட்டு நாம மட்டும் எப்படிப் போறது...?”

ஹரி இப்போது வருணிடம் குனிந்தான்.

“டேய்.. வருண் ! உன்னோட பெரிய மனுஷத்தனத்தையெல்லாம் மூட்டை கட்டி ஒரு ஓரமா வெச்சுட்டுக் கிளம்பு...”

“ஹரி... அத்திம்பேர் எனக்கு வெளியே வரப் பிடிக்கலை. நீங்களும் அக்காவும் போய்விட்டு வாங்க. நான் ரூமை உள்பக்கமா தாழ் போட்டுக்கிட்டு டி.வி-யில் கார்ட்டுன் சேனல் பார்த்துட்டிருக்கேன்.”

ஜெயா தன் இடுப்பில் இரண்டு கைகளையும் வைத்துக் கொண்டு தம்பியை ஒரு உஷ்ணப் பார்வை பார்த்தாள்.

“உதை விழும். மரியாதையா எங்ககூட கிளம்பி வரப் போறியா இல்லையா...?”

ஜெயாவையே பார்த்தான் வருண்.

“என்னடா பார்க்கறே... போய் மொதல்ல மூஞ்சியை அலம்பிட்டு வா....”

வருண் தலையை உளைத்துவிட்டு அறையின் மூலையில் இருந்த பாத்ரூமுக்குள் போனான்.

ஹரியைப் பார்த்தாள் ஜெயா.

“இவனுக்கு என்னங்க ஆச்சு....?”

“என்னைக் கேட்டா....? உன்னோட குடும்பமே லூஸு குடும்பம். பின்னே எப்படி இருப்பாங்க....?”

“இதோ பாருங்க... என்னோட குடும்பத்த அநாவசியமா இழுக்காதீங்க.... எனக்குக் கெட்ட கோபம் வரும்,”

“உள்ளதைச் சொன்னா கோபம் வரத்தான் செய்யும் ...”

“சரி... எங்க குடும்பம்தான் லூஸு குடும்பம்ன்னு தெரிஞ்சும் என்னை ஏன் கட்டிக்கிட்டிங்க ...?”

“கட்டிக்கிட்ட பின்னாடிதானே லூஸு குடும்பம்ன்னு தெரிஞ்சுது...”

ஜெயா கோபத்தில் சுற்றும் முற்றும் பார்த்துவிட்டு டீபாயின் மேல் இருந்த பித்தளை ஃப்ளவர்வாஷ் ஒன்றை எடுத்துக் கொண்டு ஓங்கினாள்.

ஹரி ஒதுங்கிக் கொண்டு சிரித்தான்.

“அடிச்சுடாதே....! ஃப்ளவர்வாஷுக்கு ஏதாவது ஒண்ணு ஆயிட்டா ஹோட்டல் பில்லில் அமௌண்ட் ஏறிடும்.”

டெலிபோன் கூப்பிட்டது.

போய் ரீஸிவரை எடுத்தான்.

“ஹலோ..”

“ஸார்... இது ஹோட்டல் ரிசப்ஷன்...”

“சொல்லுங்க...”

“உங்களைப் பார்க்கிறதுக்காக உங்க ஃப்ரண்ட் மிஸ்டர் கிறிஸ்டோபர் வந்து ரிசப்ஷன்ல வெயிட் பண்ணிட்டிருக்கார். உங்க ரூமுக்கு அனுப்பி வைக்கலாமா ஸார்...?”

“ப்ளீஸ்.”

“ஹரி ரீஸிவரை வைத்த இரண்டாவது நிமிஷம் இருபத்தேழு வயது கிறிஸ்டோபர் கதவைத் தட்டிவிட்டு உள்ளே வந்தான்....”

“வாடா தடியா...”

“ஸாரிடா ஹரி...”

“எதுக்கு ஸாரி...?”

“என்னைக் கேட்டு வீட்டுக்கு நாலைஞ்சு தடவ போன் பண்ணிட்டியாம்... நான் ரெண்டு நாளா அவுட் ஆ◌ஃப் ஸ்டேஷன். கோயமுத்தூர்ல ஒரு லா அண்ட் ஆர்டர் ப்ராப்ளம். என்கொய்ரிக்காகப் போய்ட்டு அரை மணி நேரத்துக்கு முன்னாடிதான் திரும்பி வந்தேன். வந்தவுடனே வீட்ல என்னோட மிஸஸ், நீ ஃபோன் பண்ணினதைப் பத்தி சொன்னா... பைக்கை எடுத்துகிட்டு ஓடி வர்றேன்...”

ஹரி தன் மனைவி ஜெயாவிடம் திரும்பினான் ”ஜெயா...! ஹி ஈஸ் கிறிஸ்டோபர். போலீஸ் டிபார்ட்மெண்ட். க்யூ ப்ராஞ்ச் ஃபர்ஸ்ட் கிரேட் இன்ஸ்பெக்டர். காலேஜ்மேட். ஊட்டிக்கு வந்தா அவசியம் எனக்கு போன் பண்ணனும்ன்னு சொல்லிட்டே இருப்பான். வந்ததிலிருந்து போன் பண்ணிப் பார்த்தேன். ஆளே கிடைக்கலை. இப்ப வந்திருக்கான்.”

‘கிறிஸ்டோபர் கைகளைக் குவித்தான்.

“வணக்கம் சிஸ்டர்...”

“வணக்கம்...”

“உட்கார்றா ...”

கிறிஸ்டோபர் உட்கார்ந்தான்.

“ஜாப் எல்லாம் எப்படியிருக்கு...?”

“ஃபைன்... லா அண்ட் ஆர்டர் அப்பப்ப கொஞ்சம் டிஸ்டர்ப் ஆனாலும் எல்லாமே கண்ட்ரோல்ல இருக்கு.”

“தமிழ்நாட்ல மட்டும் இல்லை. இனி இந்தியாவில் எந்தப் பகுதியிலும் குண்டு வெடிக்காது.... அந்த அளவுக்கு எல்லா ப்ரிகாஷனரி ஸ்டெப்ஸும் எடுக்கப்பட்டிருக்கு. இனிமே தீபாவளி சமயத்துல சிவகாசி பட்டாசு சத்தம் மட்டும்தான் கேட்கும். பை... த.. பை ரெண்டு பேரும் வெளியே எங்கேயோ கிளம்பிட்டீங்க போலிருக்கு...?”

“ஆமா...! போட் ஹவுஸுக்கு! நேத்து பொட்டானிக்கல் கார்டன் போயிருந்தோம்....”

பாத்ரூம் கதவைத் திறந்து கொண்டு வருண் வெளிப்பட்டான். கண்களில் இன்னமும் மத்தியான தூக்க கலக்கம்.

கிறிஸ்டோபர் கேட்டான்.

“பையன் யாரு...?”

“என் ஒய்ஃப் ஜெயாவோட தம்பி. பேரு வருண்.” வருணின் தோள்பட்டையைப் பற்றினான் கிறிஸ்டோபர்.

“எந்த க்ளாஸ் படிக்கிறே ...?”

“ஃபிப்த் ... சுவாமி விவேகானந்தா மெட்ரிகுலேஷன் ...”

“என்ன பையன் டல்லடிக்கிறான் ...”

“இப்பத்தான் இப்படியிருக்கான். மத்தியானம் லஞ்ச் சாப்பிடும்போதுகூட கடி ஜோக்கெல்லாம் சொல்லிட்டு ஜாலி மூட்ல இருந்தான். இப்ப போட் ஹவுஸுக்கு கூப்பிட்டா ‘நான் வரலை. ரூம்லேயே இருக்கேன். நீங்க ரெண்டு பேர் மாத்திரம் போய்ட்டு வாங்க’ன்னு சொல்றான்.

“ஈஸிட்...?” சொன்ன கிறிஸ்டோபர் வருணைப் பக்கத்தில் இழுத்து வைத்துக்கொண்டு கேட்டான்.

“போட்ல.... போக உனக்குப் பிடிக்காதா?”

“பிடிக்கும் ...”

“பின்னே ஏன் போகமாட்டேன்னு சொல்றே?”

“எனக்கு வெளியே போகப் பிடிக்கலை.”

“ஏன் ...?”

“தெரியலை.... இந்த ஊட்டியை விட்டு உடனே கிளம்பிப் போயிடணும் போலிருக்கு...”

கிறிஸ்டோபர் ஜெயாவை ஏறிட்டான்.

“என்ன சிஸ்டர் உங்க தம்பி பேச்சு, ஒரு சின்னப் பையன் பேசற மாதிரி இல்லாமே பெரிய மனுஷத் தோரணையில் இருக்கு.”

ஜெயா சிரித்தாள்.

“வருண் எப்படிவும் இப்படித்தான் பேசுவான். அவனுக்கு ஒரு விஷயம் பிடிக்கலைன்னா திரும்பத் திரும்ப சொல்லிக்கிட்டே இருப்பான். இன்னிக்கு ஒரே பிடிவாதம் பிடிக்கிறான். ’நான் ரூம்லயே இருந்துக்கறேன்... நீங்க போட் ஹவுஸ்க்கு போய்ட்டு வாங்க’ன்னு சொல்றான்... இவன எப்படி ரூம்ல விட்டுட்டுப் போறது...?

கிறிஸ்டோபர் வருணின் அடர்த்தியான தலைமுடியை மெள்ளக் கோதிவிட்டான்.

“வருண்... ! அவங்க வேணும்ன்னா போட் ஹவுஸ்க்கு போகட்டும். நீ என்னோட வீட்டுக்கு வர்றியா...? அங்கே நாய், பூனை பாங்க்காக் பேரட்ஸ் எல்லாமே இருக்கு. நீ விளையாடிக்கிட்டே இருக்கலாம்...”

“...”

“என்ன வர்றியா...?”

“ம்”

“கிறிஸ்டோபர்! இவன் சரியான ரெட்டைவால். உன்னால சமாளிக்க முடியாது....”

“கவலையேபடாதே ஹரி...! இந்தக் காலத்துல எல்லாக் குழந்தைகளும் துறுதுறுன்னுதான் இருக்காங்க... ஐ வில் டேக் கேர். நீங்க ரெண்டு பேரும் போட் ஹவுஸுக்குப் போய்ட்டு அப்படியே நைட் டின்னர் சாப்பிட என் வீட்டுக்கு வந்துடுங்க. டின்னர் சாப்ட்டுட்டு வருணைக் கூட்டிக்கிட்டு வந்துடலாம்....”

“உனக்கு ஏண்டா சிரமம்...?”

“இதுல சிரமப்பட ஒண்ணுமேயில்லை. நான் வருணைக் கூப்பிட்டுகிட்டு கிளம்பறேன். நீங்க ரெண்டு பேரும் போட் ஹவுஸுக்குப் போய்ட்டு அப்படியே என் வீட்டுக்கு வந்துடுங்க ...”

ஜெயா வருணைக் கேட்டாள்.

“ஏண்டா! அங்கிள் வீட்டுக்குப் போறியா ...?”

“ம்...”

“குறும்பு பண்ணாமே சமத்தா இருக்கணும்.”

“ம்....”

கிறிஸ்டோபர் வருணைக் கூட்டிக் கொண்டு வெளியே வந்தான். லிஃப்டில் இறங்கும்போது கேட்டான்.

“வருண்....! நீ இதுக்கு முந்தி ஊட்டிக்கு வந்திருக்கியா?...”

“இல்ல அங்கிள்...! இதான் ஃபர்ஸ்ட் டைம்....”

“எல்லார்க்கும் பிடிச்ச ஊட்டி உனக்கு மட்டும் ஏன் பிடிக்கலை...”

“என்னமோ தெரியலை...”

பைக்குக்கு வந்தார்கள்.

பைக் உதைபட்டபோது வருண் கேட்டான்.

“அங்கிள்! உங்க வீடு எங்கேயிருக்கு ...?”

“தொட்டபெட்டா போற வழியில...”

“ரொம்ப தூரமா...?”

“கொஞ்ச தூரம்தான் ...”

வருண் பில்லியனில் தொற்றிக்கொள்ள பைக் அந்த மத்தியான மூன்று மணிக் குளிர்க்காற்றை வெட்டிக் கொண்டு கிளம்பியது.

“ஸ்பீடா போனா நீ பயப்படுவியா?”

“ஊஹூம்”

“அப்ப போகட்டுமா...?”

“ம்...”

கிறிஸ்டோபர் பைக்கின் வேகத்தை அறுபதிலிருந்து எழுபதுக்குக் கொண்டு போக- பைக் ஒரு குத்தீட்டி மாதிரி விரைந்தது. செர்ரி க்ராஸ் ரோட்டைத் தாண்டி யூகலிப்ட்ஸ் மரங்களைப் பின்னுக்கு விரட்டியது.

“வருண்! ஐஸ்க்ரீம் சாப்பிடறியா...?”

“வேண்டாம்...”

“ஜாப்னீஸ் கேக் ?”

“ஊஹூம்.”

“ஊட்டிக்கு வந்தா டல்லா இருக்கக் கூடாது. சியர்ஃபுல்லா இருக்கணும்...”

“ம் ...”

“உனக்கு நிறைய கடி ஜோக்ஸ் தெரியுமாமே! ஒண்ணை எடுத்துவிடேன் ...”

“உங்க வீட்டுக்குப் போனதும் சொல்றேன் அங்கிள்...”

“சரி... இப்ப நான் ஒரு கடி ஜோக் சொல்லட்டுமா?”

“சொல்லுங்க ...”

“ஒரு யானையும் எறும்பும் கண்ணாமூச்சு விளையாட்டு விளையாடிட்டிருந்ததாம். யானை திரும்பி நின்னு கண்ணை மூடிக்கிட்டதும் எறும்பு வேகவேகமாய் போய் பக்கதுல இருந்த ஒரு கோயிலுக்குள்ளே போய் ஒளிஞ்சுகிச்சாம். யானை ரொம்பவும் அலையாமே சுலபமா கோயிலுக்குள்ளே போன எறும்பைக் கண்டு பிடிச்சுதாம். அது எப்படிக் கண்டுபிடிச்சுருக்கும்ன்னு சொல்ல முடியுமா?...”

வருண் யோசித்துவிட்டுத் தலையாட்டினான்.

“முடியும்.”

“எப்படி? சொல்லு... பார்க்கலாம்....!”

“அந்த எறும்பு கோயிலுக்குள்ளே ஒளிஞ்சுக்கப் போறதுக்கு முந்தி தன்னோட செருப்பைக் கோயில் வாசல்ல விட்டுட்டுப் போயிருந்தது. அதை வெச்சு யானை கண்டு பிடிச்சுடுச்சு.”

கிறிஸ்டோபர் சிரித்தான்.

“உனக்கு, முன்னாடியே இந்தக் கடி ஜோக் தெரியும் போலிருக்கே ...?”

“தெரியும் அங்கிள்...”

பைக் இப்போது தொட்டபெட்டா போகும் சாலையில் திரும்பி விரைந்தது.

சாலையின் இரண்டு பக்கமும் சைப்ரஸ் மரங்கள் ஊசி இலைகளோடு அடித்த குளிர் காற்றுக்கு அசைந்து கொண்டிருந்தது.

“உங்க வீடு பெரிய பங்களாவா அங்கிள்?”

“ஊஹும்... சின்ன வீடுதான்.”

“நாய் இருக்குன்னு சொன்னீங்களே அங்கிள் என்ன நாய்...?”

“பொமரேனியன். நாய்ன்னா உனக்குப் பிடிக்குமா?”

“ரொம்ப…”

“உனக்கு வேற என்னவெல்லாம் பிடிக்கும்?”

“முயல்…”

ஒரு ஹேர்பின் பெண்ட் வளைவில் பைக் திரும்பியது. யூகலிப்டஸ் மரங்கள் கோஷ்டி கோஷ்டியாய் வந்தன.

வருண் கேட்டான்.

“உங்க வீட்டுக்கு இன்னும் எவ்வளவு தூரம் போகணும் அங்கிள்...?”

“இதோ வந்தாச்சு... இங்கிருந்து இனி ஒரு கிலோ மீட்டர் தூரம்தான்…”

“அங்கிள் …”

“என்ன …?”

“கொஞ்சம் ரோட்டோரமா வண்டியை நிறுத்தறீங்களா? …”

“எதுக்கு...?”

“நெம்பர் ஒன் போகணும்.”

“வீட்டுக்குப் போய் போய்க்கலாமே?”

“ரொம்ப அர்ஜென்ட் அங்கிள்.”

கிறிஸ்டோபர் ரோட்டோரமாய் பைக்கை நிறுத்தினான்.” சரி... போய்ட்டு வா….”

வருண் பைக்கிலிருந்து குதித்து ரோட்டோர புல்தரை மேடேறி ஒரு மரத்துக்குப் பின்னால் போனான்.

கிறிஸ்டோபர் சிரித்தான்.

“டேய் பெரிய மனுஷா! ரொம்ப தூரம் போயிடாதே …”

வருண் மரத்துக்குப் பின்னால் மறைந்ததும், கிறிஸ்டோபர் ஒரு சிகரெட்டைப் பற்ற வைத்துக் கொண்டான்.

சிகரெட் புகையாய் மாறி உடம்பைக் கரைத்துக் கொள்ள விநாடிகள் வீழ்ந்து கொண்டிருந்தன.

ஒரு நிமிஷம்….

இரண்டு நிமிஷம்...

மூன்று... நான்கு....

ஐந்து...

மரத்துக்குப் பின்னாடி போன வருண் திரும்பி வரவில்லை. கிறிஸ்டோபர் ஆச்சர்யப்பட்டுக் கொண்டே குரல் கொடுத்தான்.

“வருண்... ”

“... ”

“வருண்... ”

குரல் கொடுத்துக் கொண்டேபோய் மரத்துக்குப் பின்னால் எட்டிப்பார்த்தான் கிறிஸ்டோபர்.

வருண் இல்லை.

சுற்றும்முற்றும் பார்த்தான்.

வருண் எந்தத் திசையிலும் இல்லை.

# 2

“துர்கா.”

அப்பாவின் குரல் ஹாலிலிருந்து கேட்க மாடியிலிருந்து துர்கா எட்டிப்பார்த்தாள். இருபது வயது ரோஜா.

“என்னப்பா...?”

“மாடியிலிருந்துகிட்டு என்னம்மா பண்றே?”

“லவ்பேர்ட்ஸுக்குத் தீனி போட்டுக்கிட்டிருக்கேன்.

“ஏம்பா...?”

“கொஞ்சம் கீழே இறங்கி வாம்மா.”

“எதுக்குப்பா...?”

“கேள்வி கேட்காமே... வாம்மா சொல்றேன்.”

அந்த அழகான துர்கா மிக அழகாய் சிணுங்கிக் கொண்டே மாடிப்படிகளில் ஒவ்வொரு படியாய் உதைத்துக் கொண்டே கீழே இறங்கி வந்தாள்.

“என்னப்பா...”

“வாசல் வரைக்கும் போய்ட்டு எதிர்ல வாம்மா...” துர்காவின் அப்பா உமாபதி சொல்ல துர்கா மறுபடியும் சிணுங்கினாள்.

“எதுக்கு...?”

“ஒரு நல்ல சகுனத்துக்காகத்தான். வெளியே கிளம்பும்போது நீ எதிர்ல வந்தாலே போதும். போற காரியம் ஜெயம்தான்.”

துர்கா பக்கத்தில் வந்து உமாபதியின் தோளில் தொங்கிக் கொண்டிருந்த பட்டு அங்கவஸ்திரத்தை சரி செய்தபடியே மெல்லிய குரலில் கேட்டாள்.

“இவ்வளவு காலங்கார்த்தால எந்திரிச்சு எங்கேப்பா போறீங்க...?”

உமாபதி சிரித்தார்.

“அதான் சொன்னேனேம்மா... ஒரு நல்ல காரியம்ன்னு.”

“ந்யூ ஹில்ஸ் எஸ்டேட்டை விலை பேசி முடிச்சு இன்னிக்கு அக்ரிமென்ட் போடப் போறீங்களா?”

“அதில்லேம்மா...”

“பின்னே...?”

துர்கா விழிகளை விரித்துக்கொண்டு கேட்டாள்.

உமாபதி சிரித்தார்.

“என்னம்மா நீ... ஒரு நல்ல காரியம்ன்னா எஸ்டேட் வாங்கறது மட்டும்தானா...?”

“அப்புறம்...?”

“உனக்குக் கல்யாணத்தைப் பேசி முடிக்கத்தான் கிளம்பிப் போயிட்டிருக்கேன்மா ...”

“என்னது... கல்யாணமா?”

“ம்...”

உமாபதியின் தோளில் இருந்த அங்கவஸ்திரத்தை துர்கா கோபத்துடன் உருவிக் கொண்டாள்.

“இன்னிக்கு நீங்க வெளியே கிளம்பிப்போக முடியாது...”

“என்னம்மா இது?

“நான் கல்யாணம் வேணும்ன்னு உங்ககிட்டே சொன்னேனா...?”

“நீ சொல்லணுமா என்ன...? காலாகாலத்துல நடக்க வேண்டியது... நடந்துதானே ஆகணும்...”

“சரி.... மாப்பிள்ளை யாரு...?”

“எமரால்ட் எஸ்டேட் ஓனர் பகீரதனின் பையன் சதீஷ்குமார்.”

“கான்ஸல்...”

“என்னம்மா இது, பையனைப் பார்க்காமலேயே கான்ஸல்னு சொல்றே..! பையன் ராஜாவாட்டம் இருப்பான்.”

“என்னது! ராஜாவாட்டம் இருப்பானா...?

“ஆமாம்மா...”

“அப்படீன்னா ராஜ சபைக்கு தினசரி நானும் பத்து கிலோ வெயிட் கிரீடம் வெச்சுட்டு போகணும்னு சொல்லுங்க.”

“ஏம்மா இப்படி பேசறே..?”

“அப்பா…! நீங்க உண்மையிலேயே எனக்குக் கல்யாணத்தை பண்ணி வைக்க ஆசைப்படறீங்களா?…”

“ஆமாம்மா…”

“அப்படீன்னா…”

தயக்கமாய்க் குரலை இழுத்தாள் துர்கா. உமாபதி வியப்பாய் பார்த்தார்.

“சொல்லும்மா…”

“ஒரு பத்து செகண்ட் கண்ணை மூடிக்குங்க அப்பா …”

“எதுக்கு…?”

“மூடிக்குங்கப்பா…”

“சரி…”

உமாபதி கண்களை மூடிக்கொள்ள, துர்கா தன் மார்புப் பகுதிக்குக் கையைக் கொண்டு போய் ஜாக்கெட்டின் இடைவெளியில் இரண்டு விரல்களை மட்டும் நுழைத்து ஒரு பாஸ்போர்ட் சைஸ் போட்டோவை எடுத்து, உமாபதியின் முகத்துக்கு நேராக வைத்தாள்.

“கண்ணைத் திறங்கப்பா…”

“திறந்தார்…”

‘போட்டோ பார்வைக்குக் கிடைக்க. நெற்றியில் வியப்புக்குறிகளை நட்டுக்கொண்டே கேட்டார்.

“யாரம்மா இந்தப் பையன்…?”

“பையன் இல்லேப்பா… உங்க மாப்பிள்ளை…”

“நீ என்னம்மா சொல்றே…”

“அப்பா...! சினிமாவில் வர்ற அப்பாக்களை மாதிரி நீங்க காதலுக்கு எதிராக கோஷம் போடமாட்டீங்கங்கிற ஒரு நம்பிக்கையில் இந்த போட்டோவில் இருக்கிறவரை ஆறு மாசமா காதலிச்சுட்டு வர்றேன். இவர் பேர் வல்லப். நம்ம ஜாதிக்காரர்தான். மெட்ராஸ்ல ஒரு பெரிய பிசினஸ்மேன். போன ஃப்ளவர் ஷோவுக்கு இவர் ஊட்டி வந்திருந்தபோது பொட்டானிக்கல் கார்டன்ஸ்ல எதேச்சையா பார்த்துக்கிட்டோம். அதுக்கப்புறம் ஒரு கேக் ஷாப்ல மீட் பண்ணினோம். பார்வை பேச்சாய் மாறி டெலிபோன் நெம்பர்ஸைப் பரிமாறிக்கிட்டோம். அவர் மெட்ராஸ்ல செட்டிலாகி பிசினஸ் நடத்திக்கிட்டிருந்தாலும் மாசத்துக்கு ஒரு தடவை இங்கே ஊட்டிக்கு வந்துடுவார். கூடலூர் மெயின் ரோட்ல அவருக்கு ஒரு கெஸ்ட் ஹவுஸ் இருக்கு...?”

உமாபதி மகளை வைத்த கண் வாங்காமல் பார்த்தார்.

“என்னப்பா...! அப்படி பார்க்கறீங்க?”

“நீ இவ்வளவு அட்வான்ஸ்டா இருப்பேன்னு நான் நினைச்சுக் கூடப் பார்த்தது இல்லேம்மா...”

“சரி... என்னோட காதலுக்கு சிவப்புக் கொடியா பச்சைக் கொடியா...?”

உமாபதி சிரித்தார்.

“பச்சைப்பசேல் கொடி...”

# 3

போட் ஹவுஸ்.

கோன் ஐஸ்க்ரீமை சப்பிக் கொண்டு படகுக்காகக் காத்திருந்த ஜெயாவும் ஹரியும் பைக்கை நிறுத்திவிட்டு ஓடிவரும் கிறிஸ்டோபரை வியப்பு கலந்த பார்வையுடன் பார்த்தனர்.

“ஹரி...”

“ஏண்டா இப்படி ஓடி வர்றே...?”

“வருண் இங்கே வந்தானா....?”

“என்னடா உளர்றே...? வருணை நீதானே உன் வீட்டுக்குக் கூட்டிட்டுப் போனே...?”

“வாஸ்தவந்தான்! பட்... வழியில அவன் காணாமே போயிட்டான்...”

ஜெயா பதறினாள்.

“என்னது... வருண் வழியில காணாமே போயிட்டானா எப்படி...?”

“யூரின் பாஸ் பண்ணனும், வண்டியைக் கொஞ்சம் நிறுத்துங்க அங்கிள்ன்னு சொன்னான். நானும் வண்டியை ரோட்டோரமாய் நிறுத்தினேன். வருண் யூரின் பாஸ் பண்றதுக்காக ஒரு மரத்துக்குப் பின்னாடி போனான். நான் ஒரு சிகரெட்டைப் பத்த வெச்சிட்டு வெயிட் பண்ணினேன். ஒரு நிமிஷம் ரெண்டு நிமிஷம்ன்னு டயம் போயிட்டேயிருந்தது. வருண் மரத்துக்குப் பின்னாடியிருந்து வரவேயில்லை. மரத்துக்குப் பின்னாடி போய்ப் பார்த்தேன். வருணைக் காணோம். நான் பதட்டப்பட்டு எல்லாப் பக்கமும் ஓடிப் போய் பார்த்தேன். வருண் பார்வைக்குக் கிடைக்கலை...”

ஜெயா இப்போது கண்களில் நீர் கோர்த்து பெரிய குரல் எடுத்து அழவே ஆரம்பித்து விட்டாள். ஹரியின் தோளைப் பற்றி உலுக்கினாள்.

“அய்யய்யோ...! என்னங்க உங்க ஃப்ரண்ட் இப்படி வந்து சொல்றார்...?”

“ஜெயா! கொஞ்சம் பொறுமையா இரு..! வருண் எங்கேயும் போயிருக்க மாட்டான். இந்த பொது இடத்துல நீ அழுது ஆர்பாட்டம் பண்ணிடாதே...”-ஹரி, ஜெயாவின் தோளைத் தட்டி சமாதானப்படுத்திவிட்டு கிறிஸ்டோபரிடம் திரும்பினான்.

“வருண் எந்த இடத்தில காணாமே போனான்?”

“தொட்டபெட்டா ரோட்ல... யூகலிப்ட்ஸ் ஸ்கொயர்கிட்ட”

“நல்லா தேடிப் பார்த்தியா?”

“அரை மணி நேரம் தேடிப் பார்த்து அலையோ அலைன்னு அலைஞ்சுட்டு ஒரு வேளை போட் ஹவுஸுக்கு வந்திருப்பானோங்கிற சந்தேகத்துல இங்கே ஓடோடி வர்றேன்.”

ஹரி கவலையாய் நெற்றியைத் தேய்த்தான். “வருண் காலையில் இருந்தே லேசா மூட் அவுட் ஆனமாதிரி இருந்தான். அவனுக்குத் திடீர்ன்னு என்னாச்சுன்னே தெரியலை.”

“என்னங்க...” ஹரியை உசுப்பினாள் ஜெயா. “நாம போலீஸுக்கு போய் தகவல் குடுத்துடலாம்.”

“பொறு ஜெயா! உடனே போலீஸுக்குப் போகக் கூடாது. மொதல்ல வருண் காணாமபோன இடத்துக்குப் போய்ப் பார்ப்போம். இந்த ஊட்டியில் இருக்கிற முக்கியமான நாலைஞ்சு இடங்கள்ல தேடிப் பார்த்துட்டு அதுக்கப்புறமும் அவன் கிடைக்கலைன்னா போலீஸுக்குப் போவோம்.”

“சரி...! சீக்கிரம்... கிளம்புங்க...”

ஹரி சுற்றும்முற்றும் பார்த்து சற்றுத் தொலைவில் ஒரு மரத்தடியில் நின்றிருந்த காலி ஆட்டோவைக் கையசைத்துக் கூப்பிட்டான்.

“கிறிஸ்டோபர்! நீ அந்த இடத்துக்கு முன்னாடி பைக்ல போ... நாங்க ஆட்டோவில் உன்னை ஃபாலோ பண்றோம்.”

கிறிஸ்டோபர் கவலையாய்த் தலையசைத்தான்.

# 4

ஜன்னலுக்கு வெளியே பார்வையைப் போட்டிருந்தாள் துர்கா.

சமீபத்தில் பெய்த மழையால் ஊட்டி பச்சை நிறப் பட்டாடை இன்னமும் அடர்த்தியான பச்சை நிறத்தில் சாயம் போட்ட மாதிரி இருந்தது. மலைச் சிகரங்களில் ஒட்டியிருந்த பஞ்சுத் துணுக்கு மேகங்கள் எந்தப் பக்கம் போகலாம் என்று யோசித்தபடி உட்கார்ந்திருந்தன. துர்காவுக்கு அந்தக் காட்சிகள் பழக்கப்பட்டுவிட்ட ஒன்று என்றாலும் கூட அவற்றைச் சலிக்காமல் பார்த்துக் கொண்டிருப்பதில் ஒரு சுகம்.

“துர்கா.”

அறை வாசலில் குரல் கேட்டு மெள்ளத் திரும்பினாள்.

அப்பா உமாபதி.

துர்கா ஒரு துள்ளலோடு பக்கத்தில் வந்தாள். ஆர்வமாய் கேட்டாள்.

“என்னப்பா...”

அவர் ஒரு பெருமூச்சு வெளியிட்டபடி உட்கார்ந்தார். துர்கா முகம் மாறினாள்.

“ஏம்ப்பா... ஒரு மாதிரி டல்லாயிருக்கீங்க?...”

உமாபதி சில விநாடிகள் பேசத் தயங்கிவிட்டு பின் மெல்லிய குரலில் பேச்சை ஆரம்பித்தார்.

“உன்னோட மாமாவும் சித்தப்பாவும் மெட்ராஸ் போய் வல்லப்போட அப்பாவை பார்த்துப் பேசிட்டு வந்திருக்காங்க. பையனோட காதல் விவகாரம் அப்பாவுக்கு ஆரம்பத்துல கொஞ்சம் அதிர்ச்சியா இருந்ததாம். அப்புறம் போகப்போக சகஜ நிலைமைக்கு வந்துட்டாராம்...”

“கல்யாணத்துக்கு ஓ.கே சொன்னாரா இல்லை....!

“பையன் வல்லப் பிசினஸ் விஷயமா ஹைதராபாத் வரைக்கும் போயிருக்காராம். வந்ததும் கேட்டுட்டு பதில் சொல்றதா சொல்லியிருக்கார்”

“அதாவது போன காரியம் பழம்...!”

“பழம்தான்... இருந்தாலும்...”

“என்னப்பா பேச்சை ஒரு மாதிரியா இழுக்கறீங்க?...”

உமாபதி பதில் சொல்வதற்குள் அவருடைய தம்பி தயாநிதியும், எப்போதோ காலமாகிவிட்ட அவருடைய மனைவியின் தம்பி சுதாகரும் உள்ளே வந்தார்கள்.

தயாநிதிக்கு ஐம்பது வயது இருக்கலாம். லேசாய் உமாபதியின் ஜாடை. பின் வழுக்கைத் தலை. நல்ல வெளுப்பில் வேஷ்டி சட்டை அணிந்து நெற்றிக்கு சந்தனமும் குங்குமமும் கொடுத்து இருந்தார்.

அவருக்குப் பக்கத்தில் நின்றிருந்த சுதாகருக்கு நாற்பது வயது. குள்ளமாய் குண்டாய் தொப்பை போட்டு தெரிந்தார். படியப்படிய வாரிய தலையில் ஆங்காங்கே நரை.

இரண்டு பேரும் துர்காவுக்கு இடது வலமாய் வந்து நின்றார்கள்.

தயாநிதி சொன்னார்.

“அம்மா துர்கா.... ! மெட்ராஸுக்குப் போய் வல்லப்போட அப்பாவைப் பார்த்து பேசினோம். வல்லப் ஊரில் இல்லை. ஆனா போட்டோவைப் பார்த்தோம். பையன் ஓ.கே. நம்ம ஸ்டேட்டஸுக்கு ஏத்த மாதிரியான இடம்தான். வெளியில் நாலைஞ்சு இடத்துல விசாரிச்ச போதும் அவங்க ஃபேமிலியைப் பத்தி உயர்வாயும் நல்லவிதமாகவும் சொன்னாங்க. எல்லாமே ஓ.கே. ஆனா... ஒரே ஒரு விஷயம் மட்டும்...”

“என்ன சொல்லுங்க...??”

“அது... வந்து... வந்து...” தயாநிதி குரலை இழுக்க உமாபதி குறுக்கிட்டு தொடர்ந்தார்.

“அது ஒண்ணும் இல்லைம்மா... பையனோட ஜாதகத்தை வாங்கிட்டு வந்து நம்ம குடும்ப ஜோசியர் மாதையாகிட்டே கொடுத்து காட்டியிருக்காங்க. நம்ம ஜோசியர் பார்த்துட்டு பையனோட ஜாதகம் அவ்வளவு சிலாக்கியமா இல்லேன்னு சொல்லிட்டார். அதான் உன்னோட சித்தப்பாவுக்கும் மாமாவுக்கும் பெரிய வருத்தம்...”

“என்னது ஜாதகம் சரியில்லையா?”

“ஆமாம்மா...”

“சரியில்லைன்னா... எப்படி சரியில்லை...?”

“அதை எப்படிம்மா என்னோட வாயால சொல்றது?”

துர்கா முகம் சிவந்தாள். “அப்பா...! இந்த கல்யாணம் நடக்கக் கூடாதுன்னு நினைச்சு ஏதாவது டிராமா பண்றீங்களா...?”

“சேச்சே! என்னம்மா... நீ இப்படியெல்லாம் மலிவா பேச ஆரம்பிச்சுட்டே! நீ ஒரு பையனை விரும்பியிருக்கே. அந்த பையனையே உனக்கு கல்யாணம் பண்ணி வைக்கத்தான் எனக்கும் ஆசை. ஒரு வகையில பார்த்தா உனக்கு மாப்பிள்ளை தேடற வேலையை எனக்கு மிச்சம் பண்ணிக் கொடுத்திருக்கே... நீ செலக்ட் பண்ணியிருக்கிற மாப்பிள்ளை விஷயத்துல எல்லாமே ஓ.கே. இந்த ஜாதக விவகாரம்தான் மனசுக்கு நெருடலாயிருக்கு...”

துர்கா கோபமாய் கேட்டாள்.

“அவரோட ஜாதகத்துல அப்படி என்னதான் நெருடல்...?”

இப்போது தயாநிதி குறுக்கிட்டு சொன்னார்.

“அது வந்தும்மா... மாப்பிள்ளை பையனோட ஜாதகத்துல ஏதோ களத்ர தோஷம் இருக்காம்...”

“களத்ர தோஷமா...? அப்படீன்னா...?”

மூன்று பேரும் பரஸ்பரம் தர்மசங்கடத்தோடு முகங்களை பார்த்துக் கொண்டார்கள்.

சுதாகர் மெல்ல பேச்சை ஆரம்பித்தான்.

“அதை எப்படி சொல்றதுன்னு...”

“பரவாயில்லை மாமா! சொல்லுங்க...”

“அந்த பையனுக்கு கல்யாணம்ன்னு ஒண்ணு நடந்தா ரொம்ப நாளைக்கு... அவன் உயிரோட இருக்க மாட்டானாம்...”

# 5

கிறிஸ்டோபர் பைக்கை நிறுத்திவிட்டு சொன்னான்.

“வருண் காணாமப் போனது இந்த இடம்தான் ஹரி.”

ஹரியும் ஜெயாவும் ஆட்டோவிலிருந்து கவலையான முகங்களோடு இறங்கி சுற்றும்முற்றும் பார்த்தார்கள்.

எல்லா திசைகளிலும் யூகலிப்டஸ் மரங்கள் நெருக்கியடித்துக் கொண்டு தெரிந்தன. மாலைச் சூரியன் மரங்களுக்கு பின்னால் சிக்கி இறங்கிக் கொண்டிருந்தான்.

“எந்த மரத்துக்குப் பின்னாடி வருண் போனான்?”

“அதோ... அந்த மரம்தான்.”

ஜெயா சேலைத் தலைப்பால் வாயைப் பொத்தி அழுகையை அடக்கிக் கொண்டே ஹரியோடு நடந்து மரத்துக்கு பின்பக்கம் போய் பார்த்தாள்.

மரத்துக்கு பின்பக்கம் ஒரு புல்வெளி பரப்பு குற்றுச் செடிகளோடு தெரிந்தது.

ஹரி கூப்பிட்டான்.

“கிறிஸ்டோபர்...”

“ம்...”

“வருணை எதுவரைக்கும் போய் தேடிப் பார்த்தே?...”

“கிட்டத்தட்ட இந்த ஏரியாவையே அரை மணி நேரம் அலசிப் பார்த்துட்டேன்...”

“வழியில யாரையாவது பார்த்து விசாரிச்சியா?”

“ம்...! யூகலிப்டஸ் இலைகளையும் பட்டைகளையும் பொறுக்கிக் கூடையில் போட்டுக்கிட்டிருந்த நாலைஞ்சு பெண்களை நிறுத்தி இந்தப் பக்கம் எந்தப் பையனையாவது பார்த்தீங்களான்னு கேட்டேன். அவங்க பார்க்கலைன்னு சொல்லிட்டாங்க...”

ஹரி கவலையாய் ஒரு யூகலிப்டஸ் மரத்தில் சாய்ந்தான். “அவன் எங்கே போயிருப்பான்னே தெரியலையே?”

ஜெயா அழுகையோடு இடைமறித்தாள்.

“ஒரு வேளை யாராவது கடத்திக்கிட்டுப் போயிருப்பாங்களோ...?”

கிறிஸ்டோபர் மறுத்தான்.

“நிச்சயமா அப்படி நடந்திருக்க வாய்ப்பே இல்லை ஹரி. ஏன்னா... இந்த இடத்துல நான் பைக்கை நிறுத்தியபோது இங்கே வேற யாருமே இல்லை. அட்லீஸ்ட் ஒரு வாகனமாவது என் கண்ணுல பட்டிருக்கணும். படலையே...!”

“சரி... இப்ப என்ன செய்யலாம் கிறிஸ்டோபர். நீயே சொல்லு. போலீஸ் டிபார்ட்மெண்ட். எதுவாக இருந்தாலும் உன்னோட யோசனைப்படி செய்யலாம்.”

“முறைப்படி போலீஸ்ல ஒரு புகார் குடுத்துடுவோம். தனிப்பட்ட முறையில் நாமும் தேடுவோம். பட் ஒரு விஷயம் உறுதி. வருண் ஹோட்டல் ரூம்ல இருந்தபோதும் சரி... பைக்ல என்னோடு வந்த போதும் சரி. கொஞ்சம் 'மூட் அவுட்' ஆன மாதிரி இருந்தான். அப்படி அவன் மூட் அவுட்டா இருந்ததுக்கு என்ன காரணம்ங்கிறதை மொதல்ல கண்டுபிடிக்கணும். அதைக் கண்டு பிடிச்சாலே அவன் காணாமப் போனதுக்குக் காரணம் என்னான்னு தெரிஞ்சிடும்....

# 6

துர்கா வியப்பாய் நிமிர்ந்தாள்.

ஒரு கேலிப் புன்னகை உதட்டில் ஒட்டிக் கொள்ள கேட்டாள்.

"என்ன சொன்னீங்க மாமா...? வல்லப்புக்கு கல்யாணம்ன்னு ஒண்ணு நடந்தா ரொம்ப நாளைக்கு உயிரோடு இருக்க மாட்டாரா...?

"ஆமா..."

"இதைச் சொன்னது யாரு...? நம்ம குடும்ப ஜோசியர் மாதையாவா...?

"ஆமா..."

"ரொம்ப நாளைக்குன்னா...? எவ்வளவு நாளைக்கு?"

"ஒரு ஆறு மாசத்துக்குள்ளே..."

துர்கா புன்னகைத்தாள்.

நம்ம ஜோசியர் மாதையாவுக்கு போன தீபாவளிக்குப் பணமும் துணியும் தராமே விட்டுட்டீங்க போலிருக்கு. அதான் அவரோட கோபத்தை இப்படிக் காட்டியிருக்கார். ஒரு நூறு ரூபாயைக் கையில குடுத்துட்டு ஜாதகத்தைக் காட்டியிருந்தா அவர் வல்லப்போட ஜாதகத்தைப் பார்த்துட்டு நல்லவிதமாக சொல்லியிருப்பார்.

உமாபதி குறுக்கிட்டார்.

"நீ நினைக்கிறது தப்பும்மா. ஜோசியர் மாதையா பணத்துக்கு ஆசைப்பட்டு ஜோசியம் சொல்லக்கூடியவர் இல்லை. ஜாதக பலன் எப்படியிருக்கோ அதை மறைக்காமே அப்படியே சொல்லக் கூடியவர். அவர் ஜோசியம் சொல்லி இவரைக்கும் எதுவும் பொய்யாய்ப் போனது இல்லை. அதுக்கு எத்தனையோ உதாரணங்களை சொல்ல முடியும்."

துர்கா புன்னகை மாறாமல் கேட்டாள்.

"எங்கே சொல்லுங்க பார்க்கலாம்."

"போன வருஷம் கோயமுத்தூர்ல ஒரு டெக்ஸ்டைல் மில் விலைக்கு வந்தது. அதை வாங்கலாமா வேண்டாமான்னு கேட்டேன். வேண்டாம். அந்த மில்லு கட்டின இடம் சரியில்லை. அடுத்த மூணு மாசத்துக்குள்ளே அந்த மில்லு ஒரு தீ விபத்துல சிக்கி அடியோடு எரிஞ்சு சாம்பலாயிடும்ன்னு சொன்னார்."

“அவர் சொன்ன மாதிரியே நடந்ததாக்கும்?.”

“பின்னே... ரெண்டு மாசம் கூட இல்லை. அந்த மில்லு மேல இடி விழுந்து எல்லாமே எரிஞ்சு சர்வ நாசம்... ப்ரீமியம் சரியா கட்டாததினால இன்சூரன்ஸ் தொகையும் கிடைக்காதாம்....

துர்கா இன்னமும் புன்னகை கலையாமல் கேட்டாள்”சரி... இன்னொரு உதாரணம்...?”

“உங்கம்மா உடம்புக்கு முடியாமே படுத்து கிடந்தபோது.... என்ன வைத்தியம் பண்ணினாலும் குணமாக வாய்ப்பே கிடையாது. அம்மாவோட ஆயுள் அவ்வளவுதான். வர்ற அமாவாசையைத் தாண்டமாட்டாங்கன்னு ஜோசியர் சொன்னார். ஆனா நம்ம ஃபேமிலி டாக்டர் ஜோசியர் சொன்னதைக் கிண்டல் பண்ணினார். அம்மாவைப் பிழைக்க வைச்சுக் காட்றேன்னு பந்தயம் போட்டார். கடையில் ஜெயிச்சது ஜோசியர்தான். அவர் சொன்ன மாதிரியே உங்கம்மா அடுத்த அமாவாசையன்னிக்குப் போய் சேர்ந்துட்டா...

“உதாரணங்கள் இன்னும் ஸ்டாக் இருக்கா? இல்ல தீர்ந்து போச்சா....?

“என்னம்மா....! நான் சொன்னதுல உனக்கு நம்பிக்கையில்லையா...?”

“அப்பா... ! இந்த விஞ்ஞான உலகத்துல ஜோசியம் ஜாதகம் இதெல்லாம் வெறும் ஹம்பக். நான் நம்பத் தயாராயில்லை.

“அப்டீன்னா... ஜோசியர் சொன்ன மாதிரி மில்லு எரிஞ்சதும் உங்கம்மா செத்ததும் பொய்யா?

“அப்பா! நம்ம ஜோசியர் உங்க ஜாதகப்படி பார்த்துப் பலன்கள் சொல்லலை. ஏதோ சொல்லி வெப்போமேன்னு சொல்லியிருக்கார். அது காக்கா உட்கார பனம்பழம் விழுந்த கதையா நடந்திருக்கு அவ்வளவுதான்.”

உமாபதி லேசாய்க் கோபப்பட்டார்.

“அம்மா! இதையெல்லாம் விளையாட்டா நினைக்காதே..., ஜோதிடம், ஜாதகம் இதெல்லாம் ஒரு சயின்ஸ். சரியா பார்த்து சொல்றவங்க சொன்னா பலிக்கும். நடக்கும். நம்ம ஜோசியர் மாதையா ஜோதிட ஜாதகக் கலையை கரைச்சுக் குடித்தவர். அவர் சொன்னது இதுவரைக்கும் பொய்யாய்ப் போனதில்லை...”

“அது பொய்யாப் போகும்.”

“எது...?”

“வல்லப் என்னைக் கல்யாணம் பண்ணிட்டா ஆறு மாசத்துக்குள்ளே அவர் செத்துப் போயிடுவார்ன்னு ஜோசியர் சொன்னது பொய்யாப் போகும்...”

“அப்படின்னா நீ அந்தப் பையனை...?”

“கல்யாணம் பண்ணிக்கத்தான் போறேன்....”

“துர்கா! பெரியவங்க நாங்க சொல்றதை நீ கேட்கணும். பிடிவாதம் பிடிச்சு உன் தலையில நீயே மண்ணை அள்ளிப் போட்டுக்காதே....”

துர்கா சிரித்தாள்.

“நான் என்னோட தலையில மண்ணைப் போட்டுக்க மாட்டேம்பா. அட்சதையைத்தான் போட்டுக்குவேன். இந்த ஜாதகமும் ஜோதிடம் எல்லாத்தையும் ஒரு பக்கமா மூட்டைக்கட்டி வெச்சுட்டு என்னோட கல்யாணத்துக்கு வேண்டிய ஏற்பாடுகளைக் கவனிங்கப்பா!”

“ஆவேசப்படாதேம்மா... இதுல யோசனை பண்ணவேண்டியது நிறைய இருக்கு...”

“அப்பா! நீங்க தாராளமா யோசனை பண்ணுங்க. யோசனை பண்ண எவ்வளவு நேரம்ன்னாலும் எடுத்துக்குங்க.... ஆனா அந்த யோசனையின் முடிவு கடைசியில் எனக்கு சாதகமாகத்தான் இருக்கணும்... அதாவது எனக்கும் வல்லபுக்கும் கல்யாணத்தை நடத்துற முடிவுக்குத்தான் நீங்க வரணும்....”

உமாபதி பெருமூச்சோடு மகளை ஏறிட்டுக் குரல் தழுதழுத்தார்.

“அம்மா... துர்கா...! கல்யாணம்ங்றது ஒரு நாளோடு முடிஞ்சு போயிடற தாலி கட்டற விஷயம் இல்லை. அதுக்கப்புறம்தான் உன்னோட வாழ்க்கையே தொடங்குது. எடுத்தேன் கவிழ்த்தேன்னு எந்தக் காரியத்தையும் செய்யக் கூடாது.”

“அப்பா... உங்க நிலைமை எனக்குப் புரியுது. ஆனா, ஜாதகம் சரியில்லைங்கிற காரணத்துக்காக வல்லபை மறந்துட்டு வேற ஒருத்தருக்கு நான் கழுத்தை நீட்ட முடியாதே..”

“வல்லப்கிட்டே சொல்லிப் பாரம்மா...”

“என்னை மாதிரியேதான் அவருக்கும் அந்த ஜோதிடம் ஜாதகத்துல நம்பிக்கை கிடையாது. இப்படி ஒரு விஷயத்தை அவர்கிட்ட சொன்னா, நாள் பூராவும் சிரிப்பார்.”

தயாநிதியும் சுதாகரும் ஏதோ சொல்லவர துர்கா அவர்களைக் கையமர்த்தினாள்.

“மாமா..! சித்தப்பா...! நீங்களும் சரி அப்பாவும் சரி என்ன சொன்னாலும்... நான் வல்லபைத் தவிர வேற யாரையும் கல்யாணம் பண்ணிக்க மாட்டேன். இப்படி ஆளுக்கு ஆள் யோசனை சொல்றதை விட்டுட்டுக் கல்யாணத்துக்கு வேண்டிய ஏற்பாடுகளை கவனிங்க போங்க...”

துர்காவின் குரலில் ஸ்டீல்தனமாய் உறுதி தொனிக்க உமாபதி, தயாநிதி, சுதாகர் மூன்று பேரும் இருள் படிந்த முகங்களோடு ஒருத்தரையொருத்தர் பார்த்துக் கொண்டார்கள்.

# 7

போலீஸ் ஸ்டேஷன்.

ஜெயா, ஹரி, கிறிஸ்டோபர் மூன்று பேரும் இன்ஸ்பெக்டர் நஞ்சுண்டாவுக்கு முன்பாய் மோவாய்களைத் தாங்கியபடி உட்கார்ந்திருக்க அவர் வயர்லெஸ் செட்டிங் பேசிவிட்டு முறுக்கிய மீசைக்குக் கீழே புன்னகைத்தார்.

“இந்த ஹில்ஸ் ஏரியாவில் இருக்கிற எல்லா போலீஸ் ஸ்டேஷன்களுக்கும் தகவல் கொடுத்திருக்கேன். மிஸ்டர் கிறிஸ்டோபர் எங்க போலீஸ் டிபார்ட்மெண்ட். பையன் வருண் அவர்கிட்டயிருந்து காணாமே போயிருக்கிற விஷயம் எங்களைப் பொறுத்தவரைக்கும் மிகப் பெரிய விஷயம்... எப்படியும் அடுத்த ஒரு மணி நேரத்துக்குள்ளே பையனை ட்ரேஸ் அவுட் பண்ணிடுவோம்... பையனோட போட்டோ ஏதாவது இருக்கா...?”

“கைவசம் இல்ல சார்...”

“போட்டோ இருந்ததுன்னா பையனை இன்னமும் சுலபமா கண்டுபிடிக்க முடியும்... உங்களுக்கு சொந்த ஊர் மெட்ராஸ்தானே...?”

“ஆமா... சார்....”

“பிசினஸ்தான்...! ஃபர்னீச்சர்ஸ் மேனுபாக்சரிங் பண்றோம்...”

“ஊட்டிக்கு நீங்க வர்றது இதுதான் முதல் தடவையா?”

“இல்ல சார்.. நான் நிறைய தடவை வந்திருக்கேன். என்னோட ஒய்ஃப் ஜெயாவுக்கும் வருணுக்கும் இது ஃபர்ஸ்ட் டைம்...”

“வருண் இன்னிக்கு மத்தியானத்திலிருந்து மூட் அவுட்டான மாதிரி இருந்ததா சொன்னீங்களே... அதுக்கான காரணத்தை கெஸ் பண்ணீங்களா...?”

“இல்லை. பட் ஓர் அனுமானம் பண்ணி வெச்சோம்....”

“என்ன...?”

“அவன் கொஞ்சம் ஹோம்சிக். ஊர்ல இருக்கிற தாத்தா பாட்டிகிட்டே ரொம்பவும் ஒட்டுதல், ஊர் பக்கம் வந்து அப்படி இருக்கானோன்னு கெஸ் பண்ணினோம்....”

இன்னிக்கு அவன்கிட்டே கோபமா நடந்துகிட்டீங்களா...?

“இல்லையே... ! மத்தியானம் லஞ்ச் சாப்பிடற வரைக்கும் சந்தோஷமா சிரிச்சுப் பேசிக்கிட்டு இருந்தான். கடி ஜோக் நிறைய சொன்னான். ஹோட்டலிலிருந்து லாட்ஜ் திரும்பும் போதே ஒரு மாதிரியாயிட்டான்....”

“எந்த ஹோட்டலுக்குப் போனீங்க...?”

“ஹோட்டல் ப்ளுமவுண்டன்”

“ஹோலி க்ராஸ் சர்ச் ரோட்ல இருக்கே அந்த ஹோட்டலா...?”

“அதேதான்...”

“ஹோட்டல்ல அவனோட மனசு புண்படற மாதிரி ஏதாவது பேசிட்டீங்களா....”

“இல்லையே....”

“ஹோட்டலுக்கு நீங்க மூணு பேர் மட்டும்தானே போனீங்க...?”

“ஆமா...”

“அந்த ஹோட்டல்ல வேற யாரையாவது பார்த்தீங்களா...?”

“இல்லையே...”

ஹரி சொல்லி தலையாட்டிக் கொண்டிருக்கும்போதே ஜெயா குறுக்கிட்டாள்.

“இன்ஸ்பெக்டர்....”

“என்னம்மா...?”

“இப்பத்தான் எனக்கு ஒரு விஷயம் ஞாபகத்துக்கு வருது. வருண் ஹோட்டல்ல சாப்பிட்டுகிட்டு இருந்தப்ப பக்கத்து டேபிளில் சர்வ் பண்ணிட்டிருந்த ஒரு பேரரையே வெச்ச கண்ணு வாங்காம பார்த்துட்டிருந்தான். நானும் கூட ஒரு தடவை வருண்கிட்டே ஏண்டா அந்த பேரரையே உத்து உத்து பார்த்துகிட்டு இருக்கே... என்ன விஷயம்ன்னு கேட்டேன். ஒண்ணுமில்லைன்னுட்டான். அதுக்கப்புறம் வாஷ் பேசின்ல கை கழுவப் போகும்போது அந்த பேரர்கிட்டே பேசிட்டிருந்தான்.”

“பேரர்கிட்ட என்ன பேசிட்டிருந்தான்...?”

“தெரியலை...”

“நீங்க கேட்கலையா...”

“என்ன சொன்னான்!”

“டாய்லட் எங்கே இருக்குன்னு கேட்டானாம்?”

“ஹோட்டல்ல அவன் டாய்லட் போனானா?”

“இல்லையே.”

“டாய்லட் எங்கே இருக்குன்னு கேட்டுட்டு அவன் ஏன் டாய்லட்டுக்குப் போகலை....”

“நீங்க கேட்கும்போதுதான் எங்களுக்கே இப்ப சந்தேகம் வருது சார்....”

“இன்ஸ்பெக்டர் நஞ்சுண்டா யோசனையில் சில விநாடிகளைக் கழித்துவிட்டு ஹரியை ஏறிட்டபடி கேட்டார்.

“வருண் பேசிட்டிருந்த அந்த பேரர் யார்ன்னு உங்களுக்கு அடையாளம் தெரியுமா...?

“தெரியும்”

“வாங்க போய் பேசிப் பார்க்கலாம்.”

கிளம்பினார்கள்.

# 8

கதவு தட்டப்படும் சத்தம் கேட்டு கட்டிலில் சாய்ந்து டி.வி பார்த்துக் கொண்டிருந்த துர்க்கா டி.வி-யை அணைத்துவிட்டு எழுந்து போய்க் கதவைத் திறந்தாள்.

கதவுக்கு வெளியே அப்பா உமாபதி அவருக்குப் பின்னால் ஜோசியர் மாதையா.

உமாபதி ஓர் அசட்டு சிரிப்போடு உள்ளே வந்தார். “என்னம்மா டி.வி. பார்த்துட்டிருந்தியா....?”

“ம்...”

ஜோசியர் உள்ளே வந்து பவ்யமாக ஒரு நமஸ்காரம் சொல்ல துர்கா புன்னகைத்தாள்.

“என்ன ஜோசியரே! எனக்கு வேப்பிலை அடிக்க வந்தீங்களா...?”

“அம்மா...! ஜோதிடம் ஓர் அபூர்வமான கலை. அது மகா யோகிகளாலும், சித்தர்களாலும் எழுதப்பட்ட மனித வாழ்க்கையின் கணிதம்.”

துர்கா கையமர்த்தினாள்.”இந்தக் கதாகாலட்சேபம் எல்லாம் என்கிட்ட வேண்டாம். இங்கே எதுக்காக வந்தீங்களோ அந்த விஷயத்தைச் சொல்லிட்டுப் போயிட்டே இருங்க. நான் டி.வியில் ஒரு முக்கியமான ப்ரோக்ராம் பார்க்கணும்...”

“அது.. வந்தும்மா... உனக்குப் பார்த்திருக்கிற மாப்பிள்ளை வல்லபோட ஜாதகம் அவ்வளவா சரியில்லை.”

“எவ்வளவு சரியில்லை! பத்து கிலோவா பதினைஞ்சு கிலோவா...?”

“அம்மா! இது கேலி பேசக்கூடிய விஷயம் இல்லை. அந்த வல்லப்போட ஜாதகத்துல களத்ர தோஷம் இருக்கு. வல்லப் எந்தப் பொண்ணுக்குத் தாலியைக் கட்டினாலும் சரி அந்தப் பெண்ணுக்கு மாங்கல்ய பாக்கியத்தைக் கொடுக்க மாட்டார். கொஞ்சநாள்தான் அந்த மணவாழ்க்கை.”

துர்கா சிரித்தாள்.

“நேத்து பூராவும் அப்பா, சித்தப்பா, மாமா எல்லோரும் சொல்லிப் பார்த்துட்டாங்க... இப்ப... நீங்க...! என்ன சொல்லணுமோ சொல்லிட்டுப் போங்க....”

“அம்மா...! இந்தக் கல்யாணம் வேண்டாம். வேற நல்ல வரனா பார்த்து....”

“இதோ பாருங்க ஜோசியரே! நானும் வல்லபும் உயிர்க்குயிரா ஒருத்தரையொருத்தர் காதலிக்கிறோம். அவர் பெரியவங்களா பார்த்து முடிவு பண்ணிய மாப்பிள்ளை இல்லை. அந்தக் கடவுளாப் பார்த்து எனக்கு முடிச்சு போட்ட மாப்பிள்ளை. எனக்குக் கல்யாணம்ன்னு ஒண்ணு நடந்தா அது வல்லப்போடுதான் நடக்கும். நீங்க சொல்ற மாதிரி அவருக்கு ஆயுசு நாள் கணக்கில் இல்லை. வருஷக் கணக்கில். நானும் அவரும் 100 வயசு வரை வாழ்ந்து காட்றோம். பார்க்கறீங்களா....?”

“அவரோட ஜாதகப்படி அது முடியாதம்மா. எல்லா கிரகங்களுமே அவரோட ஜாதகத்துல மோசமா... வீக்கா இருக்கு...”

“கிரகங்கள் வீக்கா இருக்கா?”

“ஆமாம்மா....”

“ஒரு நல்ல டாக்டர்கிட்ட கூட்டிட்டுப் போய் காட்டி மாத்திரையும் டானிக்கும் வாங்கிக் கொடுத்து உடம்பைத் தேற்ற வேண்டியதுதானே...?”

“இப்படியெல்லாம் கேலி பேசக் கூடாதம்மா. கல்யணம்ங்கிறது ஆயிரம் காலத்துப் பயிர். ஜாதகத்துல எல்லாப் பொருத்தமும் இருக்கான்னு பார்த்துட்டுத்தான் கல்யாணம் பண்ணனும்.”

“அய்யா ஜோசியரே...! போய்ட்டு வர்றீங்களா...? நான் டி.வி-யில ஃபேஷன் ஷோ பார்க்கணும்.”

துர்கா சொல்லிக்கொண்டே தன் கையில் வைத்து இருந்த ரிமோட் கண்ட்ரோலை உயிர்ப்பிக்க டி.வி. திரையில் லிரில் சோப்பில் அந்தப் பெண் துள்ளித் துள்ளிக் குதித்தாள்.

“அம்மா.... நான் சொல்றதுல உனக்கு நம்பிக்கையில்லேன்னா வேற ஜோசியர் சில பேர்கிட்ட காட்டி...”

“அவசியமே இல்லை...”டி.வியின் வால்யூமை அதிகரித்தாள்.

உமாபதியும் ஜோசியரும் சில விநாடிகள் வரை அங்கேயே நின்று கொண்டிருந்து விட்டு பின்னர் மௌனமாய் வெளியே வந்தார்கள்.

உமாபதி புலம்பினார்.

“இப்படி அடம் பிடிக்கிறாளே?”

“என்ன சொன்னாலும் கேட்கக்கூடிய நிலைமையில் உங்க பொண்ணு துர்கா இல்லை...”

“என்ன பண்ணலாம் ஜோசியரே?”

“எனக்கும் ஒண்ணும் புரியலை… பேசாமே கடவுள் மேல பாரத்தை போட்டுட்டு கல்யாணத்தைப் பண்ணி வெச்சுடுங்க. அதுக்கப்புறம் துர்காவோட ப்ராப்தம்.”

“இந்த களத்ர தோஷத்துக்கு ஏதாவது பரிகாரம் இருக்கா…”

“பரிகாரம் இருந்தா முதலிலேயே சொல்லியிருக்க மாட்டேனா…? இருந்தாலும் உங்க மனத் திருப்திக்காக ஒரு பரிகாரம் சொல்லுகிறேன்.”

“சொல்லுங்க…”

“கூட்டு எண் ஒன்பது வர்ற ஒரு தேதியில் வீட்ல வரலட்சுமி பூஜை வெச்சு ஒன்பது சுமங்கலிகளுக்குப் புடவை, ஜாக்கெட், மஞ்சள், குங்குமம் கொடுத்து அவங்க கால்ல விழுந்து உங்க பொண்ணு ஆசிர்வாதம் வாங்கணும். இது ஒரு பரிகாரம். இந்த பரிகாரத்தை முகம் சுளிக்காம சந்தோஷமா பண்ணணும்…”

“பண்ணிடலாம் ஜோசியர் அய்யா. ஒன்பது சுமங்கலிகளுக்குப் பட்டுப் புடவையாவே எடுத்துக் கொடுத்துடலாம். எம் பொண்ணு கழுத்துல தாலி நிலைச்சா சரிதான்.”

ஈரமாகிவிட்ட கண்களைத் தோளில் போட்டிருந்த மேல் துண்டால் துடைத்து விட்டுக் கொண்டார் உமாபதி.

# 9

ஹோட்டல் ப்ளு மவுண்டன்.

“அதோ... அந்த பேரர்தான்” ஹரி கைகாட்ட இன்ஸ்பெக்டர் நஞ்சுண்டா கஸ்டமர் ஒருவரிடம் சிரித்துப் பேசிக் கொண்டிருந்த அந்த பேரரை நோக்கிப் போனார்.

பேரருக்கு நாற்பது வயது இருக்கலாம். புஷ்டியான இரட்டை நாடி உடம்பு. இன்ஸ்பெக்டரைப் பார்வையில் வாங்கியதும் மிரண்டான்.

பக்கத்தில் நெருங்கிய நஞ்சுண்டா தன் கையில் வைத்திருந்த லாட்டியால் அவனுடைய தோளைத் தொட்டபடி கேட்டார்.

“உம் பேர் என்ன...?”

“க... க... கதிர்வேலு ஸார்...”

“இவங்க யார்ன்னு தெரியுதா?” ஹரியையும் ஜெயாவையும் சுட்டிக் காட்டியபடி கேட்டார்.

பேரர் கதிர்வேலு அவர்களை உற்றுப்பார்த்துவிட்டுத் தயங்கித் தயங்கி மெல்லிய குரலில் சொன்னான்.

“இவங்க மத்தியானம் இந்த ஹோட்டலுக்கு லஞ்ச் சாப்பிட வந்தாங்க சார்...”

“இவங்க கூட ஒரு பையனும் வந்தான். ஞாபகம் இருக்கா...?”

“இ... இருக்கு சார்....”

“அந்தப் பையன் இப்போ எங்கே?”

நஞ்சுண்டா தொடர்ந்தார். “என்ன அப்படிப் பார்க்கிறே...? பையன் இப்போ உன்னோட கஸ்டடியில்தானே இருக்கான்....”

“சார்... என்ன சார் இது அபாண்டம்? அந்தப் பையனைப் பத்தி எனக்கென்ன சார் தெரியும்....?”

“சரி.. அந்தப் பையன் இன்னிக்கு மத்தியானம் இந்த ஹோட்டலுக்கு வந்தபோது உன்கூட பேசியிருக்கான் இல்லையா....?”

“ஆ... ஆமா சார்...”

“என்ன பேசினான்.....?”

“சார்.. அது வந்து....”

“சொல்லு....”

“அது எனக்கே ஒரு குழப்பமான விஷயம் சார்.”

“குழப்பமான விஷயமா?”

“ஆமா... சார்... அந்தப் பையன் சாப்பிட்டுக் கையைக் கழுவறதுக்காக வாஷ்பேசின்கிட்டே வந்தான். வந்தவன் கையைக் கழுவாமே என்னையே உத்து பார்த்துட்டிருந்தான். ‘என்ன தம்பி பார்க்கிறே’ன்னு கேட்டேன். அதுக்கு அவன் பக்கத்துல வந்து ‘உன்னோட பேர் கதிர்வேலுதானே’ன்னு கேட்டான். அதுக்கு நான் ஆமான்னு தலையாட்டிட்டு ‘என்னோட பேர் உனக்கு எப்படித் தெரியும்’ன்னு கேட்டேன். அதுக்கு அவன் எந்த பதிலும் சொல்லாமே போயிட்டான்.”

இன்ஸ்பெக்டர் நஞ்சுண்டா ஹரியை வியப்பாய் பார்த்தார்.

“என்ன மிஸ்டர் ஹரி.. பேரர் கதிர்வேலுவ வருணுக்கு எப்படி தெரியும்...?”

“ஒண்ணும் புரியலை சார். கதிர்வேலுவை இதுக்கு முந்தி நாங்க பார்த்ததே இல்லை...” சொன்ன ஹரி கதிர்வேலுவை ஏறிட்டான்.

“உனக்கு சொந்த ஊர் எது...?”

“இதே ஊட்டிதான் சார். பொறந்தது... வளர்ந்தது... கல்யாணம் பண்ணிக்கிட்டது எல்லாமே இந்த ஊர்தான்.”

“நீ எப்பவாவது மெட்ராஸ் வந்திருக்கியா?”

“இல்ல சார்... ஊட்டியை விட்டு வெளியே போறதே கிடையாது. ரெண்டு மூணு தடவை மேட்டுப்பாளையம் போயிருக்கேன். அவ்வளவுதான்.”

ஹரி திகைப்பாய் இன்ஸ்பெக்டரைப் பார்த்தான். “சார்... வருண் ஊட்டிக்கு வர்றது இதுதான் முதல் தடவை. பேரர் கதிர்வேலுவை அவனுக்குத் தெரிஞ்சிருக்க வாய்ப்பே இல்லை. இந்த பேரர் பிரச்னையைத் திசை திருப்பறதுக்காக எதையோ சொல்லிருக்கான்னு நினைக்கிறேன்...”

நஞ்சுண்டா பேரரை ஒரு சந்தேகப் பார்வை பார்க்க அவன் பதறிப்போய் கும்பிட்டான்.

“சார்... இப்ப நான் சொன்னதெல்லாம் சத்தியமான வார்த்தை. அந்தப் பையன் என்னை உத்துஉத்துப் பார்த்ததும் உன்னோட பேர் கதிர்வேலுதானேன்னு கேட்டதும் உண்மை...”

ஹரி சீறினான். “அப்படி அவன் கேட்டிருந்தா உடனடியா நீ என்ன பண்ணியிருக்கணும். என்கிட்ட வந்து என்ன சார் பையன் இப்படி சொல்றான்.... என்னோட பேர் அவனுக்கு எப்படி தெரிஞ்சுதுன்னு நீ கேட்டிருக்கணும்...”

“அந்த சமயத்துல எனக்கு எதுவுமே தோணலை சார். ரெஸ்ட்டாரெண்ட்ல கூட்டமா வேறு இருந்தது. கஸ்டமர்ஸை கவனிக்காமே உங்ககிட்ட வந்து பேசிட்டிருந்தா முதலாளி சத்தம் போடுவார்ன்னு நினைச்சு பிரச்சனையை அதோடு விட்டுட்டேன்.”

நஞ்சுண்டா தன் இடது கை விரல்களால் மோவாயைத் தடவிக் கொண்டே கதிர்வேலை கீழ்ப்பார்வை பார்த்தார்.

“உன்னை ஸ்டேஷனுக்குக் கூட்டிப் போனாதான் உண்மையைப் பேசுவே போலிருக்கு...”

“ச... சார்... என்னை... நம்புங்க சார். நான் சொன்னதெல்லாம் உண்மை சார்...” பேரர் கதிர்வேலு கைகளைக் கூப்பிக் கதறிக் கொண்டிருக்கும்போதே --

போலீஸ் ஜீப் டிரைவர் வேகவேகமாய் ரெஸ்டாரெண்ட்டுக்குள் வந்தார்.

“சார்...”

“என்ன...?”

“வயர்லெஸ்ல உங்களுக்காக ஒரு மேசேஜ் காத்திட்டிருக்கு சார்...”

நஞ்சிண்டா வேகவேகமாய் ரெஸ்டாரெண்டை விட்டு வெளியேறி ஒரு மரத்துக்குக் கீழே நின்றிருந்த ஜீப்புக்குப் போனார்.

ஜீப்பில் பொருத்தப்பட்டிருந்த வயர்லெஸ் மழை பெய்வது போன்ற இரைச்சலுக்கு நடுவே பேசிக் கொண்டிருந்தது.

“வாண்ட் ஆ◌ஃப் இன்ஸ்பெக்டர் நஞ்சுண்டா... வாண்ட் ஆ◌ஃப் இன்ஸ்பெக்டர் நஞ்சுண்டா...”

வயர்லெஸ் செட்டிலிருந்த ஸ்பீக்கரை எடுத்து குரல் கொடுத்தார் நஞ்சுண்டா.

“ஹோல்டிங்...”

“இது ஊட்டி கண்ட்ரோல் ரூம்.”

“சொல்லுங்கள்...”

“வருண் என்கிற எட்டு வயது பையன் காணாமல் போனது சம்பந்தமா ஒரு தகவல் கிடைத்துள்ளது.”

“என்ன தகவல்...?”

“தொட்டபெட்டா ரோட்டிலிருந்து இரண்டாவது கிலோமீட்டரில் உள்ள மரப் பால அருவிக்குப் பக்கத்தில் ஒரு சிறுவனின் உடல் கிடப்பதாகத் தகவல். நீங்கள் கொடுத்த அடையாளங்களோடு அந்த சிறுவன் ஓரளவுக்கு ஒத்துப் போகிறான். நீங்கள் உடனே அந்த ஸ்பாட்டுக்கு சம்பந்தப்பட்டவர்களை அழைத்துக் கொண்டு போய்ப் பார்த்து அது நீங்கள் தேடிக் கொண்டிருக்கும் சிறுவன்தானா என்பதை உறுதி செய்து கோள்ளுங்கள். இந்த செய்தி நீலகிரி மாவட்டத்தில் உள்ள எல்லா போலீஸ் ஸ்டேஷன்களுக்கும் சொல்லப்பட்டுவிட்டது. ”

“இதோ...! நீங்கள் சொன்ன மரப் பால அருவி ஸ்பாட்டுக்கு புறப்பட்டு விட்டோம். ”

நஞ்சுண்டா சொல்லி வயர்லெஸ்ஸை அணைத்தார்.

# 10

டெலிபோன் கூப்பிட்டது.

வெளியே கிளம்பிப் போகத் தயாராக இருந்த துர்கா சல்வார்கமீஸின் துப்பட்டாவை சரிபடுத்திக் கொண்டே போய் ரீஸிவரை எடுத்து காதுக்கு ஒட்ட வைத்தாள்.

“ஹலோ...”

மறுமுனையில் குரல் சிரித்தது.”

“நான் வல்லப்...”

“என்ன ஒரு ப்ளெஸண்ட் சர்ப்ரைஸ்! எப்போ ஊட்டி வந்தீங்க...?”

“கரெக்டா சொல்லணுமா...?”

“ஆமா...”

“பத்து நிமிஷமாச்சு.”

“இப்ப எங்கேயிருந்து பேசிட்டிருங்கீங்க?”

“ஹோட்டல் டான்...”

“ஊட்டிக்கு வந்துட்டு எதுக்காக ஹோட்டல்ல போய் தங்கணும்...? நேரா நம்ம வீட்டுக்கு வரவேண்டியதுதானே?”

வல்லப் சிரித்தான்.

“ஸாரி மேடம்...! அது இன்னமும் வருங்கால மாமனார் வீடுதான். முறைப்படி மாமனார் வீடு ஆகட்டும். அப்புறம் உரிமையோடு உன் வீட்டு போர்டிகோவுக்கே காரை கொண்டு வர்றேன்.”

“கல்யாண தேதிதான் ஃபிக்ஸ் பண்ணியாச்சே... அப்புறம் என்ன...?”

“அதுக்கு இன்னும் ஒரு மாசம் இருக்கே.?”

“சரி... வருங்கால மாமனார் வீட்டுக்கு ஒரு ஃபார்மல் விசிட்கூட அடிக்கக் கூடாதா என்ன....?”

"இப்பவே வர்றேன். பொழுது போகாமே லேடீஸ் க்ளப்புக்கு புறப்பட்டுப் போலாம்னு இருந்தேன். ஒரு ரெண்டு நிமிஷம் கழிச்சு நீங்க போன் பண்ணியிருந்தா நான் உங்களுக்குக் கிடைச்சிருக்க மாட்டேன். சரியான நேரத்துக்கு போன் பண்ணிட்டீங்க..."

"இதிலிருந்து ஒண்ணு தெரியுது."

"என்ன...."

"நான் அதிர்ஷ்டக்காரின்னு..."

"உங்களை கல்யாணம் பண்ணிக்கப்போற நான்தான் அதிஷ்டசாலி."

"சரி, போன்லயே பேசிட்டிருக்கிறதா உத்தேசமா? உடனே புறப்பட்டு வா. டான் ஹோட்டல் ரிசப்ஷன் ஹால்ல உனக்காகக் காத்திட்டிருப்பேன்..."

"இதோ கிளம்பிட்டேன்..."

துர்கா ரிஸீவரை வைத்துவிட்டுத் தன் அறையைக் கடந்து ஹாலுக்கு வர, சோபாவில் சாய்ந்து பேப்பர் படித்துக் கொண்டிருந்த உமாபதி பார்வைக்குக் கிடைத்தார்.

"அப்பா..."

"என்னம்மா...?" ரீடிங் கிளாஸ் அணிந்த முகத்தோடு நிமிர்ந்தார்.

"அவர் வந்திருக்கார்..."

"யாரு....?"

"வல்லப்..."

உமாபதி லேசாய் முகம் மாறி "எப்போ?" என்றார்.

"இப்பத்தான்! ஹோட்டல் டான்ல ஹால்ட் பண்ணியிருக்கார். நான் போய்ப் பார்த்துட்டு வந்துடறேன்..."

"அவரையே இங்கே வரச் சொல்ல வேண்டியதுதானே...?"

"சாயந்தரம் வர்றாராம். போன் பண்ணி என்னைக் கூப்பிட்டார். போய்ட்டு வந்துடறேன்...

உமாபதி மறுபடியும் வாயைத் திறந்து பேசும் முன் துர்கா போர்டிகோவுக்கு போய் மாருதி 'ஜென்'னில் திணிந்து கொண்டிருந்தாள்.

கார் கிளம்பி வாட்ச்மேன் திறந்து வைத்த கேட் வழியாக ஓர் அம்பு மாதிரி பாய்ந்து ரோட்டின் போக்குவரத்தில் கலந்தது.

ஊட்டியின் ஏற்றஇறக்க ரோடுகளில் சில நிமிஷப் பயணம்.

ஹோட்டல் டான் மலைத் தாவரங்களுக்கு மத்தியில் நான்கு அடுக்கு மாடிகளோடு குளிர்ச்சியாய் வந்தது.

நிசப்தமான ஹோட்டல். பணக்காரர்களின் கறுப்புப் பணத்தை கரைக்கவே கட்டப்பட்ட ஹோட்டல் அது. பராமரிக்கப்பட்ட புல்வெளிகளுக்கு மத்தியில் கான்க்ரீட் பாதை அரைவட்டம் அடித்துக் கொண்டு போக காரை அதில் விரட்டி போர்டிகோவில் கொண்டு போய் நிறுத்தினாள் துர்கா.

கதவைத் திறந்துகொண்டு கீழே இறங்க, கிரே நிற ஸ்வெட்டரும் ஒயிட் பேண்ட்டும் அணிந்த வல்லப் எதிரில் வந்து நின்று "வெல்கம்" என்று சொல்லி மஞ்சள் ரோஜா ஒன்றை நீட்டினான்.

"தாங்க்ஸ்" சொல்லி வாங்கிக்கொண்ட துர்கா வல்லப்போடு உள்ளே போனாள்.

வல்லப் கேட்டான்.

"கல்யாண ஏற்பாடுகள் எப்படி போயிட்டிருக்கு துர்கா....?"

"ஃபைன்...! ரெண்டு செட் நகை பண்ணியாச்சு. வேண்டிய பட்டுப்புடவை எடுத்தாச்சு. வெட்டிங் கார்ட்ஸ் பிரிண்ட் பண்ணியாச்சு... அங்கே நிலவரம் எப்படி....?"

"ஏதோ போய்ட்டிருக்கு..."

"என்ன பேச்சுல சலிப்பு..?"

"சலிப்பு எனக்கு இல்லை துர்கா... என்னோட அப்பாவுக்கும் அம்மாவுக்கும்..! உங்க ஜோசியர் என்னோட ஜாதகத்தைப் பத்தி உங்ககிட்ட சொன்னதை நீங்க மறைச்சு வெச்சிருக்கணும். என்னோட பேரண்ட்ஸ்கிட்ட சொல்லியிருக்கக்கூடாது."

"நான் சொல்ல வேண்டாம்ன்னுதான் எங்கப்பாகிட்ட சொன்னேன். அவர் கேட்கலை. இது மாதிரியான விஷயங்களை மறைச்சு வெக்காமே வெளிப்படையா பேசிடறது நல்லதுன்னு சொன்னார்..."

இருவரும் ரிசப்ஷன் ஹாலின் மையத்தில் போடப் பட்டிருந்த சோபாவுக்கு வந்தார்கள். பக்கம் பக்கமாய் சாய்ந்து உட்கார்ந்தார்கள்.

"துர்கா...."

"ம்..."

"நான் இப்போ எதுக்கு ஊட்டி புறப்பட்டு வந்தேன் தெரியுமா...?"

"எதுக்கு...?"

“உன்னப் பார்த்துக் கொஞ்சம் பர்சனலா பேசிட்டு போகத்தான்...”

துர்காவின் அழகான சந்தனநிற நெற்றியில் குழப்ப வரிகள் தோன்றி மறைந்தன.

“ஆறு மாசமா நாம் காதலிச்சுட்டு வர்றோம். இனியும் நமக்குள்ளே என்ன பர்சனல் மேட்டர்ஸ்...?”

“துர்கா...! உனக்கும் எனக்கும் நடக்கப்போகிற கல்யாணத்தில் உன்னோட அப்பாவுக்கும் இஷ்டமில்லை. என்னோட வீட்டு சைடிலும் அவ்வளவா சந்தோஷம் இல்லை. கல்யாணம் நடந்தா என்னோட உயிருக்கு ஜாதக ரீதியா ஆபத்து வரும்ன்னு ஜோசியர் சொன்னது எங்கே பலிச்சிடுமோன்னு எல்லாரும் பயப்படறாங்க... இப்படியொரு ரிஸ்க் இருக்கும்போது நாம கல்யாணம் பண்ணிக்கிறது சரிதானா....?”

துர்கா மெல்லச் சிரித்தாள்.

“என்ன சிரிக்கிறே...?”

“சிரிக்காம என்ன பண்றது வல்லப்? உங்களை நான் காதலிக்காமே இருந்திருந்தா இப்படியொரு பிரச்சனை வந்தே இருக்காது. கடைசியில நீங்களும் பயந்துட்டீங்க போலிருக்கு. உங்களுக்கு அப்படியொரு பயம் இருந்தா அதை நேரிடையாவே சொல்லலாம்... இப்படி அம்மா அப்பா மேல பழியைத் தூக்கி போட வேண்டாம்...”

“நோ துர்கா.....! எனக்கு இந்த ஜாதகம், ஜோதிடம்... ஏன்.... கடவுள் நம்பிக்கை கூடக் கிடையாது. ஏதோ பிறந்தோம் வாழ்ந்துட்டிருக்கோம் என்கிற கோட்பாடுதான் எனக்கு. கல்யாணத்துக்கு மண்டபம் தேவையில்லை, ஐயர் தேவையில்லை. இதே இடத்துலகூட உன் கழுத்துல தாலி கட்ட நான் தயார். பட்... என்னோட நியாயமான பயம் என்னான்னா....

“சொல்லுங்க....”

“ஒருவேளை கல்யாணத்துக்கு அப்புறம் எனக்கு ஏதாவது ஒண்ணு ஆயிட்டா....?”

“ஆயிட்டா....?”

“அது உன்னோட வாழ்க்கையைத்தானே பாதிக்கும்! அதனால....”

“அதனால....?”

“நீ வேற ஒரு நல்ல மாப்பிள்ளையா பார்த்து கல்யாணம் பண்ணிகிட்டா... எனக்கு.....”

துர்கா வல்லபை கையமர்த்தினாள்.

“ஒரு நிமிஷம்....” சொன்னவள் அந்தப் பக்கமாய் போன பேரர் ஒருவரைக் கூப்பிட்டாள்.

“ப்ளீஸ்! ஒரு டம்ளர் தண்ணீர் குடுக்க முடியுமா?”

பேரர் உடனே கொண்டு வந்து வைத்துவிட்டு நகர்ந்தான். வல்லப் கேட்டான்.

"எதுக்கு இந்த தண்ணி?"

"மாத்திரை சாப்பிடத்தான்."

"மாத்திரையா....? என்ன மாத்திரை?"

"வல்லப்....! இதுல ஒரு மாத்திரை சாப்பிட்டா நல்லா தூக்கம் வரும். ரெண்டு மாத்திரை சாப்பிட்டா சுயநினைவு இருக்காது. மூணு மாத்திரை சாப்பிட்டா கோமா ஸ்டேஜ். நாலாவது மாத்திரைக்கு யாத்திரை போக வேண்டியதுதான். இந்தக் கல்யாணம் எந்த ஒரு காரணத்துக்காகவும் நிற்கக் கூடாது. ஜாதகத்துல தோஷம் அதுஇதுன்னு சொல்றதெல்லாம் வெறும் ஹம்பக். என்னோட சித்தப்பாவும் தாய்மாமனும் அந்த ஜோசியரும் சேர்ந்துகிட்டு பண்ற சதி. அந்த சதிக்கு நாம பலியாயிடக் கூடாது. எனக்கு கடவுள் நம்பிக்கை நிறைய இருக்கு. அந்தக் கடவுள் உங்களையும் என்னையும் நூறு வருஷம் வாழவைப்பார். இவ்வளவு சொன்ன பின்னாடியும் நீங்க கல்யாணம் பண்ணிக்கத் தயங்கினா இந்த மாத்திரைப் பட்டைக்குள்ளே இருக்கிற நாலு மாத்திரை என் வயித்துக்குள்ளே போயிடும்....."

வல்லப் துர்காவின் கையில் இருந்த மாத்திரை பட்டையைப் பறித்தான்.

"இப்பேர்ப்பட்ட முட்டாள்தனத்தையெல்லாம் பண்ணிடாதே....! நம்ம கல்யாணம் கண்டிப்பா நடக்கும்"

"நிஜமா....?"

"சத்தியமா....?"

"அப்புறம் ஊருக்குப் போனதும் மனசு மாறிடக்கூடாது."

"இனி மாற மாட்டேன். ஆனா எனக்கு ஒரு சந்தேகம்"

"என்ன....?"

"உன்னோட சித்தப்பா-தாய் மாமன் ரெண்டு பேருமா சேர்ந்து நம்ம கல்யாணத்தை நடக்கவிடாமே பண்றதுல அவங்களுக்கு என்ன லாபம்?"

"எல்லாம் எங்கப்பாகிட்ட இருக்கிற கோடிக்கணக்கான சொத்துக்கு ஆசைப்பட்டுத்தான்.... எனக்கு கல்யாணமாகி என் மூலமா வாரிசுகள் உருவாயிட்டா அவங்களுக்குக் கிடைக்க வேண்டிய சொத்தோட அளவு குறைஞ்சு போகுமே...."

“இதெல்லாம் உங்கப்பாவுக்கு தெரியாதா?”

“தெரியாது. அவங்க ரெண்டு பேரும் எதைச் சொன்னாலும் சரி, எங்கப்பாவுக்கு அதுதான் வேதவாக்கு. மறுத்து பேசக்கூட மாட்டார். அவங்க ரெண்டு பேர் முகத்திலேயும் ஜோசியர் முகத்திலேயும் கரி பூசற மாதிரி நாம வாழ்ந்து காட்டணும்”

“காட்டுவோம்.”

வல்லப் சிரித்தான்.

# 11

மரப் பால அருவிக்குப் பக்கத்தில் ஒரு கும்பல் கூடியிருக்க அதற்குப் பக்கத்தில் போய் போலீஸ் ஜீப் நின்றது.

இன்ஸ்பெக்டர் நஞ்சுண்டா கீழே இறங்க, அவரைத் தொடர்ந்து ஹரி, ஜெயா, கிறிஸ்டோபர் இறங்கினார்கள். ஜெயா கண்களில் நீரோடு சேலைத் தலைப்பை வாய்க்குக் கொடுத்து பொத்தியிருந்தாள்.

நஞ்சுண்டா முன்னால் போக கூட்டம் விலகியது. சப்-இன்ஸ்பெக்டர் ஒருவர் எதிர்ப்பட்டார். ஒரு சல்யூட்டை விநியோகித்தார்.

“சார்....”

“பையன் எங்கே....?”

“ஹாஸ்பிடல்ல அட்மிட் பண்ண கான்ஸ்டபிள்ஸ் கொண்டு போயிருக்காங்க சார்....”

“பையன் உயிரோடு இருக்கானா?”

“ஆமா சார்.....”

“கண்ட்ரோல் ரூமிலிருந்து எனக்கு வந்த தகவல்ல பையனோட உடல்ன்னு சொன்னாங்களே?”

“மே பி சார். அவங்க அப்படி சொன்னதுக்குக் காரணம் பையன் மூச்சு பேச்சு இல்லாம இந்த பள்ளத்துல விழுந்து கிடந்ததுதான். பையனை பள்ளத்திலிருந்து மேலே கொண்டு வந்த பிறகுதான் உடம்புல உயிர் இருக்கிறது தெரிஞ்சுது. உடனடியா ஹாஸ்பிடலுக்குக் கொண்டு போக ஏற்பாடு பண்ணிட்டேன். பையனுக்கு நெற்றியில் லேசான அடி. மற்றபடி எந்தக் காயமும் இல்லை.”

“பையன் இந்தப் பள்ளத்துக்குள்ளே விழுந்து கிடந்ததை பார்த்தது யார்....?”

கும்பலில் நின்றிருந்த ஒரு பெரியவர் முன்னால் வந்தார். “மொதல்ல பார்த்தது நான்தாங்க. ஒண்ணுக்குப் போறதுக்காக இந்த பள்ளத்துக்கு பக்கத்துல வந்தப்ப பையன் உள்ளார விழுந்து கிடக்கிறது தெரிஞ்சுதுங்க.... உடனே பக்கத்துல இருக்கிற நடுவட்டம் போலீஸ் ஸ்டேஷனுக்குப் போய்த் தகவல் குடுத்தேங்க.”

நஞ்சுண்டா மறுபடியும் அந்த எஸ்.ஐ-யிடம் திரும்பினார்.

“பையனை எந்த ஹாஸ்பிட்டலுக்கு கொண்டு போயிருக்கீங்க....?”

“நடுவட்டம் கவர்ன்மெண்ட் ஹாஸ்பிடலுக்குத்தான் சார்....”

“மிஸ்டர் ஹரி....! நீங்களும் உங்க வொய்ப்பும் ஜீப்புல புறப்பட்டு ஹாஸ்பிடலுக்கு போய் வருணைப் பாருங்க. நான் எஸ்.ஐகிட்டே பேசிட்டு பைக்ல வந்துடறேன் பயப்படாமே போங்க.... பையனுக்குத்தான் எந்த ஆபத்தும் இல்லையே....!”

ஹரியும் ஜெயாவும் தலைகளை ஆட்டிவிட்டு ஜீப்பில் ஏறிக் கொண்டு பயணப்பட, நஞ்சுண்டா எஸ்.ஐ-யை ஏறிட்டார்.

“பையன் எப்படி பள்ளத்துல விழுந்தான்னு என்கொய்ரி பண்ணீங்களா....?”

“ஏதாவது தகவல் கிடைச்சுதா....”

“யாருக்கும் எதுவும் தெரியலை சார். ஆனா பையனை பள்ளத்திலிருந்து மீட்டு ஹாஸ்பிடல் கொண்டு போறதுக்காக ஜீப்புல ஏத்தும்போது ஒரு பேரைச் சொல்லி முனங்கினான் சார்....”

“பேரா....? என்ன பேர்.....?”

“துர்கா....”

# 12

முதல் இரவு அறைக்குள் கட்டிலின் எல்லா திசைகளிலும் மல்லிகைச் சரங்கள் சரம் சரமாய்த் தொங்கி மூச்சை அடைக்கிற மாதிரி மணந்தது.

வெளியே பெய்து கொண்டிருந்த பனியின் ஜில்லிப்பு கண்ணாடிக் கதவுகளின் இடுக்குகளையும் ஊடுருவிக் கொண்டு வந்திருக்க - அறைக்குள் இருந்த தனல் அடுப்பின் இதமான வெப்பம் குளிரை விரட்டியடித்துக் கொண்டிருந்தது.

கட்டிலில் முழங்கால்களைக் கட்டிக் கொண்டு பக்கம் பக்கமாய் துர்க்காவும், வல்லபும் உட்கார்ந்திருந்தார்கள்.

துர்கா புன்னகை மிளிர சொன்னாள்.

"சரியா பதினேழு மணி நேரமாச்சு...."

"எதுக்கு?"

"நீங்கள் என் கழுத்துல தாலியைக் கட்டி" கழுத்தில் தங்கக் குண்டுகளோடு கனமாய்த் தொங்கிய மஞ்சள் மின்னும் தாலியை எடுத்துக் காட்டினாள்.

"த்ரில்லாயிருக்கு. நேத்து வரைக்கும் நீயும் நானும் லவ்வர்ஸ். இன்னிக்கு அப்ரூவ்ட் ஹஸ்பெண்ட் அண்ட் வொய்ஃப். அம்மா அப்பா விளையாட்டு விளையாட நேரத்தையும் ரூமையும் ஒதுக்கிக் கொடுத்திருக்காங்க நம்ம பெரியவங்க..."

"எனக்குக் கடைசி நிமிஷம் வரைக்கும் நம்ம கல்யாணம் நடக்குமாங்கிற சந்தேகம் இருந்தது."

"எப்படியோ கல்யாணம் முடிந்தது...." சொல்லிக் கொண்டே துர்காவை கட்டியணைத்தான் வல்லப். துர்கா அவனிடமிருந்து தன்னை மெல்ல விடுவித்துக் கொண்டபடி சொன்னாள்.

"என்னங்க.....! நான் ஒண்ணு சொல்லுவேன். நீங்க கேட்கணும்."

"என்ன சொல்லப் போறே?"

துர்கா தலையைக் குனிந்து கொண்டு மெல்லிய குரலில் சொன்னாள்.

"நான் ஒரு வேண்டுதல் நேர்ந்துகிட்டேன்."

"வேண்டுதலா....? என்ன வேண்டுதல்?"

“இன்னியிலிருந்து ஒரு மண்டலத்துக்கு அதாவது நாற்பத்தெட்டு நாட்களுக்கு நாம கொஞ்சம் சுத்தபத்தமா இருக்கணும்”

“சுத்தபத்தமா....! அப்படீன்னா?”

“ஒரு நாற்பத்தெட்டு நாளைக்கு நாம விலகியிருந்து ஒவ்வொரு சோம வாரமும் விரதம் இருந்து....”

“இருந்து....?”

“நாற்பத்தெட்டு நாள் முடிஞ்சதும் தமிழ்நாட்டுல இருக்கிற முக்கியமான கோயில்களுக்குப் போய்ட்டு வரப் போறோம்”

“இதெல்லாம் எதுக்காக.....?”

“உங்க ஜாதகத்துல இருக்கிற களத்ர தோஷம் நிவர்த்தியாக வேண்டாமா....?”

“போச்சுடா ....! கடைசியில நீயும் பயந்துட்ட பார்த்தியா.....! ஜாதகம் ஜோசியம் இதிலெல்லாம் நம்பிக்கை இல்லேன்னு சொன்னே....?”

“இப்பக்கூட நம்பிக்கை இல்லதான். இருந்தாலும் ஒரு மனத்திருப்திக்காக இந்த வேண்டுதலை நிறைவேத்தி வைப்போமே!”

வல்லப் போலியாய் மயக்கம் வருவதுபோல் பாவ்லா காட்டினான்.

“நாற்பத்தெட்டு நாளா? அம்மாடி! உன்னைப் பக்கத்துல வெச்சு பார்த்துகிட்டு என்னால சும்மா இருக்க முடியாது. ஹார்ட் ப்ளாஸ்ட் ஆயிடும்....”

“இது தேவையா துர்கா?”

“தேவைதான்....! எனக்காக நீங்க கொஞ்சம் மனக்கட்டுப்பாடோடு இருக்கணும்.... “என்னால இருக்க முடியும்னு தோணலை. காதலிச்ச நாட்கள்லகூட ஒரு கிஸ் கிடையாது. ஒரு தொடல் கிடையாது. ஜென்டில்மேன் காதல். இப்போ தாலி கட்டின பிறகும் கையைக் கட்டிப்போட்டா நான் என்ன பண்ண முடியும்! ஒரு சின்ன வீடு இருந்தாலாவது பரவாயில்லை....”

“என்ன சொன்னீங்க....?”

துர்கா பக்கத்தில் இருந்த தலையணையைத் தூக்கி ஒரு மொத்து மொத்தினாள். “போங்க! நீங்க பேசினது எனக்கு பிடிக்கலை.”

“ஸாரி....”

“ஸாரி சொன்னா ஒத்துக்க மாட்டேன். தோப்புக்கரணம் போடுங்க....”

“எவ்வளவு....?”

“நூறு....?”

“அய்யோ... தாங்க மாட்டேன்....”

“சரி... அம்பது....”

“இன்னும் குறை.....”

“இருபது....”

“பத்து போடறேனே.”

“சரி போடுங்க.”

வல்லப் வேஷ்டியை இறுகக் கட்டிக் கொண்டு கட்டிலினின்றும் எழுந்தான். முகம் மாறியது. துர்கா அவன் முகத்தை பார்த்துவிட்டு கேட்டாள்.

“என்னங்க....?”

“என்னமோ தெரியலை, தலை லேசா சுத்தற மாதிரி இருக்கு....” சொல்லும்போதே ஒரு பக்கமாய்ச் சரிந்து விழுந்தான்.

துர்கா பதறிக் கொண்டு எழுந்தாள்.

“அய்யய்யோ....என்னங்க..... உங்களுக்கு?” வல்லபை தாங்கிப் பிடித்தாள்.

“து....ர்.....க்....கா....”

நெஞ்சைப் பற்றிக்கொண்டு முகம் வியர்த்துக்கொட்ட வலியால் துடித்தான் வல்லப்.

# 13

நடுவட்டம் ப்ரைமரி ஹெல்த் சென்டருக்கு சொந்தமான அந்த ஹாஸ்பிட்டலில் பாதுகாப்பான ஓர் அறைக்குள் வருணைப் படுக்க வைத்திருந்தார்கள்.

நெற்றியிலிருந்த ஒரு லேசான காயத்திற்கு பிளாஸ்திரி போட்டிருந்தார்கள்.

டாக்டர் ஒருவர் ஹரி, ஜெயாவிடம் சொல்லிக் கொண்டிருந்தார்.

“உயிருக்கு எந்தவிதமான ஆபத்தும் இல்லை. பட்.... ஏதோ ஓர் அதிர்ச்சிக்கு வருண் ஆளாகியிருக்கான். அது என்னான்னு தெரியலை. இங்கே ஹாஸ்பிட்டலுக்கு வந்தபோது அவனுக்கு லேசா சுயநினைவு இருந்தது. பேச்சுக் கொடுத்துப் பார்த்தேன். பேச்சு தெளிவா வரலை. பயந்த மாதிரி பார்த்தான். அவன் நார்மலுக்கு வரணும்ன்னா நல்லா தூங்கி எழுந்திருக்கணும். ஸோ தூங்கறதுக்காக ஒரு ஊசி போட்டிருக்கேன். எப்படியும் ஆறு மணி நேரம் தூங்குவான். அதுக்கப்புறம்தான் அவனுக்கு ஞாபகம் வரும். மைண்ட்டும் ஃப்ரெஷ்ஷா இருக்கும்...?

ஜெயா அழுகையோடு கேட்டாள்.

“டாக்டர்! வருண் ஒரு பெரிய பள்ளத்துக்கு உள்ளே விழுந்திருக்கான். உடம்புல எந்த இடத்துலேயும் பிராக்சர் இல்லையே....?”

“உடம்பைப் பொறுத்தவரைக்கும் எந்தப் பிரச்னையும் இல்லை. ஹி ஈஸ் ஆல்ரைட். பட்.... மென்ட்டலி டிஸ்டர்ப்ட். அது என்னான்னு கண்டுபிடிக்கணும்....”

டாக்டர் சொல்லிக் கொண்டிருக்கும்போதே இன்ஸ்பெக்டர் நஞ்சுண்டாவும் கிறிஸ்டோபரும் அறைக்குள் நுழைந்தார்கள்.

நஞ்சுண்டா, டாக்டரிடம் வருணின் உடல்நிலையைப் பற்றி விசாரித்துவிட்டு ஹரியிடம் திரும்பினார்.

“மிஸ்டர் ஹரி....! துர்கா என்கிற பேர்ல உங்களுக்குத் தெரிஞ்சவங்க யாராவது இருக்காங்களா?”

“துர்கா”

“எஸ்...”

“அப்படி யாரும் தெரிஞ்சவங்க இல்லையே? எதுக்காக கேட்கறீங்க இன்ஸ்பெக்டர்?”

“வருண் அந்தப் பேரைச் சொல்லி முனகியிருக்கான்.... நடுவட்டம் சப்-இன்ஸ்பெக்டர் மோகன் அதை ஹியர் பண்ணியிருக்கார்.”

“ஆச்சர்யமாயிருக்கே...! வருண் எதுக்காக துர்காங்கிற பேரைச் சொல்லணும்....? அந்தப் பேர்ல அவனுக்கும் சரி.... எங்களுக்கும் சரி.... யாரையும் தெரியாதே?”

ஜெயா குறுக்கிட்டு சொன்னாள்.

“துர்காங்கிறது கடவுளோட பேர். வருண் பயத்துல இருந்ததினால் அந்தப் பெயரைச் சொல்லியிருக்கலாம்...”

“எனக்கு அப்படி தோணலை மிஸஸ் ஜெயா. வருண் காணாமே போனதுக்கும் அந்த துர்காவுக்கும் ஏதோ ஒருவகையில் சம்பந்தம் இருக்கு.”

ஜெயா பயத்தோடு ஹரியைப் பார்த்தாள்.

“என்னங்க! நாம இந்த ஊட்டிக்கு வந்த நேரமே சரியில்லை போலிருக்கு. வருண் கண் முழிச்சதும் ஊருக்குக் கிளம்பிடலாம்...” நஞ்சுண்டா இடைமறித்தார்.

“அப்படி நீங்க கிளம்பிட முடியாதும்மா. வருண் ஒரு வேளை கடத்தப்பட்டிருந்தா அது யார்ன்னு நீங்க தெரிஞ்சுக்க வேண்டாமா?”

ஹரி ஆமோதித்தான்.

“இன்ஸ்பெக்டர் யூ ஆர் கரெக்ட். வருணுக்கு என்ன நேர்ந்ததுன்னு தெரிஞ்சுக்கிட்டே நாங்க மெட்ராஸுக்கு கிளம்பறோம்....”

# 14

வல்லபை பரிசோதித்துப் பார்த்த டாகடர் கவலை பார்வையோடு சுற்றிலும் நின்றிருந்த உமாபதி. துர்கா, தயாநிதி, சுதாகர், நான்கு பேரையும் பார்த்துவிட்டு கம்மிய குரலில் சொன்னார்.

"வல்லப் இறந்துவிட்டார். சிவியர் ஹார்ட் அட்டாக்...."

துர்கா இரண்டு காதுகளையும் பொத்திக்கொண்டு வீறிட்டாள்.

"நோ... டாக்டர்... நோ... அவர் இறந்திருக்க மாட்டார். நல்லா டெஸ்ட் பண்ணிப் பாருங்க."

அவளுடைய குடும்ப டாக்டரான அவர் கனமாய் பெருமூச்சொன்றை விட்டபடி சொன்னார். "இனிமே டெஸ்ட் பண்ணிப் பார்க்க ஒண்ணுமேயில்லை துர்கா. உனக்கு இப்படியொரு நிலைமை நேர்ந்து இருக்கக் கூடாது. இந்த உண்மையை நீ ஜீரணம் பண்ணித்தான் ஆகணும். வல்லப் உயிரோடு இல்லை. திடீர்ன்னு வந்த ஒரு கடுமையான ஹார்ட் அட்டாக் அவரோட உயிரை பறிக்கக் காரணமா இருந்திருக்கு."

துர்கா வெறிபிடித்தவள் போல் கூச்சலிட்டாள், "டாக்டர்! இது ஹார்ட் அட்டாக் கிடையாது. இது இயற்கையான மரணம் கிடையாது."

டாக்டர் திகைத்தார்.

"நீ என்னம்மா சொல்றே....?"

"டாக்டர்! என்னோட கணவர் வல்லப் கொலை செய்யப்பட்டிருக்கிறார். அந்தக் கொலைக்குக் காரணமானவங்க இந்த வீட்டுக்குள்ளேயே இருக்காங்க...."

"என்னது.....! இந்த வீட்டுக்குள்ளேயே இருக்காங்களா?"

"ஆமா டாக்டர்....

"நீ யாரைம்மா சொல்றே?

"இதோ இவங்கதான்...." தயாநிதியையும், சுதாகரையும் சுட்டிக் காட்டினாள் துர்கா.

உமாபதி வெகுண்டார். "துர்கா உனக்கென்ன பைத்தியமா புடிச்சிருக்கு...? உன்னோட தாய்மாமனும் சித்தப்பாவும் எதுக்காக மாப்பிள்ளையைக் கொலை செய்யணும்?"

“காரணமெல்லாம் எனக்குத் தெரியாது. அவங்கதான் கொலை பண்ணிருக்காங்க. மொதல்ல போலீஸுக்குப் போன் பண்ணுங்க... போலீஸ் வந்தா எல்லா உண்மையும் வெளியே வந்துடும்.....”

“துர்கா! புத்திகெட்டத்தனமா பேசாதே” உமாபதி சொன்னதைப் பொருட்படுத்தாமல் துர்கா டெலிபோனை நோக்கிப் போனாள்.

ரிஸீவரை எடுத்துக் கொண்டு டயலில் போலீஸுக்குரிய எண்களைத் தட்டினாள்.

மறுமுனையில் ரிங் போய் ரிஸீவர் எடுக்கப்பட்டது.

“போலீஸ் ஸ்டேஷன்...?”

“எஸ்....”

“சார்...! நான் எஸ்டேட் ஓனர் உமாபதியோட டாட்டர் துர்கா பேசறேன். இங்கே வீட்ல ஒரு மர்டர். என்னோட கணவரைக் கொன்னுட்டாங்க... உடனே புறப்பட்டு வாங்க.....”

துர்கா பேசி ரிஸீவரை வைத்துவிட்டு அப்படியே தளர்ந்து உட்கார்ந்து முழங்கால்களைக் கட்டிக் கொண்டு அழ ஆரம்பித்தாள்.

# 15

இரவு பதினொரு மணி.

நடுவட்டம் ஹாஸ்பிட்டல்.

வருண் கண்விழித்து மெல்ல எழுந்து உட்கார பக்கவாட்டு நாற்காலிகளில் உட்கார்ந்திருந்த ஹரி, ஜெயா, கிறிஸ்டோபர் ஆர்வ முகங்களோடு எழுந்து அவனைச் சூழ்ந்தார்கள்.

ஜெயா அவனுடைய முகத்தை வருடி விட்டாள்.

"டேய்... வருண்....! ஏண்டா இப்படியெல்லாம் நடந்துக்கிறே...! உனக்கு என்னடா ஆச்சு...."

வருண் ஜெயாவுக்கு எந்த பதிலும் சொல்லாமல் கட்டிலை விட்டுக் கீழே இறங்கினான்.

"வருண்! எங்கடா போறே?"

ஜெயாவின் கையை உதறிவிட்டு வேகமாய் அறையைக் கடந்து வெளியே வந்தான். பின்னாலேயே மூன்று பேரும் ஓடி வந்தார்கள். "வருண்...."

பக்கத்து அறையில் தங்கியிருந்த இன்ஸ்பெக்டர் நஞ்சுண்டா வேகவேகமாய் வெளியே வந்தார்.

"என்ன?"

"வருண் தூங்கி எழுந்திரிச்சதும் யார் பேச்சையும் கேட்காமே விடுவிடுன்னு வெளியே போறான்."

நஞ்சுண்டா ஓடிப்போய் வருணின் தோள்பட்டையைப் பற்ற அவன் உதறிவிட்டு நேர் பார்வை பார்த்துக் கொண்டு நடந்தான்.

நஞ்சுண்டா வியப்புக்குப் போனார்.

"ஒரு சின்னப் பையனுக்கு இவ்வளவு பலமா....?"

ஹரி பாய்ந்துபோய் வருணைத் தடுக்க முயல, நஞ்சுண்டா அவனைக் கையமர்த்தினார்.

"மிஸ்டர் ஹரி....! டோண்ட் ஸ்டாப் ஹிம். அவனை அவன் போக்கில் போக விடுங்கள். அவன் எங்கேதான் போகிறான் என்று பார்த்து விடலாம்."

“இன்ஸ்பெக்டர் சொல்றதும் சரிதான். லெட் அஸ் ஃபாலோ ஹிம்....” கிறிஸ்டோபர் சொல்ல எல்லோரும் வருணை சத்தம் காட்டாமல் பின் தொடர்ந்தார்கள்.

பனி பெய்துகொண்டிருந்த அந்த நடுநிசி வேலையில் வருண் ஹாஸ்பிட்டலுக்கு வெளியே வந்து குறுகிய ரோட்டுப் பாதையில் ஒரு செலுத்தப்பட்ட அம்பைப் போல் நடக்க ஆரம்பித்தான்.

தொடர்ந்தார்கள்.

பனிக்காற்று ‘விசுக் விசுக்’கென்று முகத்தில் அறைந்துவிட்டுப் போனது.

வருண் நடந்தான்.

சில நிமிஷ நடைக்குப் பின் மரங்கள் மண்டிய ஓர் இறக்கத்திற்குள் இறங்கினான்.

முன்னால் போய்க்கொண்டிருந்த ஹரி ரோட்டின் பக்கவாட்டில் கைகாட்டிய போர்டைப் பார்த்து உள்ளுக்குள் அதிர்ந்தான்.

“இந்துக்களின் மயானத்துக்குப் போகும் வழி!”

“இன்ஸ்பெக்டர்...”

“ம்.....”

“வருண் மயானம் இருக்கிற பக்கம் நடக்கிறானே!”

“அதான் எனக்கும் ஆச்சர்யமாயிருக்கு. இந்த ராத்திரி நேரத்துல ஏன் இவன் வரணும்?”

“இன்ஸ்பெக்டர்....! எனக்கு பயமாயிருக்கு. வருணைத் தடுத்து நிறுத்தித் திரும்பவும் ஹாஸ்பிட்டலுக்கே கூட்டிட்டுப் போயிடலாமா....?”

“ஏன் பயப்படறீங்க ஹரி? என்ன நடக்குதுன்னு பார்த்துடலாம்.”

வருண் இப்போது வேகமாய் நடந்து கொண்டிருந்தான்.

பாதை போகப்போக குறுகி ஒற்றையடி பாதையாய் மாறி இரண்டு பக்கமும் நெருக்கமாய் மரங்களை வைத்திருந்தது. தம்புராவில் சுருதி கூட்டிய மாதிரி சில்வண்டுகளின் சத்தம்.

அரை கிலோமீட்டர் தூரம் நடந்ததுமே....

நட்சத்திரங்களின் மங்கிய வெளிச்சத்தில் கல்லறைகளோடு ஒரு மயானம் விரிந்தது.

ஜெயா அந்தக் குளிரிலும் வியர்த்து வழிந்து போய் ஹரியின் கைகளைக் கெட்டியாய் பற்றிக்கொண்டாள்.

“என்னங்க இது... வருண் சுடுகாட்டுக்கெல்லாம் வந்திருக்கான்....?”

“பொறு....! என்னதான் நடக்குதுன்னு பார்த்துடலாம்....”

வருண் இப்போது கல்லறைகளுக்கு நடுவில் நடந்து ஒவ்வொரு கல்லறையாய்க் குனிந்து பார்த்துக் கொண்டுபோய் ஓர் ஊசியிலை மரத்துக்குக் கீழே சதுரமாய் பதிக்கப்பட்டிருந்த கல்லறைக்கு முன்பாய் போய் நின்றான்.

இன்ஸ்பெக்டர் நஞ்சுண்டா ஹரியையும், ஜெயாவையும் கையமர்த்திவிட்டு... தான் மட்டும் மெதுவாய் பூனை நடை நடந்து வருணுக்கு பின்பக்கமாய் போய் நின்றார்.

வருண் அந்தக் கல்லறைக்கு முன்பாய் ஆணியடித்த மாதிரி நிற்க நஞ்சுண்டா தலையை உயர்த்திக் கல்லறையின் முகப்பில் பதிக்கப்பட்டிருந்த சலவைக்கல்லைப் பாத்தார்.

சிவப்புப் பெயிண்ட்டில் எழுத்துக்கள் பளிச்சென்று தெரிந்தன.

வயது 27

மலர்ந்த நாள் : 4-7-1962

உதிர்ந்த நாள் : 8-12-1989

நஞ்சுண்டா இன்னமும் பக்கத்தில் போய் நின்று வருணின் தோளைத் தொட்டார்.

“வருண்.”

வருண் ஸ்லோமோஷனில் தலையைத் திருப்பி நஞ்சுண்டாவை ஆணியடித்த மாதிரி பார்த்தான்.

உதடுகள் மெதுவாய் அசைந்தன.

“என்னோட பேர் வருண் கிடையாது.”

“பின்னே...?”

“வல்லப்.”

எல்லோரும் திகைத்த மாதிரி பார்த்துக் கொண்டார்கள்.

# 16

இன்ஸ்பெக்டர் நஞ்சுண்டா கூடலூர் போகும் ரோட்டில் பைக்கை விரட்டி வீ கார்டன்ஸ் என்ற பெயர்ப் பலகை பார்வைக்குக் கிடைத்ததும் பைக்கை நிறுத்தினார்.

போர்டு அம்புக்குறி போட்டுக் காட்டிய பக்கம் பார்த்தார்.

தேயிலைத் தோட்டங்களுக்கு மத்தியில் ஓர் ஆறடி அகல மண்ரோடு கோணல்மாணலாய் வளைந்து போயிற்று.

பைக்கை அதற்குள் நுழைத்து ஆக்ஸிலேட்டரை முறுக்க, பைக் குதித்துக் குதித்து ஓடியது.

எல்லா திசைகளிலும் பச்சைப்பசேல் தேயிலைச் செடிகள். பைக், ஓர் அரை கிலோ மீட்டர் தூரம் பயணித்ததும், எஸ்டேட் பங்களா விஸ்தாரமாய் பரவித் தெரிந்தது.

பைக், பங்களாவை நெருங்க பிரம்மாண்டமான காம்பௌண்ட் கேட் பார்வைக்குக் கிடைத்தது. கேட்டுக்குப் பக்கத்திலேயே வாட்ச் அண்ட் வார்ட் கூண்டு, உள்ளே எக்ஸ் சர்வீஸ்மேன் தோற்றத்தில் மீசை முறுக்கிய ஒரு வாட்ச்மேன்.

இன்ஸ்பெக்டரைப் பார்த்ததும் வாட்ச்மேன் கூண்டை விட்டு பவ்யமாய் வெளியே வந்து விஷ் செய்தான்.

நஞ்சுண்டா கேட்டார்.

“எஸ்டேட் ஓனர் உமாபதி இருக்காரா?”

“இருக்கார் ஸார்...”

“பார்க்கணுமே...”

“ஒரு நிமிஷம் இருங்க ஸார். கேட்டுச் சொல்றேன்.” வாட்ச்மேன் மரக்கூண்டுக்குள் போய் அங்கிருந்த இண்டர்காமில் பேசிவிட்டு கேட்டை அகலமாய்த் திறந்து வைத்தான்.

“உள்ளே போங்க ஸார். போர்டிகோ வராந்தாவிலேயே அய்யா உட்கார்ந்திருப்பார்.”

பைக்கை உள்ளே விரட்டினார் நஞ்சுண்டா. பங்களா இப்போது முழுமையாய் பார்வைக்குக் கிடைத்தது. லான் சீராய் பராமரிக்கப்பட்டிருக்க, அதையொட்டிப் போன கான்க்ரீட் பாதையில் பைக்கை நிதான வேகத்தில் விரட்டி இரண்டு வெளிநாட்டுக் கார்கள் நின்று கொண்டிருந்த போர்டிகோவுக்கு வந்து சேர்ந்தார். போர்டிகோ வராந்தாவில் ரோஸ்வுட் சாய்வு நாற்காலி ஒன்றில் தனியாய் உட்கார்ந்து பேப்பர் பார்த்துக்கொண்டிருந்த உமாபதி போர்டிகோ படியேறி வந்த நஞ்சுண்டாவைப் பார்த்து “வாங்க” என்று சொல்லி எதிரில் இருந்த பிரம்பு நாற்காலியைக் காட்டினார்.

நஞ்சுண்டா உட்கார்ந்து தன்னை அறிமுகப்படுத்திக் கொண்டதும் உமாபதி கேட்டார்.

“என்ன விஷயம்.....”

“ஒரு சின்ன என்கொய்ரி....”

“கேளுங்கள்....”

நஞ்சுண்டா ஆரம்பித்தார். “ஒன்பது வருஷத்துக்கு முந்தி அதாவது 1989 டிசம்பர் எட்டாம் தேதி வல்லப்னு யாராவது ஒருத்தர் உங்க வீட்ல இறந்து போனாரா....?”

“ஆமா... வல்லப் என்னோட மாப்பிள்ளை.”

“உங்க மாப்பிள்ளையா...? எப்படி இறந்தார்னு சொல்ல மடியுமா? உமாபதி நஞ்சுண்டாவை குழப்பமாய்ப் பார்த்தார். “இன்ஸ்பெக்டர்! சம்பவம் நடந்து ஒன்பது வருஷங்கள் ஆயிருச்சு. இப்போ எதுக்காக இந்தப் புது விசாரணை....?”

“ஸார்... ப்ளீஸ்.....மொதல்ல நீங்க என்னோட கேள்விக்குப் பதிலைச் சொல்லிவிட்டு வாங்க... அதுக்கப்பறம் நான் இங்கே எதுக்காக வந்தேன்கிறதை இந்த விசாரணைக்கு என்ன அவசியம்கிறதை சொல்றேன்.”

உமாபதி சில விநாடிகள் நஞ்சுண்டாவையே பார்த்துக் கொண்டிருந்துவிட்டு பின் மெல்ல பேச்சை ஆரம்பித்தார்

“என்னொட டாட்டர் துர்காவோட கணவர் வல்லப். கல்யாணமான அன்னிக்கு ராத்திரியே ஹார்ட் அட்டாக் வந்து இறந்து போனார். அது இயற்கையான மரணம் இல்லை, கொலைதான்னு என்னோட டாட்டர் துர்கா போலீஸ்ல புகார் கொடுத்துட்டா. போலீஸ் வந்தது. பாடியை உடனே ஜி.ஹெச் கொண்டு போய் போஸ்ட்மார்ட்டம் பண்ணிப் பார்த்தாங்க.”

“அதுக்கப்புறம்... நான் சொல்றேன் இன்ஸ்பெக்டர்...” பின்பக்கம் ஒரு பெண் குரல் கேட்க. நஞ்சுண்டா திரும்பினார்.

குளிர்ச்சிக்கு இதமாய் சால்வையை போர்த்திக்கொண்டு நின்றிருந்த அந்த முப்பது வயதுப் பெண் நஞ்சுண்டாவை நெருங்கினாள்.

“இன்ஸ்பெக்டர்! நான் துர்கா. ஒன்பது வருஷங்களுக்குப் பிறகு இந்த எஸ்டேட் பங்களாவுக்குள்ளே மறுபடியும் போலீஸ் வந்திருக்கு.... நீங்க எதுக்காக வந்திருக்கீங்கன்னு தெரியாது. இருந்தாலும் உங்க கேள்விக்கு நான் பதில் சொல்றேன்.”

“தாங்க் யூ மிஸ் துர்கா....”

துர்கா தொடர்ந்தாள். “என்னோட கணவர் வல்லப்போட உடல் அன்னிக்கு ராத்திரியே போஸ்ட்மார்ட்டம் பண்ணப்பட்டு ரிப்போர்ட் உடனடியாய் கைக்கு வந்தது. ரிப்போர்ட் ரிசல்ட் என்ன தெரியுமா இன்ஸ்பெக்டர்? என்னோட கணவர் இறந்தது ஹார்ட் அட்டாக்கினால் அல்ல - விஷம் தடவிய சிகரெட்டைப் புகைத்ததினால்.”

“ஈஸிட்....?”

“எஸ்....”

“யார் அந்தக் காரியத்தைப் பண்ணியது....?”

“என்னோட சித்தப்பா தயாநிதியும் என்னோட தாய்மாமன் சுதாகரும்....”

“என்ன காரணம்....?”

“நான் வல்லப்பை காதலிச்சுக் கல்யாணம் பண்ணிக்கிட்டது அவர்களுக்குப் பிடிக்கலை. கல்யாணத்தை நிறுத்த எப்படி எப்படியெல்லாமோ முயற்சி பண்ணாங்க. வல்லப்போட ஜாதகத்துல தோஷம் இருக்குன்னு சொல்லி, அவர் கல்யாணம் பண்ணிகிட்டா கொஞ்ச நாள்தான் உயிரோடு இருப்பார்ன்னு சொல்லி பயமுறுத்தினாங்க. நான் அவங்க சொன்னதையெல்லாம் காதுல போட்டுக்காமே பிடிவாதமாயிருந்து கல்யாணத்தைப் பண்ணிக்கிட்டேன். அப்படி நான் கல்யாணம் பண்ணிக்கிட்டது அவங்களுக்குப் பொறுக்கலை. சிகரெட் பழக்கம் உள்ள என் கணவருக்கு விஷம் தோய்த்த சிகரெட்டைப் புகைக்கக் கொடுத்து அதன் காரணமா ஹார்ட் அட்டாக்கை வரவழைத்துக் கொன்னுட்டாங்க. போலீஸ் வந்து விசாரணை நடத்தி அவங்க ரெண்டு பேரோட ரூம்களை செக் பண்ணும்போது கட்டில் மெத்தைக்குக் கீழே மறைச்சு வெச்சிருந்த ஸ்லோபாய்ஸன் மெடிசன்ஸ் போலீஸ் கைக்குக் கிடைச்சதால வசமா மாட்டிக்கிட்டாங்க....”

நஞ்சுண்டா குறுக்கிட்டு கேட்டார்.

“இப்ப அந்த ரெண்டு பேரும் எங்கே இருக்காங்க... ஜெயிலிலா...? துர்கா மேலே கையைக் காட்டினாள். “ரெண்டு பேரும் மேலே போய் சேர்ந்துட்டாங்க. செஷன்ஸ்ல க்ளியர் ஜட்ஜ்மெண்ட். தூக்குத்தண்டனை. ஹைகோர்ட்டுக்கு அப்பீல் போனாங்க. நடக்கலை. தூக்குல தொங்கியே ஆகணும்ன்னு சொல்லிட்டாங்க... பிரஸிடெண்ட்டுக்கு கருணை மனு போட்டாங்க. தள்ளுபடி. 1994ஆம் வருடம் நவம்பர் பதிமூணாம் தேதியும். பதினைஞ்சாம் தேதியும் ரெண்டு பேரையும் ஒருநாள் விட்டு ஒருநாள் தூக்குல போட்டாங்க.”

நஞ்சுண்டா சில விநாடிகள் யோசனையில் இருந்துவிட்டு துர்காவிடம் நிமிர்ந்தார்.

“மேடம்... வல்லபை இழந்துட்ட பின்னாடி நீங்க வேற கல்யாணம் பண்ணிக்கலையா....?”

துர்கா வெறுமையாய் புன்னகைத்தாள். “மிஸ்டர் இன்ஸ்பெக்டர்! வல்லப் எனக்குக் கட்டிய தாலியை இதுவரைக்கும் நான் கழற்றவே இல்லை. வெளியுலகத்துக்கு வேணும்ன்னா நான் ஒரு விதவையா இருக்கலாம். பட்... மனசளவில் நான் இன்னமும் மிஸஸ் துர்கா வல்லப்தான். இந்த எஸ்டேட் வேலைகளையும் பார்த்துட்டு அவரோடு நான் மானசீகமா குடும்பம் நடத்திட்டு வர்றேன். நானும் அவரும் காதலர்களா இருந்தபோது பேசிக்கிட்டதையெல்லாம் டேப் பண்ணி வெச்சிருக்கேன். ராத்திரி நேரங்களில் அவரோட ஞாபகம் அதிகமாய் இருக்கும்போது அந்த கேசட்டைப் போட்டுக் கேட்பேன். என்னை மறு கல்யாணம் பண்ணிக்கச் சொல்லி அப்பா கேட்டுக் கேட்டுக் களைச்சு போயிட்டார். என்னைப் பொறுத்தவரைக்கும் இந்த மானசீக வாழ்க்கையே எனக்கு சந்தோஷமாயிருக்கு...”

“ஓ.கே! மேடம்...! நான் இப்போ இங்கே எதுக்காக வந்தேன்ங்கிறதை சொல்லிடறேன்...”

“சொல்லுங்க....”

“உங்களுக்கு மெட்ராஸ்ல ஜெயா-ஹரின்னு யாரையாவது தெரியுமா...?

“ஜெயா-ஹரி?”

“ஆமா....”

“நீங்க சொன்ன இந்த பேர்கள்ள எனக்கு யாரையும் தெரியாதே! ஏன்... அவங்களுக்கு என்ன?

“மேடம்...” இறந்து போன வல்லப்மேல இவ்வளவு பிரியம் வெச்சு மானசீகமா அவரோடு குடும்ப வாழ்க்கை நடத்திட்டு வர்ற உங்களுக்கு நான் இப்போ சொல்லப் போகிற ஒரு நியூஸ் ஆச்சர்யத்தைக் கொடுக்கும்”

துர்க்கா ஆர்வமானாள்.

“என்ன நியூஸ் சொல்லுங்க....”

“ஜெயாவுக்கு ஒரு தம்பி. பேர் வருண். வயசு எட்டு. இதுவரைக்கும் ஊட்டிக்கு வந்ததே இல்லை. இப்ப வந்திருக்கிறதுதான் முதல் தடவை. ஊட்டிக்கு வந்து ரெண்டு நாள்ல அவனோட நடவடிக்கைகள் எல்லாமே அடியோட மாறிடுச்சு. திடீர்ன்னு காணாமே போனான். பிறகு கிடைச்சான். தலையில் அடிபட்டிருந்த அவனை நடுவட்டம் ஹாஸ்பிட்டலுக்கு கொண்டுபோய் அட்மிட் பண்ணினோம். நேத்து மிட்நைட் ஹாஸ்பிட்டல்ல படுத்திருந்தவன் திடீர்னு எந்திரிச்சு வெளியே போனான். எங்கேதான் போறாங்கிறதை தெரிஞ்சுக்கிறதுக்காக நாங்களும் அவனை ஃபாலோ பண்ணினோம். அவன் போன இடம் எது தெரியுமா மேடம்?”

“எது...?”

“நடுவட்டம் பகுதியில் இருக்கிற கல்லறை. அந்தக் கல்லறையில் உங்க கணவர் வல்லப் புதைக்கப்பட்ட சமாதிக்கு முன்னாடி போய் வெறிச்சுப் பார்த்தபடி நின்னுக்கிட்டான். நான் அவனோட தோளைத் தட்டி “வருண்”னு கூப்பிட்டேன். அதுக்கு அவன் “என்னோட பேர் வருண் கிடையாது. ‘வல்லப்’னு சொல்றான்…”

“ஈஸிட்….?”

“அது மட்டும் இல்லை மேடம். உங்க பேரையும் அடிக்கடி சொல்றான். என்னை துர்க்காகிட்ட கூட்டிட்டுப் போங்க. நான் துர்காவைப் பார்க்கணும்னு சொல்றான்….”

“உண்மையாவா….?”

“எஸ் மேடம்…அந்த எட்டு வயசுப் பையன் பேசற பேச்சைப் பார்த்தா ஒரே பிரமிப்பா இருக்கு. ஹோட்டல் ப்ளூமவுண்டன்ல வேலை பார்க்கிற பேரர் கதிர்வேலு ஒன்பது வருஷத்துக்கு முன்னாடி உங்க பங்களாவில் சமையல்காரராய் வேலை பார்த்தாராமே உண்மையா?”

“ஆமாம்….”

“நேத்து மத்தியானம் வருண் அந்த ஹோட்டலுக்கு ஜெயா-ஹரியோடு சாப்பிடப் போனபோது கதிர்வேலுவைப் பார்த்து ‘உன்னோட பேர் கதிர்வேலுதானே’ன்னு கேட்டிருக்கான்….”

துர்கா இரண்டு கைகளையும் மார்புக்கு குறுக்காகக் கட்டிக்கொண்டு, “மை குட்னஸ்” என்றாள். “வெரி வெரி இண்ட்ரஸ்டிங்…. இன்ஸ்பெக்டர். நான் அந்த வருணைப் பார்க்கணுமே….”

“இன்னைக்கு சாயந்திரம் இங்கே கூட்டிட்டு வரட்டுமா…?

“ப்ளீஸ்….”

# 17

சாயந்திரம் நான்கு மணி. ஹோட்டல் அறையில் ஜன்னல் கம்பிகளைப் பிடித்தபடி வெளியே வெறித்து பார்த்துக் கொண்டிருந்தான் வருண்.

ஜெயா அழுத கண்களோடு இன்ஸ்பெக்டர் நஞ்சுண்டாவை ஏறிட்டாள்.

“ஸார்....! என்னோட தம்பி வருணை நாங்க மெட்ராஸுக்கு கூட்டிட்டுப் போயிடறோம். இப்போ துர்காகிட்ட கூட்டிட்டுப் போய் ஏதாவது பிரச்சனையாயிட்டா?”

“ஒரு பிரச்னையும் வராது. துர்கா வருணைப் பார்க்க ரொம்பவும் ஆவலாயிருக்காங்க....”

ஹரி குறுக்கிட்டான்.

“இன்ஸ்பெக்டர்....! இந்த கம்ப்யூட்டர் யுகத்துல இதை என்னால நம்ப முடியலை. ஒன்பது வருஷத்துக்கு முந்தி இறந்துபோன வல்லப்தான் இப்போதைய வருண் என்கிற விஷயம் பகுத்தறிவுக்கு அப்பாற்பட்டதாயிருக்கு..... வருணை இப்போ அந்த துர்காகிட்டே கூட்டிட்டுப் போனா திரும்பவும் அவன் எங்களுக்குப் பழைய வருண் மாதிரி கிடைப்பானா....”

“மிஸ்டர் ஹரி வருண்.....! இப்போ இருக்கிற நிலைமையில் நீங்க அவனை மெட்ராஸுக்குக் கூட்டிட்டு போறதும் ஆபத்து. மென்ட்டலி டிஸ்டர்ப்பாக நிறைய வாய்ப்பு இருக்கு. அவனோட வழியிலேயே விட்டுத்தான் நம்ம வழிக்குக் கொண்டு வரணும்....”

ஜெயா இடைமறித்தாள்.

“இன்ஸ்பெக்டர் சொல்றதும் ஒருவகையில் சரியாத்தான் இருக்கு. துர்காகிட்ட வருணைக் கூட்டிக்கிட்டுப் போவோம். அங்கே அவன் எப்படி நடந்துக்கறான்ங்கிறதை அப்ஸர்வ் பண்ணிட்டு அதுக்கப்புறமா ஒரு சைக்யாட்ரிஸ்ட்டைப் போய்ப் பார்ப்போம்.”

“சரி.....கிளம்புவோமா....?” சொன்ன இன்ஸ்பெக்டர் நஞ்சுண்டா ஜன்னல் பக்கமாய் திரும்பி நின்று கொண்டிருந்த வருணைக் கூப்பிட்டார்.

“வருண்....”

அவன் திரும்பவில்லை.

“வ...ரு...ண்.....”

பதில் இல்லை

ஜெயா கூப்பிட்டாள்

“வல்லப்..... ”

வருண் ஸ்லோமோஷனில் உடம்பைத் திருப்பினான். ”

“வா.....இப்படி.... ”

வந்தான்

“துர்காகிட்ட போலாமா?”

வருணின் கண்களில் மகிழ்ச்சி மின்னியது.

போலாம் என்பதற்கு அடையாளமாய் வருண் தலையசைத்தான். நஞ்சுண்டா கேட்டார்.

“துர்கா வீடு எங்கேன்னு உனக்குத் தெரியுமா...?”

“தெரியும்.... ”

“கார்ல போகும்பொது நீதான் வழி காட்டணும்.... ”

“எனக்கு வழி தெரியும்..... ” சொல்லிக்கொண்டே முன்னால் நடக்க ஆரம்பித்து விட்டான் வருண்.

போர்டிகோவிலேயே காத்திருந்தாள் துர்கா.

உடம்பு ஒரு கொடிக்கம்பமாய் மாறியிருக்க அதில் இருதயம் மாட்டிக் கொண்டு ஒரு கொடி மாதிரி பறந்தது.

“எட்டு வயசுப் பையன் தன்னை வல்லப்பாக நினைத்து என் பெயரைச் சொல்லிக் கொண்டிருக்கிறானா?”

“ஆச்சரியம்தான்.... ”

ஈஸி சேரில் சாய்ந்து கொண்டு பேப்பர் ஒன்றைப் புரட்டியபடி இருந்த உமாபதி மெல்லக் குரல் கொடுத்தார்.

“அம்மா துர்கா.... ”

“என்னப்பா?”

“மாப்பிள்ளை வல்லப் இறந்து போய் ஒன்பது வருஷமாச்சு. வரப்போற பையனுக்கு வயது எட்டு... மாப்பிள்ளைதான் அந்த பையனா பொறந்து வந்திருப்பார்ன்னு நினைக்குறேன். ”

“மறுஜென்மம்னு ஒண்ணு உண்டாப்பா?”

“கண்டிப்பா உண்டும்மா.... நிறைவேறாத ஆசைகளோடு இந்த ஜென்மத்தில் இறந்து போறவங்க அடுத்த ஜென்மத்திலும் அதே ஞாபகங்களோடு பிறக்கிறது சர்வ நிச்சயமான உண்மை. வெளிநாட்டுக்காரங்கள்ல எழுபது சதவீதம் பேர் மறுஜென்மம்னு ஒண்ணு இருக்கிறதை நம்பறாங்க. இந்த ரீ-ஜெனரேஷன் பற்றி பெரிய அளவுல ஆராய்ச்சிகளும் நடந்துட்டிருக்கு....”

உமாபதி சொல்லிக் கொண்டிருக்கும்போதே காம்பௌண்ட் கேட்டுக்குள் அந்தக் கார் நுழைவது தெரிந்தது.

“அப்பா....! அவங்க வந்துட்டாங்கன்னு நினைக்கிறேன்.....”

உமாபதி எழுந்து நின்றார்.

கார் போர்டிகோவுக்குள் வந்து சொருகிக்கொண்ட மாதிரி நின்றது

துர்கா ஆர்வமாய்ப் பார்க்க...

காரிலிருந்து முதல் ஆளாய் இன்ஸ்பெக்டர் நஞ்சுண்டா இறங்க அவரைத் தொடர்ந்து ஜெயா, ஹரி மறுபக்கம் கதவைத் திறந்துகொண்டு கால் பதித்தார்கள்.

கடைசியாய் வருண்.

மருண்ட பார்வையோடு சுற்றும் முற்றும் பார்த்தபடி இறங்கினான்.

போர்டிகோ படிகளின் உச்சியில் நின்றிருந்த துர்காவைப் பார்த்ததும் - கண்களில் பரவசம் பாய - உதடுகள் மெல்ல அசைந்தது.

“து....ர்......கா...”

இன்ஸ்பெக்டர் நஞ்சுண்டா தனக்குப் பக்கத்தில் நின்றிருந்த ஜெயாவையும் ஹரியையும் அறிமுகப்படுத்தி வைத்தார்.

துர்கா அவர்களுக்கு வணக்கம் சொல்லிக் கொண்டே வருணின் மேல் பார்வையைப் போட்டாள்.

வருண் அவளையே இன்னமும் புன்னகையோடு பார்த்துக் கொண்டிருந்தான்.

துர்கா போர்டிகோ படிகள் இறங்கி வருணுக்குப் பக்கத்தில் வந்து நின்றாள்.

அவன் புன்னகை பெரியதாகியது.

“துர்கா...”

“ம்...”

“எப்படியிருக்கே....? நான் யார்ன்னு உனக்குத் தெரியுதா...?

“தெரியலையே....”

வருண் பெரிய மனுஷன் போல் மார்புக்குக் குறுக்காகக் கைகளைக் கட்டிக்கொண்டு சிரித்தான்.

“நான்தான் .....உன்னோட வல்லப்....”

“அப்படியா....?”

“என்ன அப்படியான்னு கேட்கறே? என்னை நீ மறந்துட்ட போலிருக்கு....”

துர்கா பிரமிப்பும் குழப்பமுமாய் வருணையே பார்த்துக் கொண்டிருக்க, இன்ஸ்பெக்டர் நஞ்சுண்டா அவள் காதோரம் வந்து ஹஸ்கி வாய்ஸில் சொன்னார்.

“மேடம்....! கார்ல வரும்போது உங்க எஸ்டேட் பங்களாவுக்கு வழி சொன்னதே வருண்தான்! காம்பௌன்ட் கேட்ல இருக்கிற வாட்ச்மேனைப் பார்த்ததும் “என்ன போஜன் சௌக்கியமா?”ன்னு கேட்டான். வாட்ச்மேன் அசந்து போயிட்டான்... நீங்க வருண்கிட்ட பேசும்போது வல்லப் மாதிரியே அவனை நினைச்சுட்டுப் பேசுங்க... அப்பத்தான் அவன் குழப்பம் இல்லாமே பேசுவான்.”

சரியென்று தலையாட்டிய துர்கா, வருணிடம் குனிந்து கேட்டாள்.

“வாங்க....வல்லப் உள்ளே போலாம்.”

துர்காவைப் பின்தொடர்ந்து நடந்த வல்லப் உமாபதியைப் பார்த்ததும் மலர்ந்தான்.

“மாமா....” பக்கத்தில் போய் அவருடைய கைகளைப் பற்றிக்கொண்டு கேட்டான்.

“உங்களுக்கு அடிக்கடி நெஞ்சுவலி வருமே. இப்ப பரவாயில்லையா மாமா...?”

உமாபதி நெகிழ்ந்து போய் வருணின் கன்னத்தை மெல்ல தட்டிக்கொடுத்தார்.

“உடம்புல இந்த உசிரை வெச்சுகிட்டு இன்னும் நல்லாத்தான் இருக்கேன்....”

“முன்னைக்குப் பார்த்ததைவிட இளைச்சு போயிட்டீங்க.....! துர்கா, நீ உன்னோட அப்பாவை சரியாவே கவனிச்சுக்கிறதில்லை போலிருக்கே.... சொல்லிக்கொண்டே சுற்றும்முற்றும் பார்த்தவன் துர்காவை ஏறிட்டான்.

“அந்தப் புல்தரை லானுக்கு நடுவுல ஒரு குளம் இருந்ததே....?”

“அதை மூடிட்டோம்.”

“ஏன்....?”

“தோட்டக்காரன் குழந்தை ஒண்ணு அந்தக் குளத்துக்குள்ளே தவறி விழுந்து இறந்து போச்சு. குளத்தைப் பார்க்கும்போதெல்லாம் அந்தக் குழந்தையோட ஞாபகம் வந்தது.

அதான் மூடிட்டோம்....”

வருண் பங்களாவுக்குள் நுழைந்தான். எல்லோரும் பின்தொடர்ந்தார்கள்.

ஹாலைச் சுற்றிப் பார்த்த வருண் மாடிப்படிகளுக்குப் பக்கத்தில் போய் நின்று கொண்டு “துர்கா” என்றான்.

“என்னங்க....?”

“வீட்டோட அமைப்பு மாறியிருக்கே....?”

“ரெண்டு வருஷத்துக்கு முந்தித்தான் ரீகன்ஸ்ட்ரக்ட் பண்ணினோம்...”

மாடிப்படிகளில் ஏறினான் வருண். கைகளைப் பின்னுக்குக் கட்டிக்கொண்டு பெரிய மனுஷத் தோரணையில் எல்லாப் பக்கமும் பார்த்துக் கொண்டு மாடியில் உள்ள ஒவ்வொரு அறையாய் பார்த்து அந்த அறையில் உள்ள மாற்றங்களை பற்றி சொல்லிக் கொண்டே வந்தான்.

எல்லாமே துல்லியம்.

வருண் சொல்லச் சொல்ல துர்காவுக்கு வியப்பில் நெஞ்சை அடைத்தது.

வராந்தாவில் நடந்து அந்தக் கடைசி அறைக்கு முன்பாய் வந்து நின்ற வருண் லேசாய் முகம் மாறினான்.

அறையின் கதவில் ஒரு பெரிய பூட்டு

கேட்டான்.

“ஏன் இந்த அறை பூட்டியிருக்கு....?”

துர்கா ஒரு பெருமூச்சோடு வருணைப் பார்த்தாள். “இது எந்த ரூம்ன்னு உங்களுக்கு ஞாபகம் வரலையா?”

வருண் பத்து விநாடி யோசிப்புக்குப் பின் புன்னகைத்தான்.

“புரியுது. நாம் வாழ்க்கையை ஆரம்பிக்கிறதுக்காகக் கல்யாணமான முதல்நாள் ராத்திரி இந்த அறைக்குள்ளே நுழைஞ்சோம். ஆனா, நான் மட்டும் வெறும் உடலா வெளியே வந்தேன்.”

துர்காவின் கண்களில் நீர் துளிர்த்து பளபளத்தது.

வருண் சொன்னான். “நான் இந்த அறையைப் பார்க்கணும்.”

உமாபதி இன்ஸ்பெக்டரிடம் சொன்னார்.

“அந்த அறையைப் பூட்டி வெச்சு ஒன்பது வருஷமாச்சு. உள்ளே ஒரே தூசியும் தும்புமா இருக்கும்.”

நஞ்சுண்டா கிசுகிசுத்தார். “பரவாயில்லை.....ஓப்பன் பண்ணுங்க. பார்க்கட்டும். இதையெல்லாம் பார்க்க வெச்ச பின்னாடிதான் அவனை ஒரு சைக்கியாட்ரிஸ்ட்கிட்டே கூட்டிட்டுப் போகமுடியும். வல்லபைப் பத்தின பழைய நினைவுகளை எல்லாம் அழிச்சு வருணை வருணாக மாத்த முடியும்....”

உமாபதி கொஞ்சம் தள்ளி நின்றிருந்த வேலைக்காரனைப் பார்த்துக் கையசைக்க அவன் ஓடிப்போய் ஒரு சாவிக்கொத்தோடு வந்தான்.

பூட்டுக்கு சாவியைக் கொடுத்து சிரமப்பட்டு நெம்ப அது “க்ளிக்” என்ற பெரிய சத்தத்தோடு திறந்து கொண்டது.

வேலைக்காரன் கதவைத் தள்ளினான்.

எல்லோருடைய பார்வையும் உள்ளே போயிற்று.

ஒன்பது வருஷங்களுக்கு முன்னாள் கட்டிலை அலங்கரித்த மலர்ச்சரங்கள் வாடி சருகாகி உலர்ந்து தொங்கிக் கொண்டிருக்க அறையின் மூலைகளில் நூலாம்படையும் தூசியும் அடைஅடையாய் காய்த்துப் பரவியிருந்தது. அறையில் விழுந்த வெளிச்சத்தின் காரணமாய் உள்ளே ஊர்ந்து கொண்டிருந்த எலிகள் விருட்விருட்டென்று ஓடி மறைந்தன.

வருணின் முகம் இப்போது வெகுவாய் மாறியிருந்தது. நெற்றிப் பரப்பில் லேசாய் வியர்வை.

அறையையே வெறித்துப் பார்த்துக் கொண்டு நின்றிருந்தான்.

நஞ்சுண்டா அவன் தோள்மேல் மெல்ல கையை வைத்தார்.

“வல்லப்....”

“.....”

“வல்லப்....”

“ம்....”

“ரூமுக்குள்ளே போகலையா?

“வே.... வேண்டாம்.....”

“ஏன்?”

“ப...ப... பயம்மாயிருக்கு....”

“என்ன பயம்? உள்ளே போ...”

“மாட்டேன்....” சொல்லிக் கொண்டிருக்கும்போதே வருணின் உடல் ஒருவித நடுக்கத்துக்கு உட்பட்டது. விழிகள் நிலைகுத்தி இடது பக்கமாய், துவண்ட கீரைத் தண்டாய் கீழே சரிந்தான்.

சரிந்த வருணை நஞ்சுண்டா தாங்கிப் பிடித்துக் கொண்டு ஹரியைப் பார்த்துக் குரல் கொடுத்தார்.

“ஹரி! அந்த சைக்யாட்ரிஸ்ட் டாக்டர் அற்புதராஜுக்குப் போன் பண்ணி உடனே வரச் சொல்லுங்க...”

ஹரி டெலிபோனை நோக்கி ஓடினான்.

# 18

சைக்யாட்ரிஸ்ட் அற்புதராஜ் மயக்கமாய்க் கிடந்த வருணை சோதித்துப் பார்துவிட்டு- சுற்றி நின்றிருந்த எல்லோரையும் பொதுப்படையாய் பார்த்துக்கொண்டு சொன்னார்.

“பையன் மென்டலி ரொம்பவும் ‘டிஸ்டர்ப்’ ஆகியிருக்கான். இவனை உடனடியா ஒரு நல்ல மென்டல் ஹாஸ்பிட்டல்ல அட்மிட் பண்ணி ட்ரீட்மென்ட் எடுக்கறது ரொம்பவும் நல்லது. இதே நிலையில் இவனை விட்டுட்டா மனநிலை வெகுவா பாதிக்கப்பட்டு பைத்தியமா மாறவும் சாத்தியம் இருக்கு....”

“டாக்டர்....” ஜெயா கண்ணீரோடு கைகளைக் கூப்பினாள். “நீங்களே உடனடியா ஏதாவது ட்ரீட்மெண்ட் கொடுக்க முடியாதா?”

இப்போதைக்கு இவனுக்கு மயக்கம் தெளிய இஞ்செக்ஷன் மட்டுமே போடலாம். பட் .... மயக்கம் தெளிஞ்சா அவனடைய பிஹேவியர் எப்படியிருக்கும்னு சொல்ல முடியாது. இஞ்செக்ஷன் போடறதைவிட இவனை மயக்கத்திலேயே வெச்சிருந்து மெட்ராஸ் கொண்டு போய் ஹாஸ்பிடல்ல அட்மிட் பண்ணி உடனடியா ட்ரீட்மெண்ட்டை ஆரம்பிச்சுடறது உத்தமம்.”

துர்கா கவலை தோய்ந்த முகத்தோடு டாக்டரை ஏறிட்டாள்.

“டாக்டர்....! வருண் யாரோ ஒரு பையன் கிடையாது. ஒன்பது வருஷங்களுக்கு முன்னாடி இறந்து போன என்னோட கணவர், இப்போ வருண் உருவத்துல இருக்கார். வருண் இனிமேல் இங்கேதான் இருக்கணும். பணம் எவ்வளவு செலவானாலும் பரவாயில்லை. இதே பங்களாவில வெச்சு ட்ரீட்மெண்ட் எடுத்து எனக்கு வல்லபா மாத்திக் கொடுங்க....”

ஜெயா வெகுண்டாள். “என்ன வார்த்தை சொன்னீங்க துர்கா? வருணை வல்லபா மாத்தித் தர்றதா...? அப்படீன்னா வருணை நாங்க இழந்துடணும்ன்னு சொல்ல வர்றீங்களா?”
“நான் அப்படி சொல்லலை.”

“பின்னே நீங்க பேசினதுக்கு என்ன அர்த்தம்...?”

குரலை உயர்த்திக் கத்திய ஜெயா ஹரியிடம் திரும்பினாள்.

“என்னங்க....இந்த ஊட்டியைவிட்டு இந்த நிமிஷமே நாம கிளம்பியாகணும். வருணை மெட்ராஸ்ல ஒரு நல்ல சைக்யாட்ரிஸ்ட்கிட்ட காட்டி ட்ரீட்மெண்ட் எடுக்கலாம். இவங்களைப் பத்தி நாம கவலைப்பட வேண்டிய அவசியமே இல்லை. வருணை எடுத்துக்குங்க. நாம கிளம்பலாம்.”

ஹரி வருணை நோக்கிப் போக நஞ்சுண்டா இடைமறித்தார். “மிஸ்டர் ஹரி.... வருண் இன்னும் இங்கே ரெண்டு நாள் இருக்கட்டும்… பார்த்துட்டுக் கிளம்பலாம்.”

“வேண்டாம்.... இன்ஸ்பெக்டர்.... வருணை இங்கே இருக்க வெச்சா எல்லார்க்கும் பிரச்னைதான். நாங்க மெட்ராஸுக்கு போயிட்டா ஒருவேளை வருணுக்கு வல்லப் நினைவுகள் வராமலே கூட இருக்கலாம்... நாங்க இன்னிக்கே கிளம்பறோம்....”

கட்டிலில் கிடந்த வருணை இரண்டு கைகளாலும் வாரிக் கொண்டான் ஹரி.

“ஹரி.... ப்ளீஸ்....”

“ஸாரி....”

வருணைத் தூக்கிக்கொண்டு ஹரி நடக்க ஆரம்பித்துவிட, ஜெயா அழுத கண்களோடு கணவனைப் பின்தொடர்ந்தாள்.

# 19

இரவு பதினொரு மணி.

துர்கா தன் சீயாலோ காரை குந்தா போகும் பாதையில் விரட்டிக் கொண்டிருந்தாள். கடுமையாய் வீசிக்கொண்டிருந்த குளிர் காற்றிலும் முகம் எண்ணெய் தடவியது மாதிரி வியர்த்துப் போயிருந்தது.

இருபது கிலோமீட்டர் தூரத்தை விழுங்கிய கார், மரங்கள் அடர்ந்த ஒரு வளைவில் திரும்பி ஹெட்லைட்களை அணைத்துக் கொண்டு நின்றது.

தலைக்கு ஸ்கார்ப்பை இழுத்துக் கட்டிக் கொண்டு இறங்கினாள்.

இருட்டு எல்லாப் பக்கமும் ஈஷியிருந்தாலும் நட்சத்திர வெளிச்சம் அதைத் துடைத்து வைத்திருக்க உருளைக்கிழங்கு செடிகள் மண்டிய தோட்டத்து வழியாய் நடந்து அந்த ஓட்டு வீட்டுக்கு முன்பாய் வந்து நின்றாள்.

சுற்றும்முற்றும் பார்த்துவிட்டு கதவைத் தட்டினாள்.

“டொக்....டொக்...”

உள்ளே நிசப்தம்.

மறுபடியும் தட்டினாள்.

“டொக்...டொக்...”

இப்போது இருமல் சத்தத்தோடு ஓர் ஆண் குரல் கேட்டது.

“யாரு...?”

துர்கா கதவு இடுக்கில் உதட்டை வைத்துக் குரல் கொடுத்தாள்.

“ஜோசியரே....! நான்தான்...!”

அடுத்த பத்து விநாடிகளுக்குள் இருமல் சத்தத்தோடு கதவு திறக்கப்பட்டது.

கதவைத் திறந்தவர் ஜோசியர் மாதையா. கம்பளியைப் போர்த்திக் கொண்டிருந்தவர் குரல் நடுங்கக் கேட்டார்.

“அ.....அம்மா....துர்கா.....நீயா....? என்னம்மா இந்த நேரத்துல....? ஒரு வார்த்தை சொல்லி விட்டிருந்தா நானே வீட்டுக்கு வந்திருப்பேனே....?”

“ஒரு முக்கியமான விஷயமா வந்தேன்....ஜோசியரே...! நம்ம வீட்ல வெச்சு அதைப் பேச முடியாது.”

“என்ன விஷயம்... உள்ளே வாம்மா”

துர்கா உள்ளே போனாள். அவர் மட்டுமே தங்கியிருந்த சிறிய வீடு அது.

ஜோசியர் மாதையா ஒரு ஸ்டூலை எடுத்துப் போட்டார்.

அவள் உட்கார்ந்ததும் கேட்டார்.

“என்ன விஷயம் சொல்லும்மா?”

“மறு ஜென்மம், செத்துப்போனவங்க இன்னொரு பிறவி எடுத்துட்டு வர்றது இதெல்லாம் உண்மையா ஜோசியரே....?”

“இந்த நேரத்துக்கு எதுக்காகம்மா இந்தக் கேள்வி...?”

“கேட்ட கேள்விக்கு பதில் சொல்லங்க ஜோசியரே....?”

“சில பேர் உண்மைன்னு சொல்றாங்க. அதைக் கட்டுக்கதைன்னு சொல்றவங்களும் உண்டு.”

“அது கட்டுக்கதை கிடையாது ஜோசியரே!”

“நீ என்னம்மா சொல்றே?”

“என்னால கொலை செய்யப்பட்ட வல்லப் மறுபடியும் பொறந்து வந்திருக்கார்....”

“என்னது? வல்லப் மறுபடியும் பொறந்து வந்திருக்கானா....?

“ஆமா ஜோசியரே! இந்த ஜென்மத்துல அவர பேர் வருண். எட்டு வயசுப் பையன். பொறந்த இடம் மெட்ராஸ்.”

“நிஜமாவா...?”

“நானே அசந்து போயிட்டேன் ஜோசியரே! சாயந்தரம் அந்த வருண் நம்ம எஸ்டேட் பங்களாவுக்கு வந்திருந்தான். வாட்ச்மேனைப் பார்த்து “என்ன போஜன் சௌக்கியமா”ன்னு கேட்டிருக்கான். வல்லப் உயிரோடு இருந்தப்ப நம்ம பங்களா எப்படி இருந்ததோ.... அதை அப்படியே சொல்றான். முதல்இரவு நடந்த அறைக்கு வந்ததும் அதைத் திறக்கச் சொல்லிப் பார்த்துட்டு அப்படியே மயக்கமாயிட்டான்.”

ஜோசியர் மாதையா திகைப்பில் இருந்தார். “நீ சொல்றதெல்லாம் நம்பற மாதிரியே இல்லையேம்மா...”

“நம்பித்தான் ஆகணும் ஜோசியரே....! இப்ப நான் இங்கே வந்தது எதுக்காகத் தெரியுமா...?”

“சொல்லும்மா....”

“இந்த ஜென்மத்துல வருணாக வந்திருக்கிற வல்லப்புக்கு அவனைக் கொலை செய்தது நான்தான்ங்கிற உண்மை தெரிஞ்சிருக்குமா....? ஒருவேளை தெரிஞ்சிருந்தா அது வெளியே வராதபடிக்கு செய்ய என்ன வழின்னு கேட்டுத் தெரிஞ்சுக்கத்தான் வந்தேன்.....”

ஜோசியர் பதில் சொல்லும்முன் கதவருகே அந்தப் பெண் குரல் கேட்டது.

“அதுக்கு வழி நான் சொல்றேன் துர்கா.”

துர்கா அதிர்ந்து போய் கதவுக்கு வெளியே பார்வையைக் கொண்டு போக இன்னமும் பலமாய் அதிர்ந்தாள்.

ஜெயா நின்றிருந்தாள்.

“நீ....நீயா....?”

ஜெயா புன்னகைத்தாள்.

“நானேதான் துர்கா....! நீ இந்த ஜோசியரைப் பார்க்க எப்படியும் இந்த ராத்திரி நேரத்துல வருவேன்னு எனக்குத் தெரியும். அதான் ராத்திரி எட்டு மணியிலிருந்து இங்கே வெயிட் பண்ணிட்டிருக்கேன். என்னோட எதிர்பார்ப்பு வீண் போகலை. வந்து மாட்டிக்கிட்டே. உன்னோட வாக்குமூலத்துக்கு நன்றி. என்ன அப்படி பார்க்கிறே? எந்த வாக்குமூலம்ன்னு கேட்கறியா...? ஒன்பது வருஷத்துக்கு முந்தி வல்லப்பை நீ கொலை பண்ணினதாய் ஒத்துக்கிட்டயே அதுக்காக....”

துர்கா கோபாவேசமாய் ஜெயாவை நோக்கி வர ஜெயா சட்டென்று விலகி நின்று கொண்டு தன் இடுப்பைத் தொட்டு ரிவால்வரை எடுத்து துர்காவை நோக்கி நீட்டினாள்.

“துர்கா! நீ நினைக்கிற மாதிரி நான் சாதாரணமான பெண் கிடையாது. போலீஸ் டிபார்ட்மெண்ட் சி.பி.சி.ஐ.டி-யில் யூனிஃபார்ம் அணியாத ஒரு போலீஸ் அதிகாரி. 1994-ல் தூக்கில் போடப்பட்ட உன்னோட சித்தப்பா தயாநிதியும் தாய்மாமன் சுதாகரும் தாங்கள் தூக்கில் போடப்படுறதுக்கு முந்தி உங்க கடைசி ஆசை என்னான்னு கேட்டபோது “வல்லப்பை நாங்கள் கொலை செய்யலை. சாட்சியமும் சட்டத்தோட இரும்புப் பிடியும் எங்களைத் தூக்குமேடைக்குக் கொண்டு வந்துடுச்சு. ஆனா உண்மையான கொலையாளி அந்த எஸ்டேட் பங்களாவுக்குள்ளேதான் இருக்கணும். நாங்கள் தூக்கில் போடப்பட்ட பிறகாவது அந்த உண்மையான குற்றவாளி கண்டுபிடிக்கப்படணும். இதுதான் எங்களுடைய கடைசி ஆசை”ன்னு சொல்லியிருந்தாங்க. போன வருஷத்துல ஒரு நாள் அவங்க சம்பந்தப்பட்ட ஃபைல் ஒண்ணைப் படிச்சுப் பார்க்கும்போது அவங்க ஆசை எனக்கு ஒரு நெருடலா பட்டது. என்னோட கணவருக்குக் கூடத் தெரியாமே நான் மட்டும் ஊட்டிக்கு வந்து சிலநாள் தங்கி உன்னைக் கண்காணிக்க ஆரம்பிச்சேன். யாருக்கும் சந்தேகம் வராதபடிக்கு உன்னைப் பத்தி விசாரிச்சு எல்லா விவரங்களையும்

தெரிஞ்சுக்கிட்டேன். அதுக்கப்புறம்தான் உன்னைப் பிடிக்க ஒரு வியூகம் போட்டேன். என்னோட தம்பி வருணும் இன்ஸ்பெக்டர் நஞ்சுண்டாவும் இந்த வியூகத்துக்கு முக்கியமானவங்க. எட்டு வயது வருணுக்கு வல்லபா நடிக்கிறதுக்காக நிறைய ட்ரெய்ன் அப் பண்ண வேண்டியிருந்தது. நாங்க எதிர்பார்த்ததுக்கு மேலாவே நல்லா நடிச்சான். இப்படி ஒரு வியூகம் போட்டது என்னோட கணவருக்குக் கூடத் தெரியாது. அவருக்குத் தெரியப்படுத்தாதற்குக் காரணம் என்னோட கணவருக்கு இயல்பா நடிக்கத் தெரியாது. அதுவுமில்லாமே கொஞ்சம் பயந்த சுபாவம் வேற. இந்த மாதிரியான விபரீத வியூகமெல்லாம் வேண்டாம்ன்னு சொல்லிடுவார். ஸோ, அவருக்குத் தெரியாமலே இந்த வியூகத்தை ஊட்டியில் அரங்கேற்றம் பண்ணினோம். அதுக்குத் தகுந்த பலன் கிடைச்சாச்சு.

ஜெயா பேசி முடிக்க -

இருட்டின் இன்னொரு பகுதியிலிருந்து இன்ஸ்பெக்டர் நஞ்சுண்டா வெளிப்பட்டார்.

சொன்னார்.

“இனி எங்களுக்குத் தெரிய வேண்டியதெல்லாம் நீ காதலிச்சுக் கல்யாணம் பண்ணிக்கிட்ட வல்லபை நீ எதுக்காகக் கொலை பண்ணினே....? கொலையைப் பண்ணினது மட்டும் இல்லாமே உன்னோட தாய்மாமனையும் சித்தப்பாவையும் ஏன் போலீஸ்ல மாட்டிவிட்டு தண்டனை வாங்கிக் கொடுத்தே?”

ஜெயா புன்னகைத்தாள்.

“துர்காவும் சரி ஜோசியரும் சரி ரெண்டு பேரும் இப்போதைக்கு வாய் அடைச்சுப் போயிருக்காங்க. ஸ்டேஷனுக்குக் கொண்டு போயிட்டா அங்கே வெச்சு எல்லாத்தையும் சொல்லிடுவாங்கன்னு நினைக்கிறேன்... ஸ்டேஷனுக்குப் போலாம் வர்றீங்களா.... அந்தப் பக்க இருட்டுல போலீஸ் ஜீப் காத்திட்டு இருக்கு.....”

# 20

போலீஸ் ஸ்டேஷன் லாக்கப்.

நள்ளிரவு பனிரெண்டு மணி.

ஜோசியரை சுவரோர மூலையில் உட்கார வைத்து விட்டு - துர்காவுக்கு ஒரு ஸ்டூல் கொடுத்து அவள் உட்கார்ந்ததும் ஜெயா அவள் தோளைத் தொட்டாள்.

“ம்... சொல்லு... வல்லபை எதுக்காகக் கொலை பண்ணினே...?”

துர்கா சிலவிநாடிகள் கண்ணை மூடிக்கொண்டிருந்து விட்டுப் பிறகு தெளிவாய் பேச ஆரம்பித்தாள்.

“வல்லபை ஆரம்பத்துல நான் உயிருக்கு உயிரா நேசிச்சேன். அவனோட காதல் கிடைச்சதுக்காக ராத்திரி நேரங்கள்ல தூக்கம் வராமே சந்தோஷப்பட்டிருக்கேன். ஆனா ஒருநாள் அவனோட சுயரூபம் தெரிஞ்சது. கேரளாவிலிருந்தும் தமிழ்நாட்டிலிருந்தும் வெடிகுண்டுகளைத் தயார் பண்ணி நாட்டில் இருக்கிற சமூக விரோத சக்திகளுக்குச் சப்ளை பண்ற பாதகத் தொழில் செய்யறாங்கிற உண்மை எனக்குத் தெரிஞ்சதும் அதிர்ச்சியா இருந்தது. போலீஸுக்குப் போய் புகார் கொடுத்து சட்டரீதியா அவனைத் தண்டிக்கிறதைக் காட்டிலும் அந்தத் தண்டனையை நாமே கொடுத்தா என்னான்னு எனக்குத் தோணிச்சு. அவனோட இறப்பில் நாளைக்கு யாருக்கும் எந்தச் சந்தேகமும் வந்துவிடக் கூடாதேங்கிறதுக்காக ஜோசியர் மாதையாவை விட்டு வல்லப்போட ஜாதகத்துல களத்ர தோஷம் இருக்கிறதாக சொல்லச் சொன்னேன். அவரும் சொன்னார். பட்.... ஜோசியருக்கு நான் வல்லபைக் கொலை செய்யறதுல இஷ்டமில்லை. வேண்டாம்னு சொல்லிப் பார்த்தார். நான் கேட்கலை. அந்த வல்லப் பாவியை முதலிரவிலேயே முடிச்சேன்... அவனுடைய சிகரெட் பாக்கெட்டுல இருக்கிற சிகரெட்டை எல்லாம் எடுத்து பாய்சன்ல ‘டிப்’ பண்ணி வெச்சது நான்தான். அதுக்கப்புறம் அந்தப் பாய்சன் பாட்டிலை என்னோட தாய்மாமன், சித்தப்பா ரூம்ஸ்ல வெச்சதும் நான்தான்....”

நஞ்சுண்டா கேட்டார்.

“வல்லப்போட கொலையில் அந்த ரெண்டு பேரையும் ஏன் மாட்டி விட்டே....? ரெண்டு நிரபராதிகள் அநியாயமா தூக்குல தொங்கிட்டாங்களே?”

துர்கா வெறுமையாய்ப் புன்னகைத்தாள்.

“வல்லப் கொலையைப் பொறுத்த வரைக்கும் அவங்க நிரபராதிகள்தான். ஆனா அதுக்கு முன்னாடி அவங்க ஒரு கொலையைப் பண்ணியிருக்காங்களே... அந்தக் கொலைக்காகத்தான் தூக்குல தொங்கியிருக்காங்க...”

“இன்னொரு கொலையா....?”

“ஆமா....கொலை செய்யப்பட்டது என்னோட அம்மா. பதினைஞ்சு வருஷங்களுக்கு முந்தி அப்பா பிசினஸ் விஷயமா வெளியூர் போயிருந்தபோது என்னோட தாய்மாமாவும், சித்தப்பாவும் அம்மாவை மிரட்டிப் பணம் கேட்டிருக்காங்க. பணம் தரமாட்டேன்னு அம்மா சொன்னதுக்காக அம்மாவை மாடியிலிருந்து கீழே தள்ளி கொன்னுட்டாங்க. போலீஸுக்குப் பணம் கொடுத்துக் கொலையை விபத்தா மாத்திட்டாங்க. அந்தக் கொலையை நேர்ல பார்த்த ஒரே சாட்சி ஜோசியர்தான். அவர் மூலமாகத்தான் இந்த உண்மையும் தெரிஞ்சது. ரெண்டு பேரையும் பழி தீர்க்க ஒரு நல்ல சமயத்தை எதிர்பார்த்துட்டிருந்தேன். வல்லப் விவகாரம் கிடைச்சது. உபயோகப்படுத்திக்கிட்டேன்.”

ஜெயா துர்காவின் தோளில் கை வைத்தாள்.

“துர்கா! உன்னை நேர்ல பார்க்கும் போது சாதுவாவும் சாஃப்ட்டாவும் தெரியறே... உனக்குள்ளே இப்படி ஒரு கொலை வெறியா....?”

“இது கொலை வெறியில்லை மிஸஸ் ஜெயா. நியாயமான என்னோட கோபம் இது. குற்றவாளிகள் யாராக இருந்தாலும் சரி தப்பக் கூடாது. இது சட்டத்தோட வேதம். வேதவாக்கு. அந்த வேதவாக்கை நீங்க யூனிஃபார்ம் போட்டுக்கிட்டு பண்றீங்க. நான் சேலை கட்டிக்கிட்டுப் பண்றேன். வித்தியாசம் அவ்வளவுதான்.”

சொல்லிவிட்டு சிரிக்கும் துர்காவை இன்னமும் அதிசயத்தோடு பார்த்தாள் ஜெயா.

**(முற்றும்)**

# ஆகஸ்ட் 5 அதிகாலை

## 1

“உன்னால நிச்சயமா முடியுமா சிபி?”

“முடியும்.”

“பின்னாடி ‘ஸாரி’ன்னு சொல்லக்கூடாது.”

“நான் இதுவரைக்கும் யார்க்கும் ‘ஸாரி’யை சொல்லித் தலையை சொறிஞ்சது கிடையாது. அது உனக்குத் தெரியுமா?”

“நீ நினைக்கிற மாதிரி அது சாதாரண காரியம் கிடையாது சிபி!”

“தெரியும்! நல்லாவே தெரியும். ரொம்ப ரொம்ப கஷ்டமான காரியம்தான்!”

“பின்னே எப்படி உன்னால முடியும்னு சொல்றே?”

“காரணம்! எனக்கு கிடைக்கப் போகிற பணம். சொன்ன மாதிரி ஒரு கோடி ரூபாய் வாங்கிக் கொடுத்துடுவே இல்லையா?”

“கண்டிப்பா!”

“அப்படின்னா வேலையை செஞ்சு முடிக்க நானும் தயார்.”

“சரி! கார்ல ஏறு. பார்ட்டிகிட்ட போய்ப் பேசலாம்.”

அந்த இருபத்தைந்து வயது சிபி அந்த ராத்திரியான 9.05 மணியளவில் அந்த வழுக்கைத்தலை நபரோடு புறப்பட்டான்.

க்ரே க்ளாஸிக் காண்டஸா கார். உள்ளே ஏர் கண்டிஷனர் ‘ஹம்ம்ம்’ பண்ணியது. வழுக்கைத்தலை காரை ட்ரைவ் பண்ண ஹைவேஸ் ரோட்டில் ஹெட்லைட் வெளிச்சத்தில் அது எண்பது கிலோ மீட்டர் வேகத்தில் நீந்தியது.

சிபி கேட்டான்.

“இப்பவாவது சொல்லு... பார்ட்டி யாரு?”

“போன பின்னாடி நீயே தெரிஞ்சுக்குவே.”

“நான்தான் ஒத்துக்கிட்டேனே. இனியும் என்ன மூடு மந்திரம்?”

வழுக்கைத்தலை சிரித்தது.

“உன்கிட்ட நான் எல்லாத்தையும் பேசிட முடியாது சிபி. என்னோட லிமிட்டைத் தாண்டி நான் எதுவும் பேசக் கூடாது. பார்ட்டி சொன்ன அந்த வேலையைச் செய்ய உன் ஒருத்தனால முடியும்ங்கிற ஒரேயொரு காரணத்துக்காகத்தான் உன்னைத் தேடி வந்தேன்.”

சிபி ஒரு சிகரெட்டைப் பற்ற வைத்துக் கொண்டு சிரித்தான். “இதுவரைக்கும் நான் இவ்வளவு பெரிய தொகைக்கு பேரம் பேசினதே இல்லை. ஒரு கோடி ரூபாய் பிசினஸ். பார்ட்டி நிச்சயமா ஒரு ஊழல் அரசியல்வாதியாகத்தான் இருக்கணும்னு நான் நினைக்கிறேன். சரியா?”

“எனக்குத் தெரியாது.”

“நீ யார்கிட்டேயும் இவ்வளவு விசுவாசமா இருந்து நான் பார்த்தது இல்லை. பார்ட்டி நிச்சயம் பவர்ஃபுல்தான்.”

வழுக்கைத்தலை பதில் பேசாமல் காரின் வேகத்தை அதிகப்படுத்தி ஹைவேஸ் ரோட்டில் மேலும் பத்து கிலோ மீட்டர்களை விழுங்கிவிட்டு - மரங்கள் அடர்ந்த ஒரு பகுதிக்குள் நுழைந்தான்.

“இது எந்த ஏரியா?”

“டாகூர் அவென்யூ... இது ஒரு ரிசார்ட் ப்ளேஸ்.”

கார் மரங்களுக்கு மத்தியில் நிதான வேகத்தில் ஓடி காட்டேஜ் மாதிரியான ஓரிரு வீடுகளைக் கடந்து பின் இயக்கத்தை நிறுத்திக் கொண்டு ஒரு வீட்டுக்கு முன்னால் மௌனமாயிற்று.

சிபி எட்டிப் பார்த்தான்.

இருட்டில் வெளிச்சச் சிதறல்களோடு அந்த பங்களா பெரிய காம்பௌண்ட் சுவரோடு தெரிந்தது.

வழுக்கைத்தலை கார் ஹார்னை சிக்கனமாய் கொடுக்க - காம்பௌண்ட் கேட் ஏதோ திரை விலகுவது போல் விலகி நிற்க கார் உள்ளே போய் போர்டிகோவில் ஒதுங்கி நின்றன.

சிபி கீழே இறங்கினான்.

மெலிதாய் பொழிந்த ப்ளட்லைட் வெளிச்சத்தில் கொரியன் க்ராஸ் லான் கரும்பச்சையாய் பார்வைக்குக் கிடைத்தது. லானுக்குக் கொஞ்சம் தள்ளி தொட்டிகளில் க்ரோட்டன்ஸ் இலைகள் நிறம் நிறமாய் சிரித்தன.

“வா சிபி! வேடிக்கை பார்த்தது போதும்” தோளில் கைவைத்து உள்ளே கூட்டிப் போனான் வழுக்கைத் தலை.

சிபி நடந்தான்.

பார்வைக்கு யாரும் கிடைக்கவில்லை.

ஹாலைக் கடந்தார்கள். ஜீரோ வாட்ஸ் வெளிச்சத்தோடு ஒரு பெரிய அறைவர- அறையின் மையத்தில் ஆங்கில ‘எல்’ வடிவத்தில் ஒரு சோபா இருந்தது.

“அந்த சோபாவில் போய் உட்கார் சிபி! பார்ட்டி இப்போ வந்துடுவாங்க.”

சிபி ஒரு அலட்சிய நடை போட்டுக் கொண்டு போய் சோபாவுக்கு சாய்ந்தான்.

வழுக்கைத் தலை மறைந்தான்.

சிபி சுற்றும் முற்றும் பார்த்துக் கொண்டு ஒரு ஐந்து நிமிஷங்களைக் கரைத்திருந்த போது அறையின் மூலையில் இருந்த ரோஸ்வுட் கதவைத் திறந்து கொண்டு பர்தா அணிந்த பெண் வெளிப்பட்டு சிபியை நோக்கி வந்தாள்.

“வெல்கம் சிபி!”

சிபி அவளையே பார்த்தான்.

ஓர் இளம் பெண்ணுக்குரிய குரல். பர்தாவின் கறுப்புத் துணி அவளை முழுமையாய் மறைத்திருக்க, கண்களும் கைவிரல்களும் மட்டுமே பார்வைக்குக் கிடைத்தன.

சிபிக்கு நேராய் வந்து உட்கார்ந்தாள். ஒரு சின்ன சிரிப்பு குரலில் தொற்றியிருக்கப் பேசினாள்.

“சில முக்கியமான விஷயங்களைப் பேசும்போது இந்த பர்தாவுக்குள்ளேதான் இருப்பேன். நான் முஸ்லீம் பெண் கிடையாது.”

“நான் இதை எதிர்பார்க்கவில்லை.”

“எதை?”

“இப்படியொரு பர்தா சந்திப்பை.”

சிபி எழுந்தான். அவள் பதட்டமாய்க் கேட்டாள்.”என்ன எந்திரிச்சுட்டிங்க?”

“நான் பெண்கள்கிட்ட பிசினஸ் பேசறது கிடையாது. அதுவும் முகத்தைக் காட்டாமே பிசினஸ் பேசினா எனக்குப் பிடிக்காது. நீ வேற ஆளைப் பார்த்துக்கலாம்… நான் வர்றேன்.”

சொல்லிக் கொண்டே நகர முயன்றவனை தன் வலது கையை உயர்த்தி நிறுத்தினாள்.

“நில்லுங்க சிபி!”

அவன் நின்றான். அவள் பேசினாள். “நீங்க வித்தியாசமாவர்ன்னு எனக்குத் தெரியும். ஆனா இவ்வளவு வித்தியாசமா இருப்பீங்கன்னு நான் நினைக்கலை. ப்ளீஸ்… உட்காருங்க.”

“நான் உட்கார்ந்து பிசினஸ் பேசணும்னா உன் உடம்புல பர்தா இருக்கக் கூடாது. முகத்தைக் காட்டணும். எதையும் ஒளிவுமறைவு இல்லாமே பேசணும். இந்த இரண்டு கண்டிஷன்களுக்கு நீ ஒத்துக்கறதாயிருந்தா நான் உட்கார்றேன். இல்லேன்னா நான் போயிட்டேயிருக்கேன். ஒரு ரூபாய் பிசினஸாயிருந்தாலும் சரி, ஒரு கோடி போய் பிசினஸாயிருந்தாலும் சரி எனக்கு ஒளிவுமறைவு இருக்கக் கூடாது.”

“சரி பர்தாவை ரிமூவ் பண்ணிடறேன். உட்காருங்க…’ சொல்லிக் கொண்டே அவள் பர்தாவைக் களைத்து முகத்தைக் காட்டினாள்.

அழகான் முகம். பென்சில் புருவங்கள். லேசாய் லிப்ஸ்டிக் பூச்சு.

சிபி உட்கார்ந்தான்.

அவள் புன்னகைத்தாள்.

“இப்போ போலாமா?”

“மொதல்ல உன்னோட பேர்.”

“பார்கவி!”

“உண்மையான பேர்தானே?”

“ஆமா!”

“இந்த வீட்ல உன்னைத்தவிர வேற யார் யாரெல்லாம் இருக்காங்க?”

“நான் மட்டும்தான்.”

சிபி சில விநாடிகள் மௌனித்து விட்டு மெல்லிய குரலில் கேட்டான்.

“நான் செய்யப் போகிற வேலைக்கு ஒரு கோடி ரூபாய் கொடுக்க சம்மதிக்க ஆளை அனுப்பியிருக்கே. உன்னால அந்தத் தொகையை எப்படிக் கொடுக்க முடியும்னு எனக்குத் தெரியலை.”

“உங்களுக்கு சந்தேகமா இருக்கா?”

“மிகப் பெரிய சந்தேகம்.”

பார்கவி திரும்பிப் பார்த்து “கோவிந்த்’ என்று குரல் கொடுக்க அந்த வழுக்கைத் தலை ஆள் சில விநாடிகள் கழித்து அறையின் இன்னொரு கதவைத் திறந்து கொண்டு உற்பத்தியானான்.

“அம்மா...”

“அந்த சூட்கேஸைக் கொண்டா.”

கோவிந்த் தலையாட்டி மறைந்தவன் அடுத்த சில விநாடிகளில் பவுடர் பெயிண்டிங் பூச்சோடு இருந்த ஒரு சூட்கேஸோடு பார்கவியை நெருங்கி நீட்ட, அவள் புன்னகைத்தாள்.

“சூட்கேஸை திறந்து சிபிக்குக் காட்டு.”

கோவிந்த் லாக்கர்களை ஓப்பன் செய்து சூட்கேஸைப் பிரித்துக் காட்ட உள்ளே கற்றைக் கற்றையாய் ஐந்நூறு ரூபாய் கரன்சி நோட்டுக்கள்.

பார்கவி புன்னகையைப் பெரிதாக்கினாள்.

“இது அத்தனையும் கவர்ன்மெண்ட் அச்சடிச்ச நோட்டு. உங்களுக்கு சந்தேகம் இருந்தா நீங்க எடுத்துப் பார்க்கலாம். இதுல சரியா ஒரு கோடி ரூபாய் இருக்கு. நீங்க வேலையை சரியான முறையில் முடிச்சா உங்களுக்குத் தர்றதுக்காக ஒதுக்கப்பட்ட பணம் இது. அட்வான்ஸ் எவ்வளவு எதிர்பார்க்கறீங்க?”

‘எனக்கு அட்வான்ஸ் வாங்கிப் பழக்கமில்லை.’

‘பின்னே? முழுத்தொகையையும் இப்பவே வாங்கிக்கறீங்களா?”

“வேலையை முடிச்ச பின்னாடி வாங்கிக்கறேன்.”

“வேலை என்னான்னு கோவிந்த் சொன்னானா?”

“ம்! சொன்னான். ஒரு ஃபைவ் ஸ்டார் ஹோட்டல்ல தங்கியிருக்கிற அதிமுக்கியமான ஒரு நபரைத் தீர்த்துக் கட்டணும். ஆனா அது கொலைன்னு தெரியக் கூடாது. மரணம் இயற்கையான முறையில் அமைஞ்ச மாதிரி இருக்கணும். யார்க்கும் எந்த சந்தேகமும் வரக் கூடாது. இதுதானே வேலை?”

“ஆமா!”

‘அந்த அதிமுக்கியமான நபர் யார்னு கோவிந்த் சொல்லலை. அது யார்னு நான் தெரிஞ்சுக்கலாமா?”

உதட்டின் இதழ்கோடியில் பார்கவி புன்னகைத்தாள். ‘நீங்க தீர்த்துக் கட்டப் போகிற நபர் கடந்த ஒரு மாச காலமா இந்தியாவில் இருக்கிற எல்லா நியூஸ் பேப்பர்களிலேயும் பரபரப்பா அடிபடுகிற நபர்.”

“யார்... அரசியல்வாதியா?”

“இல்லை.”

“சினிமா நடிகரா?”

“இல்லை.”

“பின்னே?”

“கோவிந்த்! அந்த போட்டோவை எடுத்துக் காட்டு.’

“கோவிந்த் பக்கத்து ஷெல்ஃப்க்கு போய் ஒரு போட்டோவை எடுத்து வந்து காட்ட -

பார்த்த சிபி அயர்ந்தான்.

# 2

விவேக் ஸாடலைட் டி.வி-யில் பி.பி.ஸி பார்த்துக் கொண்டிருந்தபோது ரூபலா அறைக்குள் எட்டிப் பார்த்தாள். நேரம் ராத்திரி பத்தரை மணி.

"என்னங்க!"

டி.வி திரையில் சிரித்துக் கொண்டிருந்த பிரிட்டிஷ் பிரதமரை சில விநாடிகள் புறக்கணித்து விட்டு ரூபலாவிடம் திரும்பினான் விவேக்.

"ம்!"

"நமக்கு அடுத்த வீதியில் இருக்கிற லாயர் அஸ்வினி குமாரும், அவர்கூட இன்னொருத்தரும் உங்களைப் பார்த்துப் பேச வந்திருக்காங்க."

"என்ன விஷயம்னு கேட்டியா?"

"கேட்டேன். ஒரு ரெண்டு நிமிஷம் பார்த்துப் பேசிட்டுப் போயிடறாங்களாம்."

விவேக் டி.வி-யை ரிமோட் உதவியால் மௌனமாக்கி விட்டு வரவேற்பறைக்கு வந்தான்.

லாயர் அஸ்வினி குமாரும், உடன் வந்த அந்த இளைஞனும் எழுந்தார்கள்.

"வாங்க அஸ்வினி குமார். என்ன இந்த நேரத்துல?"

ஸாரி ஃபார் த டிஸ்டர்பன்ஸ் மிஸ்டர் விவேக்."

"நத்திங்! உட்கார்ங்க. என்ன விஷயம்? சரியான காரணம் இல்லாமே ஒரு லாயர் ஒரு க்ரைம் ப்ராஞ்ச் ஆசாமியைத் தேடிட்டு வரமாட்டாரே?"

"யூ ஆர் கரெக்ட் மிஸ்டர் விவேக்!" சொன்ன லாயர் தன் பக்கத்தில் இருந்த இளைஞனைக் காட்டியபடி சொன்னார். "இவன் என் ஒய்ப்போட தம்பி. பேர் பிரதாப். ஒரு அட்வர்டைஸிங் கம்பெனியில போட்டோகிராஃபரா வொர்க் பண்றான்."

அந்த பிரதாப் மறுபடியும் விவேக்குக்குக் வணக்கம் சொல்ல லாயர் தொடர்ந்தார்.

"இன்னிக்குக் காலையில பத்துமணி சுமார்க்கு சில சீனரி ஸ்நேப்ஸ் எடுக்கிறதுக்காக புழல் ஏரியாவுக்குப் போயிருக்கான். ஏரிக்கரையையும், நாணல் புதர்களையும் ஒரு ரோல் முழுக்க 'கிளிக்' பண்ணியவன் அதை சாயந்திரம் வந்து டெவலப் பண்ணிப் பார்த்திருக்கான். மொத்தம் இருபத்தி நாலு ஸ்நேப்ஸ். அதுல ஒரு ஸ்நேப்ல ஒரு பயங்கரம் ஒளிஞ்சிட்டிருந்தது."

“பயங்கரமா? என்ன பயங்கரம்?”

“இதோ இந்த ஸ்நேப்பைப் பாருங்க.”

லாயர் தன் கையோடு கொண்டு வந்திருந்த ப்ரௌன் கவரின் வாயைத் திறந்து ஒரு போஸ்ட்கார்ட் சைஸ் போட்டோவை நீட்ட - விவேக் அதை வாங்கிப் பார்த்தான்.

ஏரிக்கரையின் ஓரத்தில் நாணல் புதர்கள் அம்பாரமாய் மண்டிக் கிடந்த காட்சியை அழகாய் ‘கிளிக்’கி அதை ஒரு போட்டோவாக மாற்றியிருந்தது.

விவேக் அந்த போட்டோவை சில விநாடிகள் வரை உற்றுப் பார்த்து விட்டு பிரதாப்பை ஏறிட்டான்.

“இந்தப் போட்டோவில என்ன பயங்கரத்தைப் பார்த்தீங்க?”

பிரதாப் அந்த போட்டோவை விவேக்கிடமிருந்து வாங்கி நாணல் புதர்களை மொத்தமாய் விழுங்கிய ஒரு பகுதியை சுட்டிக் காட்டினான்.

“இந்த இடத்தைக் கொஞ்சம் உற்றுப் பாருங்க ஸார்.”

விவேக் பார்த்தான்.

சில விநாடிகள் வரை விவேக்கின் கண்களுக்கு எதுவும் தட்டுப்படாமல் போய் பின் சட்டென்று அந்தக் காட்சி பார்வைக்குக் கிடைத்தது.

வெய்யிலும், நிழலும் மாறி மாறி கோடுகளாய் விழுந்திருக்க அவைகளின் இடைவெளியில் புதர்க்கு வெளியே இரண்டு மனிதக் கால்கள் நீட்டியபடி தெரிந்தன.

விவேக் கண்களில் பூசிக்கொண்ட திகைப்போடு பிரதாப்பை ஏறிட்டான்.

“ரெண்டு கால் மட்டும் தெரியுது.”

‘ஆமா ஸார்! போட்டோ எடுக்கும்போது இதை நான் கவனிக்கவில்லை. பிலிம் ரோலை டெவலப் பண்ணும்போதுதான் இந்த மனிதக் கால்கள் பார்வைக்கு கிடைத்தது.”

“இது எந்த ஏரியா?”

“புழல்.”

“போட்டோ எடுக்கிறதுக்கு நீங்க மட்டும்தான் போயிருந்தீங்களா?”

“ஆமா ஸார்!”தலையாட்டியவன் மெல்லிய குரலில் சொன்னான்.

“ஸார்! நான் போட்டோ எடுக்கிறதுக்காக இந்த குறிப்பிட்டப் பகுதிக்குப் போனபோது காத்துல ஒரு பேட் ஸ்மெல் இருந்தது. நான் ஏதாவது நாயோ, பூனையோ செத்துக் கிடக்கலாம்னு நினைச்சு அந்த ஸ்மெல்லை டாலரேட் பண்ணிக்கிட்டு போட்டோகிராபி வொர்க்கை முடிச்சுட்டு வந்தேன்.”

பிரதாப் சொல்லிக் கொண்டிருக்கும்போதே விவேக் அந்தக் கால்களை உற்றுப் பார்த்தான்.

சதைப் பிடிப்போடு கூடிய கால்கள். ரோமம் இல்லை. அநேகமாக இது ஒரு பெண்ணின் கால்களாய் இருக்கலாம்.

“பிரதாப்!”

“ஸார்!”

“இந்த புழல் ஏரிக்கரைக்கு போட்டோகிராஃபிக்காக நீங்க அடிக்கடி போவீங்களா?”

“இல்ல ஸார்! கடந்த அஞ்சு வருஷத்துல, ரெண்டு தடவை மட்டும் போயிருக்கேன்...”

“அந்த ஏரிக்கு என்ன பேரு?”

“பஞ்சநந்தாங்கி ஏரி!”

விவேக் சில விநாடிகள் யோசித்து விட்டு கார்ட்லஸ் டெலிபோனை எடுத்து டயல் பீஸில் சில எண்களைத் தட்டினான்.

மறுமுனையில் ரிங் போய் ரிஸீவர் எடுக்கப்பட்டதும் கேட்டான்.

“புழல் போலீஸ் ஸ்டேஷன்!”

“எஸ்!”

“அங்கே இன்ஸ்பெக்டர் யாரு?”

“நீங்க?”

“விவேக்! க்ரைம் ப்ராஞ்ச்.”

மறுமுனையில் பதட்டமும், பவ்யமும் ஒரு சேர உற்பத்தியானது. “வணக்கம் ஸார்! நான் சப்-இன்ஸ்பெக்டர் இளங்கோவன் பேசறேன். இந்த ஸ்டேஷனுக்கு இன்ஸ்பெக்டர் மிஸ்டர் முரளி ஸார். அவர் ஒரு கேஸ் விஷயமா வெளியே போயிருக்கார். ஏதாவது இன்ஃபர்மேஷன் வேணுமா ஸார்?”

“எஸ்.”

“விஷயம் என்ன ஸார்?”

“உங்க போலீஸ் பீட்டுக்குள்ளே பஞ்சந்தாங்கி ஏரி வருதா?”

“வருது ஸார்.”

“சரி! இன்னும் ஒரு மணி நேரத்துக்குள்ளே அங்கே ஸ்டேஷனுக்குப் புறப்பட்டு வர்றேன். ஜீப் இருக்கா?”

“இருக்கு ஸார்.”

“ரெண்டு பெட்ரோமாக்ஸ் லைட் வேணும். அரேஞ்ச் பண்ணிக்குங்க, அப்புறம் ஃபார்மலின்.”

மறுமுனையில் எஸ்.ஐ. இளங்கோவன் திகைப்பது தெரிந்தது.

“ஸார்! இதெல்லாம் எதுக்காக?”

“சொன்னதையெல்லாம் ரெடி பண்ணி வையுங்க, நேர்ல வரும்போது புரியும்.”

விவேக் ரிஸீவரை வைத்துவிட்டு பிரதாப்பை ஏறிட்டான். “நீங்க என்கூட வந்து ஸ்பாட்டைக் காட்ட வேண்டியிருக்கும்.”

“வர்றேன் ஸார்.”

# 3

சிபி கோவிந்த் காட்டிய போட்டோவை பார்த்துவிட்டு சுவாசிக்கத் திணறி விட்டுப் பார்கவியைப் பார்த்தான்.

"இவர்... இவர்... பட்டாச்சார்யாதானே?"

பார்கவி புன்னகைத்தாள்.

"அவரேதான். முன்னாள் உச்சநீதிமன்ற நீதிபதி. இப்போதைய ஊழல் ஒழிப்பு கமிஷனின் தலைவர். இந்தியாவின் இப்போதைய ஹீரோ இவர்தான்! இவரோட முகத்தை அட்டைப்படத்தில் போடாத இந்தியப் பத்திரிகைகளே கிடையாது."

"தெரியும்! ரொம்பவும் தைரியசாலியான இவர் அரசியல்வாதிகளைக் கடுமையா தாக்கிப் பேசக் கூடியவர் இல்லையா?"

"அது மட்டுமில்லை. STREET DOG – BADASS-AND A POLITICIAN அப்படிங்கிற ஒரு புத்தகத்தையும் எழுதி குறுகிய காலத்தில் பாப்புலரானவர். இந்தியாவில் எந்த எம்.பி தொகுதியில் நின்னாலும் ஐந்து இலட்சம் ஓட்டு வித்தியாசத்துல ஜெயிக்கக் கூடியவர்."

"நான் தீர்த்துக் கட்ட வேண்டியது இவரைத்தானா?"

"ஆமா!"

"எதுக்காக அவர் தீர்க்கப்படணும்?"

"காரணம் உங்களுக்கு அவசியம் தெரியணுமா?"

"காரணத்தைத் தெரிஞ்சுக்காமே நான் காரியத்தைப் பண்றதில்லை..."

பார்கவி தயங்கினாள்.

"என்ன தயக்கம்!"

"காரணத்தை நான் சொன்ன பின்னாடி பட்டாச்சாரியாவைத் தீர்த்துக்கட்ட எனக்கு விருப்பமில்லைன்னு நீங்க சொல்லக் கூடாது."

“கண்டிப்பா சொல்ல மாட்டேன். எனக்கு இந்த பாவம், புண்ணியம், நீதி, நேர்மை, தர்மம் இது மாதிரியான வார்த்தைகளில் நம்பிக்கை கிடையாது. எனக்குத் தொழில் கொலை செய்யறது. அந்தக் கொலையை சாமர்த்தியமா செய்யறது என்னோட ஸ்பெஷாலிடி. இந்தக் கொலைக்காரியங்கள் செய்யறதுக்காகவே எத்தனையோ விஞ்ஞான உத்திகளை கைவசம் வெச்சிருக்கேன். பட்டாச்சார்யா நல்லவரா, கெட்டவரா இதெல்லாம் எனக்கு ரெண்டாம் பட்சம். காரணத்தை எதுக்காகக் கேட்கிறேன்னா நாளைக்கு உங்க மேல போலீஸுக்கு சந்தேகம் வராதபடிக்கு பட்டாச்சார்யாவை முடிக்கத்தான்.”

“இட்ஸ் ஓகே! பட்டாச்சார்யா ஏன் உயிரோடு இருக்கக்கூடாதுன்னு நான் சொல்லப் போற காரணம் வெரி வெரி சிம்பிள். உங்களுக்குத் தெரிந்திருக்கலாம் சிபி, ’பட்டாச்சார்யா கமிஷன்’. இந்த கமிஷன் ரெண்டு வருஷத்துக்கு முந்தி ஆயிரம் கோடி ரூபாய்க்கான ராணுவ தளவாடங்களை வாங்கியதில் பாதுகாப்புத் துறை அமைச்சகம் ஊழல் செய்துவிட்டது என்று காரணம் காட்டிப் பிரதம மந்திரியால் அமைக்கப்பட்டது. ஓய்வு பெற்ற நீதிபதியான பட்டாச்சார்யாவைக் கமிஷனின் தலைவராகப் போட்டபோது அவர் இவ்வளாவு கெடுபிடி செய்பவராக இருப்பார் என்று பாதுகாப்புத் துறை அமைச்சகம் நினைக்கவில்லை. எப்படியாவது பணத்தைக் கொடுத்து சரிக்கட்டிவிடலாம் என்று நினைத்தார்கள். அந்த பாச்சா பட்டாச்சார்யாவிடம் பலிக்கவில்லை. அவர் இந்த ஆயிரம் கோடி ராணுவ தளவாடங்கள் ஊழலை அஸ்திவாரத்திலிருந்து கெல்லி எடுக்க ஆரம்பித்துவிட்டார்…”

சிபி குறுக்கிட்டுக் கேட்டான்.

“அப்படீன்னா ஊழல் நடந்தது உண்மை?”

“உண்மைதான்.”

“ஆயிரம் கோடி ரூபாயில் ஒரு நூறு கோடி ரூபாயையாவது பாதுகாப்புத்துறை ஹைஅஃபிஷியல்ஸ் சுருட்டியிருப்பாங்க இல்லையா?”

“அதைப் பத்தி எனக்கு எதுவும் தெரியாது சிபி.”

“உனக்கும், பாதுகாப்புத்துறை அமைச்சகத்துக்கும் என்ன சம்பந்தம்?”

“இந்தக் கேள்விக்கும் நான் பதில் சொல்லணுமா?”

“கண்டிப்பா!”

“பாதுகாப்புத் துறை அமைச்சகத்தில் இருக்கிற ஒரு ஹைஅஃபிஷியலுக்கு நான் சின்ன வீடு போதுமா?. அவர் சொல்லித்தான் இந்தக் காரியத்தைப் பண்றேன்.”

“சரி! இப்ப நீ இதுவரைக்கும் சொன்ன தகவல்களெல்லாம் கொஞ்சமும் பொய்க் கலப்பில்லாத உண்மைதானே?”

“அக்மார்க் உண்மை! உங்ககிட்ட பொய் சொல்லக் கூடாதுன்னு எனக்குத் தெரியும்.”

சிபி ஒரு சிகரெட்டைப் பற்ற வைத்துக் கொண்டான். இரண்டு தடவை புகையை மௌனமாய் வெளியேற்றியவன் மூன்றாவது இழுப்புக்கு முன் கேட்டான்.

“பட்டாச்சார்யா இப்போ எந்த ஃபைவ்ஸ்டார் ஹோட்டல்ல ஸ்டே பண்ணியிருக்கார்?”

“சாம்ராட் இண்டர்நேஷனல்.”

“அந்த ஹோட்டல்ல வெச்சுத்தான் அவரைத் தீர்த்துக் கட்டணுமா?”

“ஆமா!”

“இப்போ எதுக்காக அந்த ஹோட்டல்ல ஸ்டே பண்ணியிருக்கார்?”

“பட்டாச்சார்யா ஆயிரம் கோடி ரூபாய் ஊழல் சம்பந்தப்பட்ட விசாரணையை எல்லா மட்டத்திலேயும் முடிச்சுக்கிட்டு தீர்ப்பை எழுதறதுக்காக ரகசியமான முறையில் அந்த சாம்ராட் இண்டர்நேஷனல் ஹோட்டல்ல ரூம் போட்டுத் தங்கியிருக்கார். அந்த உண்மை வெளியுலகத்துல யார்க்கும் தெரியாது. அவர் அந்த ஹோட்டலின் ஏழாவது மாடியில் 788 எண் அறையில் தங்கியிருக்கார். அந்த ஹோட்டலுக்கு மொத்தம் பதினாலு மாடிகள்.

சிபி புகை வழியும் வாயோடு சிரித்தான்.

“எனக்கும் அந்த ஹோட்டலைப் பற்றித் தெரியும். ஒரு தடவை அங்கே ஸ்டே பண்ணியிருக்கேன்.”

“சிபி! இப்போ பிரச்சினை இதுதான். ஆயிரம் கோடி ரூபாய் ஊழல் சம்பந்தமா பட்டாச்சார்யா எந்த மாதிரியான அறிக்கையைக் கொடுக்கப் போறார்னு இப்பவே பாதுகாப்புத்துறை அமைச்சகத்தைச் சேர்ந்த அதிகாரிகளுக்குப் பட்டவர்த்தனமா தெரிஞ்சு போச்சு. அந்த அறிக்கை வெளியே வந்தா பாதுகாப்பு அமைச்சகத்தில் இருக்கிற முக்கியமான புள்ளிகள் பலர் டெல்லி திஹார் ஜெயிலுக்குள் போக வேண்டியிருக்கும். அந்த அவல நிலைமை அவங்களைத் தேடி வர்றதுக்குள்ளே பட்டாச்சார்யாவை இல்லாமே பண்ண போட்ட திட்டம்தான் இது. பட்டாச்சார்யா மரணிக்கணும். ஆனா அது கொலை மாதிரி இருக்க கூடாது. போலீஸூக்கோ, எதிர்க்கட்சிக்காரங்களுக்கோ பட்டாச்சார்யா மரணத்துல துளியும் சந்தேகம் வரக்கூடாது.”

“இயற்கையான மரணம்னா ‘ஹார்ட் அட்டாக்’ மாதிரி தெரியணும் இல்லையா?”

“ஆமா! ஆனா சிபி... நீங்க நினைக்கிற மாதிரி பட்டாச்சார்யா தங்கியிருக்கிற ரூமுக்குள்ளே நீங்க அவ்வளாவு சுலபமா போயிடமுடியாது.”

“ஏன்?”

“அவர் தங்கியிருக்கிற ஏழாவது மாடியில் மொத்தம் இருபது ரூம்கள் இருக்கு. அது எல்லாமே இன்னும் ரெண்டு வார காலத்துக்கு காலியாகத்தான் இருக்கும். பாதுகாப்பைக் கருதி அந்த அறைகள்ல யாரும் தங்க அனுமதிக்கப்படலை. அது தவிர பட்டாச்சார்யா அறைக்கு வெளியே செக்யூரிட்டி இன்னர்வீல் ஆபீஸர்ஸ் ஐந்து பேர் இருபத்தி நாலு மணி நேரமும் மாறி மாறி காவலுக்கு இருக்காங்க. உள்ளே போக யாருக்குமே அனுமதியில்லை.”

சிபியின் கையிலிருந்த சிகரெட் தன் பாதி உடம்பைக் கரைத்திருந்தது. மௌனமான புகையில் சில விநாடிகள் காணாமல் போயிற்று.

பார்கவி புன்னகைத்தாள்.

“அது நம்மால முடியுமான்னு யோசிக்க ஆரம்பிச்சுட்டிங்க இல்லையா சிபி?”

“என்னால் முடியாத காரியம் எதுவுமே இல்லை. எனக்கு ஒரு சில விஷயங்களை மட்டும் கேதர் பண்ணிக் கொடுத்தா போதும்.”

“என்ன வேணும் சொல்லுங்க.”

“பட்டாச்சார்யா மட்டும்தானே அந்த அறையில் இருப்பார்?”

“ஆமா!”

“அஸிஸ்டண்ட்ஸ்?”

“யாரும் கிடையாது. இது தீர்ப்பு மாதிரி எழுதப்படுகிற அறிக்கை. பக்கத்துல யாரையும் அவர் அலவ் பண்ணமாட்டார்.”

“இது உறுதியான செய்திதானே?”

“உறுதியானதுதான்.”

“சரி! பட்டாச்சார்யா அந்த ஹோட்டல்ல தங்கியிருக்க ஆரம்பிச்சு இது எத்தனையாவது நாள்?”

“இன்னிக்கு இரண்டாவது நாள்.”

“மொத்தம் எத்தனை நாள் ஸ்டே?”

“ரெண்டு வாரம்.”

“அறிக்கையை என்னிக்கு வெளியிடப் போறார்?”

“இன்னியிலிருந்து சரியா பதினாலாவது நாள்.”

சிபி தன் மணிக்கட்டில் இருந்த மாதம், நாள், நேரம் காட்டும் வாட்சைப் பார்த்தான்.

“இன்னிக்கு ஜுலை இருபத்தி மூணாம் தேதி. இந்தத் தேதியிலிருந்து சரியா பதினாலு நாள் கணக்கு எடுத்தா ஆகஸ்ட் 5-ஆம் தேதி வருது.”

“ஆமாம்! ஆகஸ்ட் 5-ஆம் தேதியன்னிக்கு அதிகாலையில் இந்தியாவில் உள்ள எல்லாப் பேப்பர்களிலேயும் ‘பட்டாச்சார்யா கமிஷன்’ அறிக்கை சுடச்சுட வெளியே வந்துடும்.”

“அந்த அறிக்கை வெளியே வரக்கூடாது. அதுக்கு முந்தி அவரும் உயிரோடு இருக்கக் கூடாது. இதுதானே உன்னோட டிமாண்ட்?”

“எஸ்!”

“இந்த இடத்தில எனக்கொரு சந்தேகம்.”

“கேளுங்க.”

“பட்டாச்சார்யாவோட கதையை முடிச்சுடறோம். சரி! அதுக்கப்புறம் வேற ஒரு நீதிபதியை வெச்சு கமிஷன் போட்டா அவரையும் தீர்த்துக் கட்ட வேண்டி வருமா?”

“வராது.”

“ஏன்?”

“இனிமே எந்த நீதிபதியை அந்த கமிஷனுக்குத் தலைவரா போட்டாலும் சரி, அவர் எங்களுக்கு விசுவாசமா இருப்பார். நாங்க எந்த தீர்ப்பை சொல்றோமோ அதைத்தான் அறிக்கையா கொடுப்பார். இப்போ பிரச்சினையெல்லாம் பட்டாச்சார்யாதான்.”

“அவர் என்னிக்கு தீர்க்கப்படணும்?”

“இன்னும் ரெண்டு நாளைக்குள்ளே.”

சிபி எழுந்தான்.

“எனக்கு இந்த நாற்பத்தெட்டு மணி நேர அவகாசம் போதும். பட்டாச்சார்யாவுக்கு ஆயுசு இனிமேல் மணி நேரங்கள்தான்.”

“சிபி! மறுபடியும் உங்களுக்கு ஞாபகப்படுத்தறேன். இது கொலை மாதிரி தெரியக் கூடாது. பட்டாச்சார்யா ஹார்ட் அட்டாக்லதான் செத்துப் போகணும்.”

“செத்துப் போவார். கவலையே வேண்டாம்.”

பார்கவி மறுபடியும் சூட்கேஸைத் திறந்தாள்.

“சிபி! இந்தக் காரியத்துக்காக நீங்க அட்வான்ஸா ஏதாவது ஒரு தொகையை எடுத்துட்டா எனக்கு சந்தோஷமா இருக்கும்.”

சிபி சிரிப்போடு பார்கவியை ஏறிட்டான்.

"அட்வான்ஸ் வாங்கிகிட்டு காரியத்தை முடிக்கிறதுக்கு நான் ஒண்ணும் அடியாள் கிடையாது. காரியத்தை பிசிறு இல்லாமே பண்ணிட்டு வர்றேன். இந்த சூட்கேஸை அப்படியே வாங்கிக்கறேன். வரட்டுமா?"

சிபி எழுந்தான்.

"கோவிந்த்! சிபியை கூட்டிக் கொண்டு போய் ட்ராப் பண்ணிடு" பார்கவி சொல்ல கோவிந்த் தலையாட்டிவிட்டு வெளியே நடந்தான்.

சிபி நின்று பார்கவியிடம் தன் இடதுகை ஆட்காட்டி விரலை உயர்த்தினான்.

"இதோ பார்! காரியத்தை முடிச்ச பின்னாடி என்னை ஏதாவது ஒரு வகையில் ஏமாத்த நினைச்சா உன்கூட சம்பந்தப்பட்ட எல்லாரையும் தெருமுனைக்குக் கொண்டு வந்துவிடுவேன்."

மெல்லச் சிரித்து தலையாட்டினாள். "எனக்குத் தெரியாதா என்ன? நெருப்போடு விளையாடலாம். சிபியோடு விளையாடலாமா...?"

"அதை ஞாபகம் வெச்சுக்கிட்டா போதும்."

சிபி அடித் தொண்டையில் சொல்லிவிட்டு வேகமாய் வெளியேறினான்.

# 4

புழல்.

பஞ்சந்தாங்கி ஏரி அந்த ராத்திரி பதினோரு மணி வேளையில் ஏராளமான பூச்சி சத்தங்களோடு நட்சத்திர வெளிச்சத்தின் உதவியோடு மினுமினுத்துக் கொண்டிருந்தது.

“இந்த இடம்தான் ஸார்!” ஜீப்பின் முன்பக்கம் உட்கார்ந்திருந்த பிரதாப் சொல்ல போலீஸ் ஜீப் டயர்களை அரைத்துக் கொண்டு நின்றது.

விவேக்கும், சப்-இன்ஸ்பெக்டர் இளங்கோவனும் ஜீப்பின் பின் பகுதியிலிருந்து குதிக்க-பின்னால் வந்து நின்ற வேனிலிருந்து பெட்ரோமாக்ஸ் விளக்கோடு இரண்டு கான்ஸ்டபிள்களும், ஒரு டாக்டரும் இறங்கினார்கள்.

விவேக் பிரதாப்பை தொட்டான்.

“இந்த இடம்தானே?”

“ஆமா ஸார்!”

“கான்ஸ்டபிள்!”

“ஸார்!”

“பெட்ரோமாக்ஸ் விளக்கை எடுத்துக்கிட்டு பிரதாப்போட நடங்க.”

எல்லோரும் நடந்தார்கள்.

காய்ந்த கோரை புற்கள் பூட்ஸ் காலுக்குக் கீழே மிதிபட்டன.

தவம் செய்கின்ற தினுசில் ஏரிக்கரை ஓரமாய் மரங்கள் நின்றிருக்க-காற்றில் குளிர் ஊறியிருந்தது.

விவேக் நடந்து கொண்டே கூப்பிட்டார்.

“இளங்கோவன்!”

“ஸார்!”

“இந்த புழல் ஏரியாவுக்கு வந்து நீங்க இன்சார்ஜ் எடுத்து இப்போ எத்தனை மாசம் இருக்கும்?”

“ஆறு மாசம் ஸார்!”

"இந்த ஏரியாவில் க்ரைம் அக்கரன்ஸ் எவ்வளவு பர்செண்ட்?"

"வெரி வெரி நார்மல் ஸார்."

"ரீஸெண்ட்டா ஏதாவது மர்டர்?"

"எதுவும் இல்லை ஸார்."

"இந்த ஏரிக்கரை பக்கம் ரோந்து வர்றது உண்டா?"

"ரோந்து வர்ற அளவுக்கு இந்த ஏரிக்கரைப் பக்கம் அப்நார்மல்ஸி எதுவும் இல்லை ஸார்."

முன்னால் போய்க் கொண்டிருந்த பிரதாப் இப்போது நின்றான். சுற்றும்முற்றும் பார்த்துவிட்டுச் சொன்னான்.

"இந்த இடம்தான் ஸார்."

சுற்றிலும் நாணல் புதர்கள்.

அடித்தக் காற்றுக்கு ஏரிக்கரை நீர் கரையோடு மோதி நுரை தள்ளியது.

திருகுப் பூச்சிகளின் சத்தம் விட்டுவிட்டு எழுந்தது.

விவேக் தன் கையில் வைத்திருந்த நீளமான டார்ச்சை பிரதாப் கையில் கொடுத்தார்.

"அந்த கால்கள் தெரியற இடம் எந்த இடம்ன்னு இந்த டார்ச் லைட்டாலே லொகேட் பண்ணுங்க. அதுக்கப்புறம் பெட்ரோமாக்ஸ் லைட்டோடு அந்த பக்கமா போகலாம்."

பிரதாப் விவேக் நீட்டிய டார்ச்சை வாங்கி அடர்த்தியான நாணல் புதர்கள் மேல் வெளிச்சத்தைக் கொட்டினான்.

வெளிச்சம் நாணல் புதர்களை கொஞ்சம் கொஞ்சமாய் கழுவிக் கொண்டு வர-அடுத்து இரண்டு மூன்று நிமிஷங்களிலேயே விறைத்து நீட்டியபடி இருந்த அந்த கால்கள் பார்வைக்குக் கிடைத்தன.

"அதோ! அங்கே பாருங்க ஸார்."

"கான்ஸ்டபிள்! பெட்ரோமாக்ஸ் லைட்டோட அந்தப் பக்கமா போங்க."

அவர் போனார்.

எல்லோரும் பின் தொடர்ந்தார்கள். நடுவே குறுக்கிட்ட சிறிய தண்ணீர்ப் பரப்பை ஜாக்கிரதையாக கடந்து நாணல் புதர்களை நெருங்க இப்போது காற்றில் மூக்குக்குப் பிடிக்காத வீச்சம்.

நாணல் புதர்களை விலக்கிக் கொண்டு முதல் ஆளாய் உள்ளே போன விவேக் திகைத்தான்.

அந்த கால்கள் புதையுண்ட சேற்று மண்ணிலிருந்து நீட்டிக் கொண்டு தெரிந்தன.

விவேக் இன்ஸ்பெக்டரிடம் திரும்பினான்.

“பாடியை யாரோ புதைச்சுட்டுப் போயிருக்காங்க. சரியானபடி டிஸ்போஸ் பண்ணாததினால கால் ரெண்டும் மண்ணைவிட்டு வெளியே வந்துடுச்சுன்னு நினைக்கிறேன்.”

“மண்ணைத் தோண்டிப் பார்த்துடலாமா ஸார்.”

“டூல்ஸ் இருக்கா?”

“வேன்ல ஒரு ஸெட் எப்பவுமே இருக்கும் ஸார்.”

“சரி! தோண்டறதுக்கு ஏற்பாடு பண்ணுங்க” விவேக் சொல்ல இளங்கோவன் பக்கத்தில் இருந்த கான்ஸ்டபிள்களை பார்வையால் உத்தரவு கொடுக்க அவர் வேனை நோக்கிப் போனார்.

ஒரு மரத்தின் கிளையில் பெட்ரோமாக்ஸ் விளக்கு மாட்டப்பட - விவேக் மூச்சிற்கு கர்சீப்பைக் கொடுத்தபடி டாக்டரோடு சற்று ஒதுங்கி நின்றான்.

# 5

ஹோட்டல் சாம்ராட் இண்டர்நேஷனல்.

ஏழாவது மாடி.

அறை எண் 788.

ஆயிரம் பக்கங்கள் கொண்ட சட்ட நுணுக்கம் பற்றிய புத்தகம் ஒன்றைப் படித்துக் கொண்டிருந்த பட்டாச்சாரியாவுக்கு அறுபது வயது இருக்கலாம். உஜாலா வெண்மையோடு தலை ரோமம், சிறு வயதிலிருந்தே உடம்பை தேகாப்பியாசத்துக்கு உட்படுத்தியிருந்ததின் காரணமாக தரர்ந்து போகாத உடற்கட்டு. நீங்கள் இப்போது பார்க்கிற இந்த நிமிஷம் வேஷ்டி சட்டை உடுத்திக் கண்களுக்கு ரீடிங் க்ளாஸ் கொடுத்திருந்தார்.

'கமிஷன் ஜட்ஜ்மெண்ட்ஸ்' என்று தலைப்பு பேசிய அந்தப் புத்தகத்தின் மையப் பரப்பை மேய்ந்து கொண்டிருந்த பட்டாச்சார்யாவை செல்போன் கனைத்துக் கூப்பிட்டது.

எடுத்து காதுக்குப் பொருத்தினார்.

"எஸ்..."

மறுமுனையில் அவரது மனைவி கமலம் பேசினாள் "நான்தாங்க..."

பட்டாச்சார்யா லேசாய் கோபமானார்.

"இப்ப எதுக்காக போன் பண்ணியிருக்கே...? வீட்டிலிருந்து இன்னும் ரெண்டு வார காலத்திற்கு எனக்கு போன் பண்ணக்கூடாதுன்னு சொல்லியிருக்கேனா... இல்லையா...?"

"சொல்லியிருக்கீங்க... நான் இல்லேன்னு சொன்னேனா...?"

"பின்னே ஏன் போன் பண்ணியிருக்கே..."

"உங்க பேத்தி கேட்கணுமே... தாத்தாவுக்கு போன் பேசியே ஆகணும்னு சொல்றா..."

"என்னது மாலு குட்டி வந்திருக்காளா?"

"ம்... வந்து பத்து நிமிஷம் ஆச்சு... உங்க பொண்ணும் மாப்பிள்ளையும் வெளியூர்ல ஒரு கல்யாணத்துக்காகப் புறப்பட்டு போறாங்களாம். மாலுவைக் கொண்டு வந்து விட்டுட்டுப் போறாங்க... அவங்க வாசலைக்கூட தாண்டியிருக்க மாட்டாங்க... இவ தாத்தாக்கூட பேசணும்ன்னு ஒரே நச்சரிப்பு. பேத்திகூட இப்ப பேசறீங்களா... இல்லை உங்களுக்கு வேலை இருக்குன்னு சொல்லி ரிஸீவரை வெச்சுடட்டுமா...?"

பட்டாச்சார்யா பதட்டப்பட்டுக் கத்தினார். “ரிஸீவரை வெச்சுடாதே... கமலம்...! மாலுக்குட்டியைப் பேசச் சொல்லு...”

“பேத்தின்னு சொன்னா போதும்... உங்களோட எல்லா கண்டிஷனும் காணாமே போயிரும். இதோ... உங்க பேத்தி பேசறா...”

“....................”

சில விநாடிகளுக்குப் பின் அந்த தளிர்க்குரல் ரிஸீவரில் கேட்டது.

“தாத்தா...”

“மாலுக்குட்டி...”

“தாத்தா...! நீ எப்ப வீட்டுக்கு வருவே...?”

“தாத்தாவுக்கு இங்கே கொஞ்சம் வேலையிருக்குமா...! அது முடிஞ்சதும் வந்துடுவேன்...”

“தாத்தா...”

“சொல்லும்மா...”

“நானும் உன்கிட்ட வந்திடட்டுமா?”

“வேண்டாம்மா...! தாத்தாவுக்கு இங்கே ஒரு முக்கியமான வேலை இருக்கு... அது முடிஞ்சதும் நானே வந்துடுவேன். அதுவரைக்கும் நீ பாட்டிக்கிட்டேயே இரு... டீ.வி பாரு, கேரம்போர்டு விளையாடு. இல்லேன்னா பக்கத்து வீட்ல ராஜிக்குட்டி இருப்பா... போய் விளையாடு.”

“உனக்கு அடிக்கடி போன் பண்ணக்கூடாதுன்னு பாட்டி சொல்றாங்க...?”

“ஆமாம்மா... தாத்தா இன்னும் கொஞ்ச நாளைக்கு ஒரு முக்கியமான வேலையைப் பார்க்கணும். யாரும் என்னைத் தொந்தரவு படுத்தக்கூடாது.”

“சரி... தாத்தா... உனக்கு இப்போ ஒரு ஃபிளையிங் கிஸ் தர்றேன் வாங்கிக்கிறியா...?”

“குடும்மா...”

ரெஸீவரில் 'பச்ச்'சென்று சத்தம் வந்தது.

“கிஸ் வந்ததா தாத்தா...?”

“ம்... வந்தது... வந்தது...”

“ராத்திரி நான் தூங்கறதுக்கு முன்னாடி போன் பண்ணுவேன்...”

“பண்ணு... பண்ணு... நீ மட்டும்தான் போன் பண்ணலாம். வேற யாரும் பண்ணக்கூடாது...”

“தேங்க்ஸ் தாத்தா...” ஒரு பெரிய மனுஷியின் தோரணையில் அந்த ஐந்து வயது மாலு பேசிவிட்டு ரிஸீவரை வைத்து விட, பட்டாச்சார்யா செல்போனை அணைத்துவிட்டு-பேத்தியின் பேச்சை ஒரு புன்னகையோடு அசைப்போட்டுக்கொண்டே ‘கமிஷன் ஜட்ஜ்மெண்ட்ஸ்’ புத்தகத்துக்குப் போனார்.

சில பக்கங்களைத்தான் புரட்டியிருப்பார்.

மேஜையில் இருந்த கார்ட்லஸ் டெலிபோன் ஈனஸ்வரத்தில் கூப்பிட்டது.

எடுத்தார்.

“எஸ்.....”

அறைக்கு வெளியே காவல் இருந்த செக்யூரிட்டி ஆபீஸர் பேசினார்.

“ஸார்... திஸ் ஈஸ் டைம் ஃபார் லஞ்ச்... லஞ்ச் அனுப்பி வைக்கட்டுமா..?”

“இப்போது வேண்டாம். இன்னும் அரை மணி நேரம் கழித்து லஞ்ச் அனுப்பி வைத்தால் போதுமானது...”

“எஸ்... ஸார்.. இப்போது மணி பனிரெண்டு. சரியாய் பனிரெண்டரை மணிக்கு-லஞ்ச் அனுப்ப ஏற்பாடு செய்கிறேன்.”

“சரி...” கார்ட்லெஸ் போனை மௌனமாக்கிவிட்டு, மறுபடியும் சட்ட நுணுக்கப் புத்தகத்துக்குப் போனார் பட்டாச்சார்யா.

# 6

ஏரிக்கரை முழுவதும் ஒரு நிசப்தம் உறைந்து போய்க்கிடக்க மண்வெட்டியும் கடப்பாறையும் பேசாமல் செயல்பட்டதில் மண்ணில் புதைந்து கிடந்த உடம்பு மெல்ல மெல்ல மேலே வந்தது.

ஆண் உடம்பு.

சிதையாத முகம். மண் அப்பிய முகத்தை பார்மலின் ஊற்றிக் கழுவிப் பார்த்ததில் இளமை தெரிந்தது. வயது முப்பதுக்குள் இருக்கலாம் போல் தோன்றியது. உடம்பில் உடைகள் இல்லை.

விவேக் பிரதாப் கையில் இருந்த டார்ச்சை வாங்கி உடம்பின் மேல் வெளிச்சத்தை உமிழ்ந்தான்.

நிறம் மாறி உறைந்து போன ரத்தத்தோடு-நெஞ்சில் ஒரு வெட்டுக்காயம் தெரிந்தது.

“கான்ஸ்டபிள் பாடியைப் புரட்டிப் போடுங்க.”

புரட்டினார்கள்.

மூக்கில் ஒரு ரத்தக் குழி தெரிந்தது.

இளங்கோவன் சொன்னார்.

“ப்ரூட்டல் ஸ்டேப்பிங் ஸார்...”

“ஆள் யார்ன்னு தெரியலையே... இந்த ஏரியாவா, இல்லை வேற எங்கேயாவது சம்பவம் நடந்து பாடியை இங்கே கொண்டு வந்து டிஸ்போஸ் பண்ணியிருக்காங்களா?” விவேக் கேட்டுக் கொண்டே சுற்றும் முற்றும் பார்த்தான்.

பார்வைக்கு எட்டிய தூரம் வரை ஏரிக்கரையும் நாணல் புதர்களும் மட்டுமே தெரிந்தன.

டாக்டர் பாடியை ஒரு பத்து நிமிஷ நேரம் ஸ்பாட் போஸ்ட்மார்ட்டம் ஸ்டடி செய்துவிட்டு விவேக்கிடம் நிமிர்ந்தார்.

“சம்பவம் நடந்து ரெண்டு நாளாகியிருக்கும் போலிருக்கு... முதுகிலும் மார்பிலும் ஆழமான கத்திக் குத்துக்கள் விழுந்திருக்கு. பாடியை ஒரு விரிவான போஸ்ட் மார்ட்டத்துக்கு உட்படுத்தினா வேறு ஏதாவது தகவல் வெளியே வரலாம்...”

டாக்டர் சொல்லிக் கொண்டிருக்கும்போதே விவேக்கின் பார்வை டெட்பாடியின் வாய்ப் பகுதியை ஸ்கேன் எடுத்தது.

“இளங்கோவன்...”

“ஸார்...”

“டெட்பாடியோட மேல் உதட்டுக்குக் கீழே தெரியுற பல் வரிசையைக் கவனிச்சீங்களா...?”

சில விநாடிகள் வரை இளங்கோவன் பார்த்துவிட்டு சொன்னார்.

“துருத்திக்கிட்டு இருக்கிற மாதிரி தெரியுது ஸார்.”

“யூ... ஆர் கரெக்ட்... வாய்க்குள்ளே எதையோ போட்டு அடக்கி வெச்சிருந்தாத்தான் இது மாதிரி தெரியும். டாக்டர்! பாடியோட வாயை ஓப்பன் பண்ணி உள்ளே என்ன இருக்குன்னு இப்போ பார்க்க முடியுமா...?

“சிரமம்...! பாடியை மார்ச்சுவரிக்கு கொண்டு போய், தாடைப் பகுதியை வெட்டி எடுத்தாத்தான் உள்ளே இருக்கிற பொருள் என்னான்னு தெரியும்.”

“இங்கே ட்ரை பண்ண முடியாதா?”

“செய்யலாம். பட் பாடி இப்போ டீகம்போஸ் ஸ்டேஜ்ல இருக்கு... இந்த ராத்திரி நேரத்துல சேறும் சகதியுமா இருக்கிற இந்த இடத்துல பாடியை போஸ்ட்மார்ட்டம் பண்றது அவ்வளவு ஹைஜீனிக்கா எனக்குத் தெரியலை...”

விவேக் இளங்கோவனைப் பார்த்தான்.

“பாடியை மார்ச்சுவரிக்குக் கொண்டுபோக ஏற்பாடு பண்ணுங்க... வாய்க்குள்ளே அடக்கி வெச்சிருக்கிற பொருள் என்னன்னு தெரிஞ்சா இந்த விடுகதை கேஸுக்கு ஏதாவது ஒரு விடை கிடைக்கும்.”

“பாடியை இங்கே புழலில் இருக்கிற ஹாஸ்பிடலுக்கே கொண்டு போய். பி.எம் பண்ணிடலாமா ஸார்...”

“பண்ணிடலாம்...! நமக்கு சீக்கிரமா விடை கிடைக்கணும்...”

ஒரு பழைய காடாத் துணியால் மண் அப்பிய உடலைச் சுற்றி இரண்டு கான்ஸ்டபிள்கள் தூக்கிக் கொண்டார்கள்.

டார்ச் வெளிச்சமும் பெட்ரோமாக்ஸ் வெளிச்சமும் முன்னால் போக எல்லோரும் தொடர்ந்தார்கள்.

# 7

அந்த வெள்ளை நிற அம்பாஸிடர் கார் சாம்ராட் இண்டர்நேஷனலுக்குள் நுழைந்து போர்ட்டிகோவில் போய் செல்லமாகக் குலுங்கி நின்றது. ட்ரைவர் கீழே இறங்கிக் காரின் பின்பக்கக் கதவைத் திறந்துவிட சிபி ஒரு சிறிய சூட்கேஸோடு கீழே கால் பாவினான்.

நீலநிற ஷெர்வாணி கோட். தலையில் ஒரு ஜரிகை குல்லா. வாயில் புகை கசியும் சிகரெட் பைப். கையில் தங்கப் பூண் போட்ட வாக்கிங் ஸ்டிக்.

ஒரு நேர்த்தியான ஒப்பனை அவனை வெகுவாய் மாற்றியிருந்தது.

போர்டிகோ படியில் உயர்ந்தான்.

கண்ணாடிக் கதவைத் திறந்து விடுவதற்காகக் காத்திருந்த ஒரு பேரர் சிபியைப் பார்த்ததும் பவ்யத்தை இன்னமும் அதிகமாகக் காட்டிக் கொண்டு கண்ணாடிக் கதவைக் கேக்கை வெட்டுவது போல் திறந்தான்.

“வெல்கம்... ஸார்...”

அவன் சொன்ன ‘வெல்கம்’க்கு ஒரு ஐம்பது ரூபாய் நோட்டைத் திணித்துவிட்டு சிபி ரிசப்ஷனை நோக்கிப் போனான்.

ரிசப்ஷனில் தொப்புளைக் காட்டி கொண்டு-“குட் மார்னிங்” சொன்ன ரிசப்ஷனிஸ்ட் பெண்ணைப் புன்னகையோடு சமீபித்தான்.

“ஐயாம் விட்டல்தாஸ்... கம்மிங் ஃப்ரம் பாம்பே... ரூம் ரிசர்வ் செய்யும்படி உங்களுக்கு ஒரு டெலிபோன் செய்தி வந்திருக்குமே...?”

“ஒன் மினிட் ஸார்... உங்களுடைய பெயர் என்னவென்று சொன்னீர்கள்...?”

“விட்டல்தாஸ்...”

ரிசப்ஷனிஸ்ட் தன் நெய்ல் பாலீஷ் விரல்களால் தனக்கு முன்னால் இருந்த கம்பியூட்டரைக் கேட்டாள்.

அது மானிட்டர் திரையில் “ஆமாம்” என்று சொல்லி 10-ஆவது மாடியில் 1014 எண்ணுள்ள அறை ரிசர்வ் செய்யப்பட்டுள்ளது...

சிபி போலியாய் சலித்துக் கொண்டான்.

“அவ்வளவு உயரத்துக்கு நான் போக வேண்டுமா? முதலாவது மாடி இரண்டாவது மாடியில் ரூம் கிடைக்காதா?”

“ஸாரி ஸார்…! எல்லாமே என்கேஜ்ட்… காலியானாலும் உங்களுக்குக் கிடைக்காது, ஆல்ரெடி தேர் ஆர் பர்சன்ஸ் இன் த க்யூ…”

“நோ ப்ராப்ளம்…! இது ஒரு ரிக்வெஸ்ட்தான். நான் பத்தாவது மாடிக்கே போகிறேன். இந்த ஹோட்டலில் எனக்கு ரெண்டு நாள் ஸ்டேதான்.”

சிபி தனக்குப் பக்கத்தில் இருந்த வெயிட்டரிடம் சூட்கேஸைக் கொடுத்துவிட்டு லிப்டை நோக்கிப் போனான்.

லிப்டில் பயணிக்கும் போது வெயிட்டரிடம் சிபி கேட்டான். “இந்த ஹோட்டல் எத்தனை மாடி…?”

“பதினாலு ஸார்…”

“எல்லா மாடியிலும் ரூம்ஸ் ஃபுல்லா?”

“அதைப் பத்தியெல்லாம் எனக்கு தெரியாது ஸார்.”

முப்பது விநாடி பயணத்தில் பத்தாவது மாடி வந்தது. சிபி லிப்ட்டினின்றும் வெளிப்பட்டு க்ரானைட் தரையில் நடை போட்டான்.

வராந்தாவில் பக்கவாட்டுக் கண்ணாடி ஜன்னல்கள் வழியே காலை நேர சென்னை வெய்யிலில் காய்வது தெரிந்தது.

“இந்த ஹோட்டலுக்கு வி.ஐ.பி-க்கள் வந்து தங்கறது உண்டா…?”

வெயிட்டரின் கண்களில் பெருமை பளபளத்தது.

“என்ன ஸார்.. அப்படி கேட்டுட்டீங்க…? பம்பாயிலிருந்து வர்ற எல்லா இந்தி நடிகர்களும் இந்த ஹோட்டல்லதான் ‘ஸ்டே’ பண்ணுவாங்க ஸார்…”

“அப்படியா…? பரவாயில்லையே…! அரசியல்வாதிகள் மந்திரிகள் வர்றதுண்டா…?”

“அது ரொம்பக் கம்மிதான் ஸார்…”

“இப்ப இந்த ஹோட்டல்ல வி.ஐ.பி யாராவது தங்கியிருக்காங்களா…?”

“ஏழாவது மாடியில் யாரோ ஒருத்தர் தங்கியிருக்கார். ஆனா அவர் யார்ன்னு எனக்குத் தெரியாது ஸார்… எனக்கு அங்கே சர்வீஸூம் கிடையாது…”

சொன்ன வெயிட்டர் நின்றான்.

“அதுதான் ஸார் உங்க ரூம்…”

ரோஸ்வுட் கதவில் 1014 எண் தங்க நிறத்தில் தகதகத்தது. கதவின் லாக் சிஸ்டம் சாவிக்குக் கட்டுப்பட்டு அகலக் கதவைத் திறந்து வைக்க சிபி உள்ளே போனான்.

கையோடு கொண்டு போயிருந்த தங்கப் பூண் போட்ட வாக்கிங் ஸ்டிக்கோடு சோபாவுக்கு சாய்ந்தான்.

வெயிட்டர் சூட்கேஸை வார்டுரோப்பில் வைத்துவிட்டு சிபிக்கு எதிரே வந்து பவ்யமாய் நின்றான்.

“சாப்பிட ஏதாவது கொண்டு வரட்டுமா ஸார்?”

“இப்போதைக்கு ஒண்ணும் வேண்டாம். ஒரு மணி நேரம் கழிச்சு என்னோட ரூமுக்கு வந்து நீ காலிங்பெல் கொடுத்தா போதும்...” சொல்லிக் கொண்டே பத்து ரூபாய்த் தாள் ஒன்றை நீட்ட அதை வாங்கிக் கொண்டு வெயிட்டர் வெளியேறினான்.

சிபி கதவைச் சாத்தித் தாழிட்டுக் கொண்டு படுக்கைக்குப் போய் உட்கார்ந்து வாக்கிங் ஸ்டிக்கைப் பிரித்து அதன் உள்ளே இருந்த பளபளப்பான யுரேனிய ராடை வெளியில் எடுத்து போம் மெத்தைக்குக் கீழே பத்திரப்படுத்தினான்.

# 8

அந்த நள்ளிரவில் ஜி.ஹெச்-சின் ட்யூப்லைட் வெளிச்ச மார்ச்சுவரி அறையில் விவேக் கைகளைக் கட்டிக் கொண்டு நின்றிருக்க - இரண்டு டாக்டர்கள் ஏரிக்கரையினின்றும் கொண்டுவரப்பட்ட உடம்பை போஸ்ட் மார்ட்டம் செய்வதில் ஈடுபட்டிருந்தார்கள்.

இறுகிப் போயிருந்த தாடைப் பகுதியை ட்ரில்லர் போன்ற ஒரு சிறிய மிஷினில் கவனமாய் ராவிக் கொண்டிருக்க-உள் வாயில் ஏதோ மடக்கி வைக்கப்பட்டிருப்பது தெரிந்தது.

டாக்டர் அதைத் தன் கையில் இருந்த போர்ஸிப்ஸில் பிடித்து இழுக்க-விவேக் க்ளவுஸ் அணிந்த விரல்கலால் அதை மெல்ல உருவி எடுத்தான்.

முதல் பார்வைக்கு அது ஏதோ ஒரு ப்ளாஸ்டிக் தாள் மாதிரி தெரிந்தது. கசங்கிக் கிடந்த அதை விரல்களால் நீவிய போது அது ஒரு ஸின்தடிக் அடையாளக் கார்டு என்பது புரிந்தது.

பிரிண்டட் எழுத்துக்கள் ஒரு முகவரியைச் சொல்லிக் காட்டியது.

இல. செந்தமிழன்.
நெம்பர் 47, ஸ்வேகா அப்பார்ட்மெண்ட்ஸ்,
கருணா நகர்,
அடையார்,
சென்னை-20.

டாக்டர்களில் ஒருவர் கார்டை வாங்கி பார்த்துவிட்டு சொன்னார் :

“கொலையுண்ட தான் யார்ன்னு போலீஸுக்குத் தெரியப்படுத்துவதற்காகத் தன்னோட விசிட்டிங் கார்டையே வாய்க்குள்ளே வெச்சிருந்திருக்கலாம்...”

“இந்த அட்ரெஸுக்குப் போய்ப் பார்த்தா உண்மை தெரிஞ்சுடும்...” விவேக் மார்ச்சுவரியை விட்டு வெளியே வந்தான். காத்திருந்த சப் இன்ஸ்பெக்டர் இளங்கோவன் எதிர்கொண்டர்.

“ஸார்... டிட் யு கெட் எனி க்ளூ...”

“வாங்க... சொல்றேன்...”

நடந்தார்கள்.

“டெட் பாடியை ஸ்நேப் பண்ணின போட்டோகிராபர் இப்ப எங்கே?”

“வெளியே ஜீப்ல வெயிட் பண்ணிட்டிருக்கார் சார்.”

“இன்னும் ஒரு மணி நேரத்துக்குள்ளே ஃபிலிம் ரோலை டெவலப் பண்ணி போட்டோவை பிரிண்ட் போட்டுத் தர முடியுமா?”

“முடியும் ஸார்...”

“ஏற்பாடு பண்ணுங்க... போட்டோவோடு நாம அடையாரில் இருக்கிற ஒரு முகவரிக்குப் போகணும்...”

“எஸ்... ஸார்...”

# 9

ஷாம்பியனை புனல் வடிவ டம்ளரில் வார்த்துக் கொண்டே பார்கவி குரல் கொடுத்தாள்.

“கோவிந்த்”

பக்கத்தில் கையைக் கட்டிக் கொண்டு நின்றிருந்த கோவிந்த் பவ்யமாய் குனிந்தான்.

“அம்மா...”

“சிபி சிக்கல் எதுவும் இல்லாமே காரியத்தை செஞ்சு முடிப்பானா...?”

“சந்தேகமே வேண்டாம்மா... காரியம் முடிஞ்சுடும்...”

“காரியம் முடியறதுல எனக்கு சந்தேகம் கிடையாது கோவிந்த். ஆனா போலீஸோட பார்வைக்கு அவன் பட்டுட்டா... விவகாரம் சிக்கலாயிடும்.”

“அம்மா! சிபி ஒரு ஃபோர்த் க்ளாஸ் க்ரிமினல் கிடையாது. கொஞ்சம் அதிகப்படியான அறிவுஜீவியான க்ரிமினல். நீங்க பயப்படற மாதிரியெல்லாம் எதுவும் நடக்காது...”

“இந்த பட்டாச்சார்யா கமிஷன் யார்க்குத் தலைவலியோ இல்லையோ எனக்கு சரியான தலைவலி. காரியம் முடியறவரைக்கும் எனக்கு சரியான தலைவலி. காரியம் முடியறவரைக்கும் அடிவயித்துல திக்திக்ன்னு இருக்கு...”

அவள் சொல்லிக் கொண்டிருக்கும்போதே வாசலில் காலிங் பெல் கூப்பிட்டது.

“கோவிந்த்! போய் யார்ன்னு பாரு...”

கோவிந்த் புன்னகைத்தான்.

“இந்நேரத்துல அய்யாவைத் தவிர வேற யாரம்மா வருவாங்க?”

“ஒரு வாரத்துக்கு அவர் வரமாட்டேன்னு சொல்லிட்டு போயிருக்கார் கோவிந்த். இது வேற யாரோன்னுதான் நினைக்கிறேன். நீ போய்ப் பாரு. நமக்கு வேண்டிய ஆளா இருந்த முன்னாடி ரூம்ல உட்கார வை.”

“சரிங்கம்மா...”

கோவிந்த் வாசல் கதவை நோக்கிப் போக, பார்கவி இன்னொரு லார்ஜ் பெக் ஷாம்பெயினை விழுங்கினாள்.

போன வேகத்தில் கோவிந்த் திரும்பி வந்தான். நடையில் வேகம்.

“அம்மா...! அய்யாதான் வந்திருக்கார்...”

“சரி... நீ போய் முன்னாடி இரு... குரல் கொடுக்கும்போது வந்தா போதும்...”

கோவிந்த் தலையாட்டிவிட்டு பக்கவாட்டுக் கதவு வழியாக வெளியே செல்ல, ‘ஐயா’ என்று அழைக்கப்பட்ட அந்த 50 வயது நபர் பிஸ்கெட் நிற சஃபாரியோடு உள்ளே வந்தார்.

“பாருக்குட்டி...”

நைட்டியில் இருந்த பார்கவி ஷாம்பியன் போதையோடு எழுந்து வந்து சஃபாரி நபரின்மேல் தன் வெல்வெட் உடம்பை மோதி அவருடைய கழுத்தில் கைகளைப் போட்டுக் கொஞ்சினாள்.

“ஒரு வாரத்துக்கு இந்தப் பக்கம் வரமாட்டேன்னு சொல்லிட்டுப் போனீங்க...!”

அவர் அவளுடைய கன்னத்தைத் தட்டினார்.

“சொன்னேன்! இருக்க முடியலையே...! ராத்திரி பத்து மணியானா பார்கவி வேணும்னு இந்த உடம்பு சொல்லுதே... டிஃபன்ஸ் டிபார்ட்மெண்ட்ல ஐ.ஏ.எஸ் கேடர்ல வேலை பார்க்கிற எனக்கு இது வேண்டாத விஷயம்தான். விட முடியலையே...” சொல்லிக் கொண்டே அவர் பார்கவியை இறுக்கி அணைத்தார்.

“போதும்... போதும்...”

“என்ன போதும்?”

“அணைச்சதுதான்...”

“ஏன் வலிக்குதா?”

“விலா எலும்புகளே உடைஞ்சுடும் போலிருக்கு.”

இருவரும் படுக்கைக்கு வந்தார்கள்.

“ஷாம்பியன் சாப்பிடறீங்களா?”

“உன் கையால ஊத்திக் கொடுத்தா வேண்டாம்னா சொல்லுவேன். ஊத்து...”

பார்கவி ஷாம்பியன் பாட்டிலை மறுபடியும் கையில் எடுத்தாள். சஃபாரி கேட்டார்.

“சிபி ஹோட்டல்ல போய் தங்கிட்டானா?”

“தங்கிட்டான்...”

“ஏதாவது போன் பண்ணி பேசினானா?”

“பேசலை. அவன் போன் பண்ணவும் மாட்டான். காரியத்தை முடிச்சுட்டு நேர்ல வந்து நிப்பான்…”

“பட்டாச்சார்யாவை எப்படி முடிக்கப் போறானாம்? ஏதாவது சொல்லிட்டு போனானா?”

“சொல்லலை…”

“எனக்கென்னவோ சந்தேகமாயிருக்கு…”

“என்ன சந்தேகம்?”

“பட்டாச்சார்யா ஒரு கோட்டைக்குள்ளே இருக்கிற மாதிரி அந்த ஹோட்டலுக்குள்ளே சுத்தியும் செக்யூரிட்டி வெச்சுகிட்டு கமிஷன் தீர்ப்பை எழுதிட்டிருக்கார். சிபி எப்படி உள்ளே புகுந்து பட்டாச்சார்யாவோட கதையை முடிப்பான்னு தெரியலை… அதுவும் பட்டாச்சார்யா இயற்கையான முறையில் இறந்தது மாதிரி போலீஸ் நம்ப வேண்டும். அவனால் முடிகிற காரியமா இது…?”

பார்கவி ஷாம்பியனை நீட்டிக் கொண்டே சொன்னாள் “சிபி கண்டிப்பா செஞ்சு காட்டுவான். அவன் முயற்சி பண்ணி இதுவரைக்கும் தோத்ததே இல்லைன்னு கோவிந்த் சொல்றான்.”

“பார்க்கலாம்… இன்னும் ரெண்டு நாள்ல அந்த சிபி புலியா எலியான்னு தெரிஞ்சுடும்”-சொல்லிவிட்டு அவர் ஒரு வாய் ஷாம்பியனை உறிஞ்ச பார்கவி அவருடைய பின்னங்கழுத்தை வருடி விட்டாள்.

“என்னங்க…”

“ம்…”

“பட்டாச்சார்யா கதை முடிஞ்சா இந்த விவகாரத்துல நம்ம பங்குக்கு எவ்வளவு பணம் கிடைக்கும்?”

“அஞ்சு கோடி…”

“நிச்சயமா கிடைக்குமா?”

“சந்தேகமே வேண்டாம். இந்த விவகாரத்துல சம்பந்தப்பட்ட எல்லார்க்குமே ஒவ்வொரு சூட்கேஸ் ரெடியாய் இருக்கு.”

“நான் ஒரு யோசனை பண்ணி வெச்சிருக்கேன்.”

“என்ன…?”

“நம்ம பங்குக்கு எவ்வளவு பணம் கிடைக்கும்னு சொன்னீங்க?”

“அஞ்சு கோடி…”

“இனிமே அஞ்சு கோடியில்லை. ஆறு கோடி!”

“ஆறு கோடியா?”

“ம்”

“எப்படி...?”

“சிபிக்கு கொடுக்க வேண்டிய அந்த ஒரு கோடி ரூபாயையும் நாமே எடுத்துக்கிறோம்...”

சஃபாரி ஷாம்பியனை விழுங்காமல் திகைப்பாய் பார்த்தார். “பார்கவி! நீ என்ன சொல்றே? பேசினபடி பணத்தை தரலைன்னா சிபி சும்மாயிருப்பானா? நீயே அவனை மோசமான பேர்வழின்னு சொல்றே! நீ அவனை ஏமாத்தற மாதிரி தெரிஞ்சாலே... தெரிஞ்ச அடுத்த விநாடியே அவன் உன்னை உயிரோடு விட்டு வைக்க மாட்டான்.”

பார்கவி சிரித்தாள்.

“என்ன சிரிக்கிறே?”

“சிபி பட்டாச்சார்யாவோட கதையை முடிச்சுட்டு பணத்துக்காக இங்கே வரும்போது உயிரோடு இருப்பான். இங்கிருந்து வெளியே போகும்போது உயிரோடு இருக்க மாட்டான்.”

சஃபாரி லேசாய் நெற்றி வியர்த்தார்.

“பார்கவி! இந்த ரிஸ்க்கான வேலையெல்லாம் வேண்டாம். நம்ம பங்குக்கு வர்ற அஞ்சு கோடியே நமக்கு போதும். வீணா ஒரு கோடி ரூபாய்க்கு ஆசைப்பட்டு ஆபத்தை விலைக்கு வாங்கிக்காதே...”

“இதுல எந்த ஆபத்தும் இல்லை. கொஞ்சம் புத்திசாலித்தனத்தோடு செயல்பட்டா எதையுமே செஞ்சு முடிக்கலாம். ஒரு பெண் ஒரு ஆணை ஜெயிக்கிறது ரொம்பவும் சுலபம். நான் ஜெயிச்சு காட்டறேன்...”

“பார்கவி...! இது என்னமோ எனக்கு சரியாப் படலை. பேசினபடி பணத்தைக் கொடுத்து சிபியை அனுப்பி வெச்சுடுவோம். வேண்டிய பணம் என்கிட்ட இருக்கு.”

“நான் பணத்துக்காக மட்டும் சொல்லலை.”

“பின்னே?”

“அந்த சிபிக்கு நம்மைப் பத்தின எல்லா உண்மைகளும் தெரியும். பட்டாச்சார்யாவைக் கொலை செய்யச் சொன்னது பாதுகாப்பு அமைச்சகத்தைச் சேர்ந்த உயரதிகாரிகள்தான் என்கிற விஷயமும் அவனுக்குத் தெரியும். அவன் தன்னை ஒரு நாணயமான கிரிமினல்ன்னு இப்போதைக்கு சொல்லிகிட்டாலும் பின்னாடி அவன் தன்னோட சுயரூபத்தைக் காட்டலாம். பணம் பறிக்கிறதுக்காக ப்ளாக்மெயில் பண்ணலாம். ஒருவேளை ஏதோ தேசத்துக்கு சேவை செய்யறதா நினைச்சுட்டு திடீர்ன்னு அப்ரூவரா மாறி போலீஸ்ல போய் எல்லா உண்மைகளையும் சொல்லக்கூட செய்யலாம்.”

சஃபாரி இப்போது யோசித்தார்.

“இப்ப சொன்னியே! இது எனக்கு நியாயமாப் படுது. தான் தண்டனையை அனுபவிச்சாலும் சரி நமக்கு எல்லாரும் மாட்டணும்னு சிபி நினைச்சுட்டா அதை நம்மால தடுக்க முடியாது.”

“சிபியால அப்படியொரு ஆபத்து வர்றதுக்குக் கண்டிப்பா வாய்ப்பு இருக்கு. அந்த உறுத்தல் இல்லாமே நாம் சந்தோஷமா இருக்கணும்னா சிபி உயிரோட இருக்கக்கூடாது.”

“சிபியை தீர்த்துக்கட்ட உன்னால முடியுமா?”

“முடியும்...”

“எப்படி?”

“கைவசம் ஒரு திட்டம் இருக்கு. சிபி மொதல்ல பட்டாச்சார்யாவோட கதையை முடிச்சுட்டு-பணத்துக்காக இங்கே வரட்டும். நான் அந்த திட்டத்தை அரங்கேற்றம் பண்ணி அவன் கதையை முடிக்கிறேன். பாடியை டிஸ்போஸ் பண்ற வேலைக்கு மட்டும் நீங்க கொஞ்சம் உதவியா இருந்தா போதும்...”

“நீ போட்டிருக்கிற திட்டம் என்னான்னு என்கிட்ட சொல்லேன்.”

குரலைத் தாழ்த்திக் கொண்டு சொல்ல ஆரம்பித்தாள் பார்கவி. அவள் சொல்லச் சொல்ல சஃபாரியின் விழிக்குள் வியப்பு நிரம்பியது.

# 10

கூவம் நாறிக் கொண்டிருந்த அடையாறின் அந்த இரவு நேரத்தில் விவேக்கும் சப்-இன்ஸ்பெக்டர் இளங்கோவனும் கருணா நகரைக் கண்டுபிடித்து ஸ்வேகா அப்பார்ட்மெண்ட்டுக்கு முன்பாய்ப் போய் ஜீப்பில் உதிர்ந்தபோது நேரம் இரண்டரை மணி.

அந்த ஐந்து மாடி அப்பார்ட்மெண்ட் கட்டிடம் இருட்டிலும் நிசப்தத்திலும் பிசைந்து கிடக்க-விவேக் கட்டிடத்தின் பிரதான கேட்டை நோக்கிப் போக-தூங்கிக் கொண்டிருந்த வாட்ச்மேன் பார்வைக்குக் கிடைத்தான்.

விவேக் கேட்டை உலுக்க வாட்ச்மேன் தூக்கம் கலைந்து சட்டென்று நிமிர்ந்தான்.

“யாரு...?”

இளங்கோவன் குரல் கொடுத்தார். “யோவ்! மொதல்ல எந்திரிச்சு வாய்யா...”

குரலில் இருந்த அதிகாரத்தையும் போலீஸ் யூனிஃபார்மையும் பார்த்து மிரண்டு போன வாட்ச்மேன் கண்களில் ஒட்டியிருந்த தூக்கத்தை உதறிவிட்டு ஓடிவந்தான்.

“அய்யா...”

“கேட்டைத் தொற...”

சாவிக் கொத்தை எடுத்து வேக வேகமாய்த் திறந்தான். விவேக் உள்ளே நுழைந்து கொண்டே கேட்டான்.

“உம் பேர் என்ன?”

“துரைசாமிங்க...”

“இந்த அப்பார்ட்மெண்ட்ல குடியிருக்கிற எல்லோருடைய பேரும் உனக்கு தெரியுமா?”

“தெரியும்ங்க...”

“செந்தமிழன்ங்கிற பேர்ல யாராவது இருக்காங்களா?”

“இருக்காங்க... ஏழாவது மாடி, ப்ளாட் நம்பர் நாப்பத்தி ஏழு...”

“ஆள் அப்பார்ட்மெண்ட்ல இருக்காரா?”

“இருக்கார்ங்க...”

“அவர் என்ன ஃபேமிலிமேனா? ஒண்டிக்கட்டையா?”

“ஒண்டிக்கட்டைதாங்க...!”

“மாடிக்குப் போக லிஃப்ட் இருக்கா?”

“இருக்குங்க...”

“வந்து காட்டு”

வாட்ச்மேன் காக்கிச் சட்டைக்கு வியர்த்துக் கொண்டே லிஃப்ட் இருந்த இடத்தைக் கூட்டிப் போய்க் காட்டினான்.

விவேக்கும் இளங்கோவனும் லிஃப்ட்டில் பயணித்து நாங்காவது மாடியைத் தொட்டு வெளிப்பட்டு வராந்தாவில் நடந்து 47 எண் பொறித்த ப்ளாட் கதவுக்கு முன்னால் போய் நின்றார்கள்.

விவேக் தன் கட்டை விரலை அழைப்பு மணியில் பதிக்க-உள்ளே 'ர்ர்ர்ர்ர்' என்று சத்தம் கேட்டு அடங்கியது.

கதவு திறக்கப்பட இருவரும் காத்திருந்தார்கள். முழுதாய் ஒரு நிமிஷம் கரைந்த பின்-

கதவு விலகியது.

அந்த இளைஞன் தெரிந்தான். கலைந்த தலை. லுங்கி, பனியன். மோவாயில் ட்ரிம் செய்யப்பட்ட தாடி. இளங்கோவனின் காக்கி யூனிஃபார்மைப் பார்த்ததுமே அவனுடைய கண்களில் ஒட்டியிருந்த தூக்கம் உதிர்ந்தது.

“எஸ்...” என்றான்.

“செந்தமிழன்ங்கிறது...?”

“நான்தான்.”

“உங்ககூட கொஞ்சம் பேசணும்.”

“என்ன விஷயம்?”

“உள்ளே போய்ப் பேசலாமா?”

செந்தமிழன் வழிவிட்டு உள்ளே போக-விவேக்கும் இளங்கோவனும் தொடர்ந்தார்கள்.

ப்ளாட் சுத்தமாய் இருந்தது. சுவரில் ஒட்டியிருந்த வால் பேப்பரில் நயாகரா கொட்டிக் கொண்டிருந்தது.

செந்தமிழன் இருவர்க்கும் சோபாவைக் காட்டிவிட்டு எதிரே இருந்த நாற்காலியில் உட்கார்ந்தான்.

“சொல்லுங்க... என்ன விஷயம்?”

“மிஸ்டர் செந்தமிழன், நீங்க எங்கே வேலை பார்க்கறீங்க...?”

“எக்ஸ்-சர்வீஸ்மேன் வெல்ஃபேர் யூனிட்ல செக்சன் இன்சார்ஜா இருக்கேன்.”

“உங்க ஆபீஸ் எங்கே?”

“சாஸ்திரி பவன்ல...”

“அப்படீன்னா நீங்க ஒரு சென்ட்ரல் கவர்ன்மெண்ட் எம்ப்ளாயி...?”

“ஆமா ஸார்...!”

“இந்த ப்ளாட்ல உங்களைத் தவிர வேற யாரும் இல்லை?”

“இல்லை.”

“பேச்சிலர்...”

“எஸ்.”

“சொந்த ஊர்?”

“இதே மெட்ராஸ்தான்...”

விவேக் சில வினாடிகள் மௌனமாய் இருந்துவிட்டு பின் தன் சட்டைப் பாக்கெட்டில் பத்திரப்படுத்தி வைத்திருந்த கசங்கிப் போயிருந்த அந்த விஸிட்டிங் கார்டை எடுத்துக் காட்டினான்.

“இது... உங்க விசிட்டிங் கார்டுதானா... பாருங்க.”

செந்தமிழன் வாங்கிப் பார்த்துவிட்டு லேசாய் முகம் மாறினான். “ஆமா... என்னோடதுதான்...”

“புழல் ஏரியா பக்கம் உங்களுக்கு ஃப்ரண்ட்ஸ் யாராவது இருக்காங்களா?”

“இல்லை.”

விவேக் தன் கையில் இருந்த பழுப்பு நிறக் கவரைப் பிரித்து அந்தப் போட்டோவை எடுத்து செந்தமிழன் முகத்துக்கு நேராய்ப் பிடித்தான்.

“இந்த போட்டோவில் இருக்கிற நபரை உங்களுக்குத் தெரியுமா?”

நாணல் புதர்களுக்குப் பக்கத்தில் மல்லாந்த நிலையில் சடலமாய்த் தெரிந்த அந்த உடலை பயம் கப்பிய விழிகளோடு பார்த்துவிட்டு தலையாட்டினான் செந்தமிழன்.

"யார்ன்னு தெரியலையே...?"

"நிஜமா இது யார்ன்னு உங்களுக்குத் தெரியாதா?"

"தெரியாது ஸார்..."

"பாடியோட ஃபேஸை நல்ல உற்றுப் பார்த்துவிட்டு சொல்லுங்க..."

"தெரியலை ஸார்..."

விவேக் புன்னகைத்தான்.

"நீங்க தெரியலைன்னு சொல்றீங்க... ஆனா செத்துக்கிடந்த இந்த நபரோட வாய்க்குள்ளே உங்களோட இந்த விசிட்டிங் கார்ட் இருந்ததே... அது எப்படி?"

செந்தமிழன் முகம் பயத்தில் ஒரு விகாரத்துக்கு உட்பட்டது. "என்னோட இந்த விசிட்டிங் கார்ட் பாடியோட வாய்க்குள்ளே இருந்ததா?"

"ஆமா...! புழல் ஏரிக்கரைக்குள்ளே புதைக்கப்பட்டிருந்தது இந்த டெட் பாடி. பாடியை போஸ்ட்மார்ட்டம் பண்ணிப் பார்த்தபோது வாய்க்குள்ளே இந்த விசிட்டிங் கார்டு இருந்தது. ரெண்டு தாடைகளையும் வெட்டி எடுத்துதான் கார்டையே வெளியே எடுக்க முடிஞ்சுது..."

"ஸார்...! சத்தியமா இந்த ஆள் யார்ன்னு எனக்குத் தெரியாது ஸார். என்னை இந்த கொலையில் மாட்டிவிடறதுக்காக யாரோ பண்ணின விஷமத்தனமான வேலை ஸார்..."

"யார் அந்த யாரோ?"

"எனக்கெப்படி ஸார் தெரியும்... நான் எதிரியாய் யாரையும் நினைச்சது கிடையாது."

"இந்த விசிட்டிங் கார்டை நல்லா பாருங்க செந்தமிழன்! இது நீங்க ப்ரிண்ட் பண்ணினதுதானே?"

"ஆமா..."

"இந்த கார்டை எப்போ ப்ரிண்ட் பண்ணீங்க?"

"மூணு மாசம் இருக்கும்..."

"எவ்வளவு ப்ரிண்ட் பண்ணீங்க... அதுல எத்தனை கார்டை வெளியே கொடுத்திருப்பீங்கன்னு சொல்ல முடியுமா?"

"நூறு கார்டு வரைக்கும் ப்ரிண்ட் பண்ணி அதுல பாதியை கொடுத்திருப்பேன் ஸார்..."

“இங்கே உங்களுக்கு போன் இருக்கா?”

“இல்ல ஸார்…”

“இறந்து கிடக்கிற அந்த நபரைத் தெரியாதுன்னு சொல்றீங்க… ஆனா உங்க விசிட்டிங் கார்ட் அவன் வாய்க்குள்ளே இருந்திருக்கு. நிச்சயமா இந்த கொலையை நீங்க பண்ணியிருக்க மாட்டீங்க. ஏன்னா கொலையைப் பண்ணிட்டு யாரும் விசிட்டிங் கார்டை வாய்க்குள்ளே திணிச்சிட்டு வரமாட்டாங்க… உங்களை இந்தக் கொலையில் சம்பந்தப்படுத்தி அநாவசியமான தொல்லையைக் கொடுக்க யாரோ விரும்பியிருக்காங்க. அவங்க யார்ன்னு கண்டுபிடிச்சா… இறந்து கிடக்கிற இந்த நபர் யார்ங்கிறது தெரிஞ்சுடும்… இதுக்கு நீங்க ஒத்துழைப்பு தரணும்…”

“எந்த வகையில் நான் ஒத்துழைப்புக் கொடுக்கணும். சொல்லுங்க ஸார்.”

“உங்களை எதிரியா நினைக்கிற நபர்கள் யார் யார்ன்னு யோசனை பண்ணி ஒரு லிஸ்ட்டை ப்ரிப்பேர் பண்ணிட்டு நாளைக்கு காலையில் பத்து மணிக்கு க்ரைம் ப்ராஞ்ச் ஆபீஸுக்கு வாங்க… நீங்க தர்ற முழுமையான ஒத்துழைப்பை வெச்சுக்கிட்டுதான் உண்மைகளை வெளியே கொண்டுவர வேண்டியிருக்கும்…”

“இந்த விஷயத்துல என்னோட முழு ஒத்துழைப்பை உங்களுக்கு கொடுக்க தயாராயிருக்கேன் ஸார்…”

“தேங்க்யூ வெரிமச்…”

செந்தமிழனிடம் விடை பெற்றுக்கொண்டு விவேக்கும் இளங்கோவனும் வெளியே வந்தார்கள். வராந்தாவில் வேக நடை போட்டு லிஃப்ட்டில் இறங்கி-காம்பௌண்ட் கேட்டுக்கு வெளியே நின்றிருந்த ஜீப்புக்கு வந்தார்கள். வாட்ச்மேன் பவ்யமாய் விஷ் பண்ணியதைப் பொருட்படுத்தாமல் ஜீப்பில் ஏறி உட்கார, அது புறப்பட்டது.

இளங்கோவன் கேட்டார்.

“ஸா… நம்ம நெக்ஸ்ட் மூவ் என்ன?”

“வீட்டுக்குப் போய் தூங்க வேண்டியதுதான். இன்னும் கொஞ்ச நேரத்துல பால்காரங்க சைக்கிள் மணியடிச்சுக்கிட்டு தெருவுக்குத் தெரு வர ஆரம்பிச்சிடுவாங்க…”

“ஸார்…”

“என்ன?”

“இந்த ராத்திரி விடியறதுக்குள்ளே ஏதாவது க்ளூ கிடைக்கும்ன்னு நினைச்சேன். அது நடக்கலை.”

விவேக் புன்னகைத்தான்.

“உங்களுக்கு இப்போ க்ளூ கிடைக்கணும். அவ்வளவுதானே…?”

“ஆமா ஸார்...”

“ட்ரைவர்...”

“ஸார்...!” ஜீப்பை ஓட்டிக் கொண்டிருந்த ட்ரைவர் திரும்பிப் பார்த்தார்.

“ஜீப்பை ஸ்லோ பண்ணித் திருப்புங்க...”

“எங்கே ஸார்...?”

“மறுபடியும் செந்தமிழனோட அப்பார்ட்மெண்ட்டுக்கு.”

இளங்கோவன் திகைத்த மாதிரி பார்த்தார்.

“எதுக்கு ஸார்?”

“நீங்கதானே க்ளூ வேணும்ன்னு சொன்னீங்க? இப்ப ரெண்டாவது தடவையா செந்தமிழனைப் பார்க்கப் போறோம். கண்டிப்பா க்ளூ கிடைக்கும்.”

“எப்படி ஸார்?”

“வந்து பாருங்க...”

# 11

விடியற்காலை. மூன்று மணி.

சிபியின் மணிக்கட்டில் கட்டியிருந்த வாட்ச் முணுமுணுப்பாய் குரல் கொடுக்க சிபி படுக்கையினின்றும் எழுந்து உட்கார்ந்தான்.

அறையில் ஜன்னலுக்கு வெளியே இருட்டு கெட்டியாய் தெரிந்தது. அட்டைக் கரி வானத்தில் நட்சத்திரக் கூட்டங்கள் கோஷ்டி கோஷ்டியாய் கண்ணடித்துக் கொண்டிருந்தன.

சிபி மெல்ல எழுந்து ஃபோம் மெத்தைக்கு கீழே பத்திரப்படுத்தி வைத்திருந்த யுரேனியம் ராடையும் ட்ரில்லர் போன்ற ஒரு சிறிய கருவியையும் எடுத்து ஒரு ப்ளாஸ்டிக் பைக்குள் பத்திரப்படுத்திக் கொண்டு அறையினின்றும் வெளியே வந்து வராந்தாவை எட்டிப் பார்த்தான்.

வராந்தா துடைத்து வைத்த மாதிரி இருக்க சிபி சில விநாடிகள் நின்று யாராவது பார்வைக்குக் கிடைக்கிறார்களா என்று பார்த்துவிட்டு அறையைப் பூட்டிக் கொண்டு மெல்ல நடந்தான்.

வராந்தா முடிந்ததும் ஒன்பதாவது மாடிக்குப் போகும் படிக்கட்டுகள் வர இறங்கினான்.

சத்தமில்லாத நடை.

அரை நிமிஷ நேரத்தில் ஒன்பதாவது மாடி வந்தது. நடையை நிதானமாக்கிக் கொண்டு எட்டாவது மாடிக்குப் போகும் படிகளில் இறங்கினான்.

எட்டாவது மாடி வராந்தா பந்த் அனுஷ்டிக்கும் ஒரு தெரு மாதிரி வெறிச்சோடித் தெரிந்தது.

வராந்தாவில் நடந்தான்.

ஒவ்வொரு அறை எண்ணாய் பார்த்துக் கொண்டு போய் 888 எண்ணிட்ட அறைக்கு முன்பாய் போய் நின்றான். கதவை மெல்லத் தட்ட ஆரம்பித்தான்.

இரண்டு நிமிஷ தட்டலுக்குப் பிறகு-லாக் 'கிளிக்' என்ற சத்தத்தோடு விடுபட்டு கதவு மெல்ல பின் வாங்கியது. வரி வரியாய் பைஜாமா அணிந்த ஒரு ஆள் தூக்கம் கலைந்து விட்ட எரிச்சலோடு கேட்டான்.

"யாரது...?"

சிபி சட்டென்று தன் கையில் மறைவாய் வைத்திருந்த ரிவால்வரை எடுத்து அந்த நபரின் நெற்றியில் ஒட்ட வைத்தான்.

“சத்தம் போடக்கூடாது... அப்படியே உள்ளே நட...”

அவன் மிரண்டு போல் நிற்க-சிபி அவனைக் காலால் உதைத்து நெட்டித் தள்ளினான்.

“ம்... உள்ளே போ...”

தள்ளிய வேகத்தில் அவன் உள்ளே போய் விழுந்தான். சிபி நுழைந்து கதவைத் தாழ் போட்டான். துப்பாக்கியால் அவனை அளவெடுத்துக் கொண்டே சென்றான்.

“இதோ பார்...! உன்னோட ரூம்ல எனக்குச் கொஞ்சம் காரியம் ஆக வேண்டியிருக்கு... ஒரு பதினைந்து நிமிஷ வேலைதான். அதுவரைக்கும் நீ வாயைத் திறக்காமே அப்படி சுவரோரமா போய் மண்டி போட்டு உட்காரணும். கொஞ்சம்கூட அசையக்கூடாது. அசைந்தா அந்த நிமிஷமே உன்னோட உடம்புல தோட்டா பாயும்...”

“வே... வேண்டாம்... என்னை...ஒண்ணும் பண்ணிடாதே.”

“உயிர் மேல ஆசையிருந்தா... அப்படிப் போய் உட்கார்...”

அவன் போய் உட்கார்ந்து கொள்ள-சிபி மெதுவாய் நடந்து போய் அறையின் ஜன்னலையொட்டிப் போட்டிருந்த கட்டிலை கொஞ்சம் கொஞ்சமாய் நகர்த்த ஆரம்பித்தான்.

# 12

ஜீப் மறுபடியும் ஸ்வேகா அப்பார்ட்மெண்ட்ஸுக்கு முன்பாய் போய் நின்றது. வாட்ச்மேன் ஆச்சர்யமாய் பார்த்துக் கொண்டிருக்கும் போதே விவேக்கும் இளங்கோவனும் லிஃப்ட்டுக்குப் போய் பயணித்து நான்காவது மாடிக்குப் போய் நின்று காலிங்பெல்லுக்கு வேலை கொடுத்தார்கள்.

கதவைத் திறந்த செந்தமிழன் திகைக்க-விவேக் புன்னகைத்தான். "மறுபடியும் வந்து தொந்தரவு பண்றோம்..."

"வேற எதாவது கேட்கணுமா...ஸார்..?"

"இல்லை... ஒரு பொருளை இங்கே வெச்சுட்டுப் போயிட்டேன்..."

"என்ன பொருள் ஸார்...?"

"ஒரு சிகரெட் லைட்டர்..."

"அப்படி எதுவும் இங்கே இருந்த மாதிரி தெரியலையே.." செந்தமிழன் அறைக்குள் நுழைந்து சுற்றும்முற்றும் பார்த்துக் கொண்டிருக்கும் போதே விவேக் மெல்லச் சிரித்தான்.

"உங்க பார்வையில் படற மாதிரி அந்த சிகரெட் லைட்டரை நான் வெச்சுட்டுப் போகலையே..." சொல்லிக் கொண்டே போய் அந்த ஸ்டீல் மேஜைக்குக் கீழே குனிந்து-மேஜையடியில் ஒட்ட வைத்திருந்த சிகரெட் லைட்டரை எடுத்தான் விவேக்.

"செந்தமிழன்! உங்களுக்கு ஆச்சரியமாயிருக்கலாம். இது ஒரு மேக்னடிக் சிகரெட் லைட்டர். இரும்பாலான எந்த இடத்திலும் ஒட்டிருக்கும். இதை எதுக்காக அந்த ஸ்டீல் மேஜைக்கு அடியில் ஒட்ட வைச்சிட்டுப் போனேன்னு நீங்க யோசிக்கலாம். இது வெறும் சிகரெட் லைட்டரா மட்டும் இருந்திருந்தா இதை அப்படி ஒட்ட வெச்சிட்டுப் போயிருக்க மாட்டேன்..."

சப்-இன்ஸ்பெக்டர் இளங்கோவனும் இப்போது திகைப்பாய் பார்க்க-விவேக் உதட்டில் இருந்த புன்னகையின் சதவீதம் மாறாமல் பேச்சைத் தொடர்ந்தான்.

"செந்தமிழன்! இது நீங்க நினைக்கிற மாதிரி சிகரெட் லைட்டர் கிடையாது. அல்டிமேட் வாய்ஸ் ரிஸீவரோடு கூடிய மைக்ரோ டேப்ரிக்கார்டர். இது மாதிரியான சின்னச் சின்ன விஞ்ஞான அயிட்டங்கள் எல்லாம் என் பாக்கெட்ல எப்பவுமே கைவசம் இருக்கும்... இங்கே டெலிபோன் இருக்கான்னு நான் கேட்டப்ப நீங்க இல்லேன்னு சொன்னீங்க! செல்போன் இருக்குன்னு நீங்க சொல்லியிருக்கலாம். சொல்லலை...! மறைச்சுட்டீங்க. ஆனா நான் அந்த ரூமை என் பார்வையால எக்ஸ்ரே எடுத்தப்ப ஒங்களோட கட்டில் தலைமாட்டில் சின்னதா சிவப்பு வெளிச்சத்தோடு அது உயிரோடு இருந்ததைப் பார்த்தேன். அதைப் பார்த்த பின்னாடிதான் எனக்கு உங்க மேல முதல் தடவையாக

சந்தேகம் வந்தது. நாங்க உங்களை விசாரணை பண்ணிட்டுப் போனதும் உண்மையிலேயே நீங்க தப்பு பண்ணின ஆளாயிருந்தா அந்த செல்லுலார் போன் மூலமா யாரையாவது காண்டாக்ட் பண்ணி பேசக்கூடும்னு நினைச்சேன். நீங்க பேசினதை நான் எப்படி கன்ஃபர்ம் பண்ணிக்கிறது... அதான் இந்த சிகரெட் லைட்டர் வேஷம் போட்ருக்கிற அல்டிமேட் வாய்ஸ் ரிஸீவரோடு கூடிய மைக்ரோடேப் ரிக்கார்டரை இந்த ஸ்டீல் மேஜைக்கு அடியில் ஒட்ட வச்சுட்டுப் போனேன்... இப்போ இந்த டேப்ரிக்கார்டரை ஆன் பண்ணினா... நீங்க தப்பான ஆளா இல்லையான்னு தெரிஞ்சுடும்...”

விவேக் சொல்லிக் கொண்டே டேப்ரிக்கார்டரின் தலை மேல் இருந்த சின்னக் குமிழை அழுத்த, அது ‘பீப்..பீப்..’ என்று குரல் கொடுத்து விட்டு ஆட்டோமெட்டிக் ரீவைண்டிங்கில் ‘க்ர்ர்ர்ர்ர்ர்’ என்று சில விநாடிகளை செலவழித்துவிட்டு பின் கரகரத்தது.

செந்தமிழன் குரல்.

“ஹலோ...”

“..........”

“நான்தான் செந்தமிழன்...”

“............”

“போலீஸ் என்னைத் தேடி வந்துட்டாங்க...”

“..........”

“புழல் ஏரிக்கரையில் பட்டாச்சார்யா வீட்டு கார் ட்ரைவரை நாம டிஸ்போஸ் பண்ணும்போது இன்னும் கொஞ்சம் ஆழமா தோண்டி புதைக்கலாம்னு நான் சொன்னதை நீ கேட்கலை. இப்ப என்னாச்சி அரையும் குறையுமா புதைச்ச பாடி இப்போ வெளியே வந்தாச்சு...”

“.. ... ... ...”

“போலீஸ் என்கிட்ட நூல் பிடிச்ச மாதிரி நேரா வந்து நின்னுட்டாங்க... எப்படின்னு கேட்கறியா? அதுதான் விதி, நாம அந்த ட்ரைவரைத் தீர்த்துக்கட்டும்போது-என் சர்ட் பாக்கெட்டிலிருந்து என்னோட விசிட்டிங் கார்டு விழுந்ததை அந்த ட்ரைவர் எடுத்து வாய்க்குள்ளே அதக்கியிருக்கான். போலீஸ் பிடியிலிருந்து நாம தப்பிக்கக் கூடாதுங்கிறதுக்காக ட்ரைவர் புத்திசாலித்தனமா காரியத்தைப் பண்ணியிருக்கான். அதையும் நாம கவனிக்கத் தவறிட்டோம்..”

“... ... ... ...”

“விசாரணையை முடிச்சுகிட்டுப் போலீஸ் போயிட்டாங்க. என்மேல அவங்களுக்கு சந்தேகம் வரலை...”

“… … … …”

“நாளைக்குக் காலையில பத்து மணிக்கு என்னைக் க்ரைம் ப்ராஞ்ச் ஆபீஸுக்குப் வரச் சொல்லியிருக்காங்க. போய்ப் பார்த்துட்டு அப்படியே உன்கிட்ட வர்றேன்…”

மைக்ரோ டேப்ரிக்கார்டர் சம்பாஷணையை முடித்துக் கொண்டு மௌனம் சாதிக்க விவேக் அதை எடுத்து பாக்கெட்டில் போட்டுக் கொண்டு செந்தமிழனின் தோள்மேல் கையை வைத்தான்.

“நான் தப்பு பண்ணினவங்களுக்கு மரியாதை தர்றது இல்லை.. நீயும் யாரோ ஒரு எக்ஸும் சேர்ந்து பட்டாச்சார்யா வீட்டு ட்ரைவரைக் கொலை பண்ணியிருக்கீங்க… யார் அந்த எக்ஸ்…?”

செந்தமிழன் வியர்த்து வழிந்து கொண்டு ஒன்றும் பேசாமல் மௌனமாய் நிற்க - இளங்கோவன் தன் இடுப்பு பெல்ட்டைக் கழற்ற ஆரம்பித்தார்.

விவேக் கையமர்த்தினான்.

“வேண்டாம் இளங்கோவன்..! ஒரு நல்ல வேலையில் இருக்கிற செந்தமிழனை பெல்ட்டால் விசாரணை பண்றது எனக்கு சரியாகப் படலை. செந்தமிழன் இனிமே எதையும் மறைக்க முடியாது. மைக்ரோ டேப்ரிக்கார்டர்தான் எல்லாத்தையும் வெட்ட வெளிச்சத்துக்குக் கொண்டு வந்துடுச்சே..! செந்தமிழன் சொல்லிடு..! யார் அந்த எக்ஸ்…?”

செந்தமிழன் பதில் சொல்லாமல் இறுக்கமாய் நின்றிருக்க விவேக் அவனுடைய இரண்டு தோள்களிலும் கைகளைப் போட்டான்.

“சரி…! இந்தக் கேள்விக்காவது பதில் சொல்லு. பட்டாச்சார்யா வீட்டுக் கார் ட்ரைவரைக் கொலை செய்ய வேண்டிய அவசியம் என்ன வந்தது?”

செந்தமிழன் அதே மௌனப் பார்வை பார்க்க விவேக் இளங்கோவனிடம் திரும்பினான்.

“இவன்… அடிவாங்காமே வாயைத் திறக்க மாட்டான் போலிருக்கு. இனி நீங்க பெல்ட்டைக் கழட்டிக்கலாம்.”

இளங்கோவன் விவேக்கின் அனுமதி கிடைத்த சந்தோஷத்தோடு பெல்ட்டைக் கழற்றிக் கொள்ள செந்தமிழன் சட்டென்று கைகளைக் கூப்பினான்.

“அடிக்காதீங்க ஸார்…! எல்லா உண்மைகளையும் சொல்லிடறேன்.”

“சொல்லு..”

“தொண்டை நெஞ்சு எல்லாமே அடைக்கிற மாதிரி இருக்கு ஸார். கொஞ்சம் தண்ணி வேணும்…”

“இருக்கிற இந்த இடத்தை விட்டு நீ அசையாமே நில்லு. நான் தண்ணி கொண்டு வந்து தர்றேன்.”

இளங்கோவன் மேஜை மேல் இருந்த வாட்டர் ஜக்கை நோக்கிப் போக- விவேக் செந்தமிழனிடம் கேட்டான்.

“அந்த செல்போன் எங்கே...?”

“க...க...கப்போர்ட்ல வெச்சிருக்கேன்.”

விவேக் பக்கத்து சுவரில் அப்பியிருந்த கப்போர்ட்டை நோக்கிப் பார்வையை திருப்பிய விநாடி -

அந்த சம்பவம் நடந்தது.

செந்தமிழன் விருட்டென்று வாசல் பக்கம் கதவை நோக்கி மின்னல் வேகத்தில் பாய்ந்தான்.

விவேக் விநாடிக்கும் குறைவான நேரத்தில் திரும்பிப் பார்த்துக் கத்தினான். “ஏய்.. நில்லு...”

அவன் நிற்கவில்லை.

“இளங்கோவன்! சேஸ்.. ஹிம்...!”

கையில் வாட்டர் ஜக்கை எடுத்துக் கொண்டிருந்த இளங்கோவன் அதை அப்படியே போட்டுவிட்டு சுளீரென்று சாட்டை சொடுக்கினாற் போல் பாய்ந்தார்.

கதவின் மேல் மோதிக் கொண்டு வராந்தாவுக்கு வந்து எட்டிப் பார்த்த போது- செந்தமிழன் வராந்தாவின் கோடியில் இருந்த மொட்டை மாடிக்குப் போகிற படிகளை நோக்கி ஓடிக் கொண்டிருப்பது தெரிந்தது.

இளங்கோவன் வேகத்தை அதிகப்படுத்திக் கொண்டு பூட்ஸ் சத்தம் அதிர ஓடினார்.

“டேய்... நில்லு...”

வராந்தாவை அவர் ஓடி முடிப்பதற்குள் செந்தமிழன் மொட்டை மாடிக்குப் போகும் படிகளில் ஏறி உச்சிக்குப் போயிருந்தான்.

“யூ.. டாமிட்...! ஓடாதே... ஸ்டாப்... ஐ.. ஸே...”

செந்தமிழன் நிற்கவில்லை.

படிகளில் தாவி ஏறினார் இளங்கோவன். மூச்சிரைக்க மேலே மொட்டை மாடிக்கு வந்து நின்றபோது-நட்சத்திர வெளிச்சத்தில் செந்தமிழன் மொட்டை மாடியின் விளிம்பை நோக்கி ஓடிக் கொண்டிருப்பது தெரிந்தது.

"எதற்காக ஓடிக் கொண்டிருக்கிறான்?"

"கீழே குதித்து தற்கொலை செய்து கொள்ளப் போகிறானா?"

இளங்கோவன் யோசித்துக் கொண்டிருக்கும்போதே....

மொட்டை மாடியின் சுவரில் ஏறி நின்று கண்ணிமைக்கும் நேரத்திற்குள் மறுபக்கம் குதித்தான்.

# 13

இண்டர்காம் டெலிபோன் அந்த விடியற்காலை மூன்று மணிவேளையில் பட்டாச்சார்யாவின் காதருகே முணுமுணுப்பாய்க் கூப்பிட்டதும் போர்வையினின்றும் கையை நீட்டி ரிஸீவரை எடுத்தார் அவா.

“எஸ்...”

மறுமுனையில் ஹோட்டல் ரிசப்ஷனிஸ்ட் இளைஞனின் குரல் கேட்டது.

“குட்மார்னிங் ஸார். இப்போது மணி மூணு பத்து. இந்த நேரத்துக்கு நீங்க எழுப்பச் சொல்லி நேத்து ராத்திரி இன்ஸ்ட்ரக்ஷன் கொடுத்திருந்தீங்க...”

“இப்போ மணி மூணு பத்தா?”

“ஆமா ஸார்...”

“இன்னும் கொஞ்ச நேரம் தூங்கணும் போலிருக்கு. ஒரு நாலு மணி சுமாருக்கு என்னை எழுப்பி விட முடியுமா?”

“வித் ப்ளஷர் ஸார்...”

பட்டாச்சார்யா ரிஸீவரை வைத்துவிட்டு அறையில் வீசிக் கொண்டிருந்த ஏ.ஸி குளிர்க்கு இதமாய் போர்வையை இழுத்துப் போர்த்திக் கொண்டார்.

அறைக்கு வெளியே வராந்தாவில் பாதுகாப்புக்காக நிறுத்தப்பட்டிருந்த செக்யூரிட்டிகள் நடை போட்டுக் கொண்டிருக்கும் சத்தம் துல்லியமாய் கேட்டது.

காதுகள் அந்த சத்தத்தைக் கேட்டுக் கொண்டிருக்க கண்கள் மறுபடியும் ஒரு தூக்கத்துக்குப் போயிற்று.

# 14

விவேக்கும் இளங்கோவனும் ஸ்வேகா அபார்ட்மெண்ட்டின் கீழ்தளத்துக்கு வேகவேகமாய் வந்து பார்த்தபோது-செந்தமிழன் சிமெண்ட் தரையில் விழுந்து ரத்தமாய் சிதறியிருந்தான். மண்டை நசுங்கியிருந்தது. கை கால்கள் கஷ்டமான கோணத்தில் மடங்கியிருந்தது.

சத்தம் கேட்டு சில ப்ளாட்களின் ஜன்னல்களில் வெளிச்சம் பிடித்துக் கொள்ள-தலைகள் எட்டிப் பார்த்தன.

“இளங்கோவன்...”

“ஸார்...”

“இனி செந்தமிழன் பிரயோஜனப்பட மாட்டான். நீங்க இங்கே போலீஸோட ஃபார்மாலிடீஸைப் பார்த்து பாடியைப் போஸ்ட்மார்ட்டத்துக்கு கொண்டு போக வேண்டிய ஏற்பாடுகளைப் பண்ணுங்க. நான் பட்டாச்சார்யா வீட்டுக்குப் போய் அந்த ட்ரைவரைப் பத்தி விசாரிக்கிறேன்...”

“எஸ்... ஸார்..”

“இந்த அப்பார்ட்மெண்ட்ல இருக்கிற எல்லார்கிட்டேயும் செந்தமிழனைப் பத்தி என்கொயர் பண்ணிடுங்க.”

“எஸ்... ஸார்...”

விவேக் வாசலில் நின்றிருந்த ஜீப்புக்கு வந்தான். ஜீப்பின் முன் பக்கம் தாவி உட்கார்ந்தான். ட்ரைவரிடம் கேட்டான்.

“முன்னாள் ஜட்ஜ் பட்டாச்சார்யா வீடு உனக்குத் தெரியுமா?”

“தெரியும் ஸார்.”

“ஜீப்பை அங்கே விரட்டு.”

ஆக்ஸிலேட்டர் மிதிபட்டு ஜீப் பறந்தது. மின்சார வெளிச்சத்தில் சென்னை நகரத் தெருக்கள் நிர்வாணமாய்க் குளித்துக் கொண்டிருக்க- ரோட்டோரத்தில் சில பேக்கரிகள் மட்டும் உயிரோடு இருந்தது.

இருபது நிமிஷ பயணம்.

ராயப்பேட்டை ஒயிட்ஸ் சாலையில் இருந்த பட்டாச்சார்யா பங்களாவுக்கு முன்பாக ஜீப் நின்றது. காம்பௌண்ட் கேட்டுக்குப் பக்கத்திலேயே இரண்டு செக்யூரிட்டிகள் ஸ்டன் கன்னோடு ஸ்டூல்களில் உட்கார்ந்திருந்தார்கள்.

ஜீப்பைப் பார்த்ததும் அலர்ட்டாகி எழுந்து வேகவேகமாய் வந்தார்கள். போலீஸ் ஜீப் என்பது தெரிந்ததும் பதட்டத்தைக் குறைத்துக் கொண்டு குனிந்து பார்த்தார்கள்.

கீழே இறங்கிய விவேக் தன் அடையாள அட்டையை எடுத்து அவர்கள் முகத்துக்கு நேரே காட்டியதும் விறைப்புக்கு வந்து சல்யூட் போட்டார்கள்.

விவேக் கேட்டான்.

“மிஸ்டர் பட்டாச்சார்யா உள்ளே இருக்காரா?”

“அவர் வீட்ல இல்லை ஸார்.”

“வெளியூர் போயிருக்காரா?”

“எங்களுக்கு எந்தத் தகவலும் தெரியாது ஸார். கடந்த ஒரு வார காலமா இந்த வீட்டுக்கு நாங்க செண்ட்ரி ட்யூட்டி பார்த்துட்டிருக்கோம். அவர் வீட்ல இல்லை...”

“வீட்ல வேற யார் இருக்காங்க?”

“அவருடைய மனைவி, அவங்க பேத்தி, ஒரு வேலைக்காரன்.”

“மிஸஸ் பட்டாச்சார்யாவைப் பார்த்து நான் பேசணும். இது ஓர் அவசரமான என்கொய்ரி...”

“உள்ளே வாங்க ஸார்.”

செண்ட்ரிகளில் ஒருவர் விவேக்கை உள்ளே கூட்டிப் போய் போர்டிகோ படிகளில் ஏறி அழைப்பு மணிக்கு வேலை கொடுத்தார்.

எலக்ட்ரானிக் காலிங்பெல் அந்த நிசப்தமான வேளையில் துல்லியமான ஒரு இசையைக் கொடுத்தது.

சில விநாடிகளுக்குப் பிறகு கதவு திறந்தது. வேலைக்காரன் தூக்கக் கலக்கமாய் எட்டிப் பார்த்தான்.

செண்ட்ரி சொன்னார்.

“அம்மாவை எழுப்பு...”

“எதுக்கு...”

“ஒரு முக்கியமான விஷயமா பேசறதுக்காக ஒரு போலீஸ் ஆபிஸர் வந்திருக்கார்.”

வேலைக்காரன் தலைமறைந்த அடுத்து நிமிஷ நேரத்தில் பட்டாச்சார்யாவின் மனைவி கமலம் சற்றே பரபரப்போடு தூக்கம் பாக்கியிருந்த கண்களோடு வந்தாள்.

“வாங்க...”

விவேக் கைகளைக் குவித்தான். “இந்த ராத்திரி நேரத்துல உங்களுக்கு வந்து தொந்தரவு தர்றதுக்காக மன்னிக்கணும் மேடம்.”

கமலம் புன்னகைத்தாள். “நீங்க மிஸ்டர் விவேக் இல்லையா? க்ரைம் ப்ராஞ்ச்சை சேர்ந்த உங்களைப்பற்றி என்னோட கணவர் பெருமையா சொல்லிட்டிருப்பார். உள்ளே வாங்க..”

கமலம் வரவேற்று உள்ளே கூட்டிப்போய் சோபாவைக் காட்டினாள்.

“உட்கார்ங்க...”

விவேக் உட்கார்ந்ததும் கேட்டாள்.

“என்ன விஷயம்... இந்த அகால வேளையில வந்து இருக்கீங்க...?”

“உங்க கணவர் வீட்ல இல்லையா மேடம்?”

“இல்லை...”

“அவர் எங்கே?”

“அது...வந்து...” கமலம் தயங்க விவேக் சொன்னான். “விஷயம் கான்ஃபிடென்ஷியல்னா சொல்ல வேண்டாம்.”

“உங்ககிட்ட சொல்றதுல எந்த தப்பும் இல்லை. அரசு பாதுகாப்புத் துறையில் ஆயிரம் கோடி ரூபாய்க்கு ஊழல் நடந்த விஷயமா இவரைத் தலைவரா போட்டு ஒரு என்கொய்ரி கமிஷன் நடந்துட்டு வர்றது உங்களுக்கு தெரியும்னு நினைக்கிறேன்...”

“தெரியும். இன்னிக்கு எல்லா பேப்பர்லேயும் பட்டாச்சார்யா கமிஷன்தானே ஹாட் நியூஸ்.”

“அந்தக் கமிஷனோட தீர்ப்பு அறிக்கையைத் தயார் பண்றதுக்காக அவர் சாம்ராட் இண்டர்நேஷனல் ஹோட்டல்ல ரூம் போட்டுகிட்டு கடந்த ரெண்டு நாளா அங்கே தங்கியிருக்கார்...! இது வெளியுலகத்துக்குத் தெரியாது. வரப்போற ஆகஸ்ட் ஐந்தாம் தேதி எர்லி மார்னிங் எல்லாப் பத்திரிக்கை நிருபர்களையும் கூட்டி வச்சு தீர்ப்பை வெளியிடறதுதான் அவரோட திட்டம்! நீங்க இது விஷயமா எதாவது என்கொயரி பண்ண வந்தீங்களா மிஸ்டர் விவேக்?”

“இல்லை மேடம்...”

“பின்னே?”

“உங்க வீட்டு கார் ட்ரைவரைப் பத்தி விசாரிக்க வந்திருக்கேன்.”

“ட்ரைவரைப் பற்றியா?”

“எஸ்... ட்ரைவர் பேர் என்ன?”

“மாரிச்சாமி.”

“இப்போ வேலைக்கு வர்றாரா?”

“இல்லையே... ஆள் இப்போ லீவ்ல இருக்கார். ஏன் என்ன விஷயம்?”

“இவர் மாரிச்சாமிதானான்னு பாருங்க...”

விவேக் தன் கையில் வைத்திருந்த கவரைப் பிரித்து போட்டோவை எடுத்துக் காட்ட-போட்டோவில் நாணல் புதர்களுக்கு நடுவே மல்லாந்து கிடந்த இறந்த உடலைப் பார்த்துவிட்டு-கமலம் முகம் மாறினாள்.

“இது... இது மாரிச்சாமிதான்.”

“மேடம்! இந்த பாடி புழல் ஏரிக்கரையில் புதைக்கப்பட்டிருந்தது. கொலை செய்த நபரையும் உடனே கண்டுபிடிச்சிட்டோம். அந்த ஆளோட பேர் செந்தமிழன். ஆளை மடக்கி விசாரிச்சுட்டிருக்கும்போது ஓடிப்போய் மாடியிலிருந்து கீழ குதிச்சு தற்கொலை பண்ணிக்கிட்டான்.”

கமலம் அதிர்ச்சியான குரலில் கேட்டாள்.

“ட்ரைவரை எதுக்காகக் கொலை பண்ணணும்?”

“காரணம் தெரியலை. செந்தமிழன்கிட்டேயிருந்து விஷயத்தைக் கறக்கறதுக்கு முந்தி அவனும் தற்கொலை பண்ணிக்கிட்டான். உங்க ட்ரைவர் மாரிச்சாமியோட கொலை, செந்தமிழனின் தற்கொலை இந்த ரெண்டையும் வெச்சுப் பார்க்கும்போது ஏதோ ஒரு பயங்கர பின்னணி இருக்கிற மாதிரி தெரியுது. உங்க கணவரை இப்ப நான் போன்ல காண்டாக்ட் பண்ண முடியுமா மேடம்?”

கமலம் சுவரில் இருந்த கடிகாரத்தைப் பார்த்தாள். நேரம் விடியற்காலை நான்கு மணி.

“இந்த நேரத்துக்கு போன் பண்றதை அவர் விரும்ப மாட்டாரே...”

“இது ஒரு போலீஸ் என்கொய்ரி மேடம். உங்க வீட்டு ட்ரைவர் கொலை செய்யப்பட்டிருக்கிறது சாதாரண விஷயமில்லை. போலீஸ்ல மாட்டிக்கிட்டா உண்மைகளை சொல்ல வேண்டியிருக்கும்கிற காரணத்துக்காக செந்தமிழன் தற்கொலை பண்ணிக்கிட்டான். இதையும் சாதாரண விஷயமா நாம எடுத்துக்க முடியாது...”

சில விநாடிகளை யோசிக்க எடுத்துக் கொண்ட கமலம் தனக்கு முன்னால் இருந்த டெலிபோனைத் தொட்டு ரிஸீவரை எடுத்துக் கொண்டு டயல் பட்டன்களைத் தட்டினாள்.

ரிங் போய் ரீஸீவர் எடுக்கப்பட்டதும் கேட்டாள். “ஹோட்டல் சாம்ராட் இண்டர்நேஷனல்?”

“எஸ்.. ரிசப்ஷனிஸ்ட் ஹியர்...”

“நான் மிஸஸ் பட்டச்சார்யா பேசறேன்.”

“சொல்லுங்க மேடம்...”

“அவர்கிட்ட கொஞ்சம் அவசரமா பேசணும்.”

“லைன்ல இருங்க மேடம். அவரைக் காண்டாக்ட் பண்ணிப் பார்க்கிறேன்.”

கமலம் காத்திருந்தாள்.

முழுசாய் ஒரு நிமிஷம் கரைந்த பிறகு ரிசப்ஷனிஸ்ட் குரல்; கேட்டது.

“மேடம்”

“என்ன?”

“அவரோட ரூம்ல ரிங் போயிட்டேயிருக்கு. நோ ரெஸ்பான்ஸ்.”

“டாய்லட்ல இருப்பாரோ?”

“டாய்லட்ல இருந்தாலும் அங்கேயும் ஒரு போன் கனெக்ஷன் இருக்கே, அங்கிருந்தே பேசலாமே. நாலு மணிக்கு எழுப்பச் சொல்லி வேக்கப் டைம் கொடுத்து இருந்தார். போன் பண்ணினா நோ ரெஸ்பான்ஸ். நல்லா அசந்து தூங்கறார்ன்னு நினைக்கிறேன்.”

“அப்படி அவர் தூங்கக் கூடியவர் இல்லையே?”

“எதுக்கும் மறுபடியும் ட்ரை பண்ணிப் பார்க்கிறேன் மேடம்.”

“ப்ளீஸ்..”

கமலம் இப்போது ரிஸீவரைக் கையில் பிடித்தபடி கவலையாய்க் காத்திருக்க இரண்டு நிமிஷம் கழித்து ரிசப்ஷனிஸ்ட் குரல் சிறிது பதட்டமாய்க் கேட்டது.

“மேடம்…! அவரோட ரூம்ல ரிங் போயிட்டே இருக்கு… செக்யூரிடி ஆட்கள்கிட்ட விஷயத்தைச் சொன்னேன். அவங்களும் காலிங் பெல் கொடுத்து… கதவைத் தட்டிகிட்டு இருக்காங்க… சம்திங் ஹேப்பண்ட்… இன்… த.. ரூம்… நீங்க உடனே புறப்பட்டு வர்றீங்களா?”

கமலம் ரீஸீவரைக் கலவரமாய் வைத்துவிட்டு விவேக்கிடம் நிமிர்ந்து விஷயத்தைச் சொல்ல அவன் எழுந்தான்.

“வாங்க மேடம்…!”

வாசலை நோக்கி நடந்தான்.

# 15

தூக்கத்தில் புரண்டு படுத்தபடி மறுபடியும் நித்திரையைத் தொடர முயன்று பார்கவியை அறைக்கதவின் தட்டல் கலைத்தது.

கோபமாய்க் குரல் கொடுத்தாள்.

“யாரு?”

“நான்தாம்மா... கோவிந்த்..”

“என்ன?”

“கொஞ்சம் எந்திரிச்சு வாங்கம்மா...”

பார்கவி போர்வையை உதறியபடி எழுந்து உட்கார்ந்து பக்கத்தில் இருந்த டைம்பீஸில் நேரம் பார்த்தாள்.

நேரம் 4.12 விடியற்காலை.

“கோவிந்த் இந்நேரத்திற்கு எதற்காக எழுப்புகிறான்?”

எரிச்சலோடு யோசித்துக் கொண்டே போய் கதவைத் திறந்தாள்.

கோவிந்த் தெரிந்தான்.

“என்ன?”

“சிபி வந்திருக்கான்.”

“இந்த நேரத்துல எதுக்கு?”

“காரியத்தை முடிச்சுட்டானாம்.”

“இவ்வளவு சீக்கிரத்திலா...?”

“நீங்களே வந்து கேளுங்கம்மா.”

பார்கவி நைட்டியை சரிப்படுத்திக் கொண்டு முன்பக்க ஹாலுக்கு வந்தாள்.

சிபி சோபாவுக்கு சாய்ந்து உட்கார்ந்து கால் மேல் கால் போட்டுக் கொண்டு ஒரு சிகரெட்டைப் புகையாய் மாற்றிக் கொண்டிருந்தான்.

பார்கவியைப் பார்த்ததும் புகை கசியும் வாயோடு சிரித்தான்.

“குட்மார்னிங் பார்கவி...”

பார்கவி பதிலுக்கு குட்மார்னிங் சொல்லாமல் சிபிக்கு எதிராக போய் உட்கார்ந்தாள்.

“என்ன சிபி காரியத்தை முடிச்சுட்டீங்களா?”

“முடிச்சாச்சு...!”

”எப்படி!”

“காலையில ஆறு மணிக்கு ரேடியோவில் நியூஸ் வரும். கேட்டுக்கோ...!”

“ரேடியோவில் கேட்கிறது இருக்கட்டும். நீங்க பதில் சொல்லுங்க. பட்டாச்சார்யாவை எப்படித் தீர்த்துக் கட்டினீங்க?”

“அதெல்லாம் உனக்குத் தேவையில்லாத விஷயம். பேசின பட்டாச்சார்யாவை முடிச்சாச்சு...”

“கொலைன்னு போலீஸுக்குத் தெரியாதே?”

“தெரியாது...! ஸ்காட்லாந்து போலீஸே வந்தாலும் பட்டாச்சார்யாவோட மரணம் இயற்கையானதுதான்னு சர்ட்டிபிகேட் கொடுத்துப் போவாங்க...”

“ஹோட்டல் ரூமை எப்ப காலி பண்ணீங்க சிபி...?”

“மூணே முக்கால் மணிக்கெல்லாம் ரூமை வெகேட் பண்ணி வெளியே வந்துட்டேன்...”

“யார்க்கும் உங்கமேல சந்தேகம் வரலையே?”

“எப்படி சந்தேகம் வரும்? பட்டாச்சார்யா கொலை செய்யப்பட்டு விட்டதா போலீஸுக்கு சந்தேகம் வந்தாத்தானே அந்தப் பிரச்சனையே?”

“எனக்கு இன்னும் நம்பிக்கை வரலை சிபி.”

“காலையில் ஆறு மணிக்கு நியூஸ் கேட்டுப் பாரு. பட்டாச்சார்யா மாரடைப்பில் மரணம்னு சொல்லுவாங்க... அந்த நியூஸைக் கேட்ட பின்னாடி எனக்குப் பணம் கொடுத்தா போதும்! வரட்டுமா? காலையில பத்து மணிக்கு வர்றேன். பேசின பணத்தை சூட்கேஸ்ல போட்டு ரெடியா வை...”

சொன்ன சிபி கையில் உயிரோடு இருந்த பாதி சிகரெட்டை ஆஷ்ட்ரேயில் இட்டுத் தேய்த்துவிட்டு எழுந்தான்.

“சிபி...”

“என்ன...?”

“ஹோட்டல்ல இருக்கிற அவ்வளவு செக்யூரிடியையும் மீறி எப்படி உள்ளே போய் பட்டாச்சார்யாவோட கதையை முடிச்சீங்க...? தெரிஞ்சுக்கற ஓர் ஆர்வத்துல கேட்கிறேன். என்கிட்ட சொல்லக்கூடாதா?”

சிபி புன்னகைத்தான்.

“கண்டிப்பா தெரிஞ்சுக்கணுமா?”

“ஆமா...”

“பத்து மணிக்குப் பணம் வாங்க வரும்போது சொல்றேன்.”

சிபி கிளம்பிவிட்டான்.

# 16

அறை எண் 788-ஐ இன்னமும் தட்டி அதிர வைத்துக் கொண்டிருந்தார்கள் செக்யூரிடி அதிகாரிகள்.

விவேக்கும் கமலமும் அறைக்கு முன்பாய் போய் நிற்க, ஹோட்டல் மானேஜர் அந்த அதிகாலை வேளையிலும் வியர்த்த முகத்தோடு விவேக்கை ஏறிட்டார்.

"உள்ளே என்னாச்சுன்னே தெரியலை ஸார்.."

"இந்த லாக்குக்கு வேற சாவி இருக்கா?"

"ட்யூப்ளிகேட் சாவி இந்த லாக் சிஸ்டத்துக்குக் கிடையாது ஸார்."

"அப்படீன்னா கதவை உடைக்க வேண்டியதுதான்."

"ஆமாம் ஸார்..."

"தென் பிரேக் த டோர்..."

ஹோட்டல் மானேஜர் தனக்குப் பின்னால் நின்றிருந்த பணியாளர்களைப் பார்த்துத் தலையசைக்க-அடுத்த சில நிமிஷங்களில் அவர்கள் கடப்பாரைகளோடும் நெம்புகோல்களோடும் வந்தார்கள்.

"ம்... உடைங்க!"

அந்த அலங்கார ரோஸ்வுட் கதவு உடைபட ஆரம்பித்து பதினைந்து நிமிஷங்களுக்குப் பிறகு சிஸ்டம் உடைபட்டு மல்லாந்தது.

விவேக் முதல் ஆளாய் உள்ளே நுழைந்தான். இருபதுக்கு இருபது என்ற அளவிலான மிகப்பெரிய அந்த அறையில் வலதுபக்க ஓரமாய் கட்டில் தெரிய-

பட்டாச்சார்யா அதில் ஒருக்களித்துப் படுத்திருந்தார்.

விவேக்கிற்குப் பின்னால் ஓடிவந்த கமலம் வேக வேகமாய் "என்னாங்க" என்று குரல் கொடுத்தபடி அவருடைய தோளைப் பற்றி உசுப்பித் திருப்ப பட்டாச்சார்யா உடம்பில் எந்த சலனமும் இல்லாமல் மல்லாந்தார்.

ஏற்கெனவே வரவழைக்கப்பட்டிருந்த டாக்டர் ஒருவர் அவசர கதியில் பட்டாச்சார்யாவை சோதித்துப் பார்த்துவிட்டு விவேக்கிடம் திரும்பி சொன்னார்.

"கார்டியாக் அரஸ்ட், திடீர்ன்னு மாரடைப்பு ஏற்பட்டு உயிர் பிரிஞ்சிருக்கு.."

கமலம் பெரிய குரல் எடுத்து அழ ஆரம்பிக்க, விவேக் தன் பார்வையை அந்த அறைக்குள் சுழற்றினான்.

ஒரு பெரிய மேஜை போடப்பட்டு அதன் மீது நிறைய ஃபைல்கள். ஒரு சிறிய பெண்டியம் கம்ப்யூட்டர்; ஒரு எலக்ட்ரானிக் டைப்ரைட்டர்.

அறை சுத்தமாய்த் தெரிந்தது.

“டாக்டர்...”

“எஸ்...”

“ஹார்ட் அட்டாக்தானா!”

“செண்ட் பர்சென்ட்.. எதுக்கும் பாடியை போஸ்ட்மார்ட்டத்துக்கு உட்படுத்திப் பார்த்துடறது நல்லது. ராத்திரி அவர் படுக்கப் போகும் போது என்ன மாதிரியான டின்னர் எடுத்துக்கிட்டார்ன்னு தெரிஞ்சா பரவாயில்லை...”

விவேக் அறைக்கு வெளியே இருட்டு முகங்களோடு நின்றிருந்த இரண்டு செண்ட்ரிகளையும் கூப்பிட அவர்கள் வேக வேகமாய் உள்ளே வந்தார்கள்.

“ஸார்...”

“பட்டாச்சார்யா ராத்திரி என்ன டின்னர் சாப்பிட்டார்ன்னு தெரியுமா?”

“தெரியும் ஸார்.. நான்தான் ஃபுட் சர்வ் பண்ணினேன். ஹோட்டல் வெயிட்டர் யாரையும் உள்ளே அலவ் பண்றது கிடையாது.

“சரி...! அவர் என்ன சாப்பிட்டார்?”

“ரெண்டு சப்பாத்தி, ஒரு வாழைப்பழம், ஒரு கப் பால்,”

“அவ்வளவுதானா?”

“கடந்த ரெண்டு நாளா அவரோட நைட் டயட் இதுதான் ஸார்.”

“ராத்திரி யாராவது அவரைப் பார்க்க வந்தாங்களா?”

அவரைப் பார்க்க யாருக்கும் அனுமதி கிடையாது ஸார். இந்த ஏழாவது மாடியில் இருக்கிற அத்தனை ரூம்களும் வேக்கண்டாதான் இருக்கு. எங்களைத் தவிர இந்த வராந்தாவில் யாரும் நடக்கக் கூட முடியாது ஸார்...”

“ராத்திரி எத்தனை மணிக்கு அவர் படுக்கப் போனார்ன்னு தெரியுமா?”

“தெரியும் ஸார்...”

“எத்தனை மணிக்கு...?”

“பதினோரு மணிக்கு...”

“செண்ட்ரி எவ்வளவு பேர்?”

“நாலு பேர் ஸார். கிழக்கு வராந்தா கோடியில் ஒருத்தரும். மேற்கு வராந்தா கோடியில் ஒருத்தரும் நின்னுட்டிருப்போம். ஜட்ஜ் அய்யாவோட மரணம் இயற்கையானதுதான் ஸார். இது ஒரு கொலையா இருக்க முடியாது. ஏன்னா எங்களை மீறி யாரும் உள்ளே போக முடியாது.”

“இப்பவே தீர்மானமாய் எதுவும் சொல்ல முடியாது பி.எம் ரிப்போர்ட் வந்த பிறகுதான் இது இயற்கையான மரணமா கொலையான்னு தெரியும். டாக்டர் நீங்க ஹாஸ்பிட்டலுக்கு போன் பண்ணி மார்ச்சுவரி வேனைக் கொண்டு வரச் சொல்லிடுங்க...”

டாக்டர் நகர்ந்தார்.

பட்டாச்சார்யாவுக்குத் தலைமாட்டில் நின்று கொண்டு அழுதபடி இருந்த கமலத்தை நெருங்கினான். விவேக்.

“மேடம்...?”

அவள் நீர் நிரம்பிய விழிகளோடு நிமிர்ந்தான்.

“இது கொலையா இருக்க முடியாதுன்னு டாக்டர் சொல்றார். இது கார்டியாக் அரஸ்ட். இதுக்கு முன்னாடி இவருக்கு அட்டாக் வந்திருக்கா?”

கண்ணீரைக் கஷ்டப்பட்டு விழுங்கிக் கொண்டு கமலம் சொன்னாள். “ரெண்டு வருஷத்துக்கு முந்தி ஒரு தடவை மைல்ட் அட்டாக் வந்திருக்கு...”

“இது கொலையா இருக்கும்னு நினைக்கறீங்களா மேடம்?”

கமலம் ஆவேசமாய் சொன்னாள்.

“கண்டிப்பா இது கொலைதான்!”

“எப்படி சொல்றீங்க?”

“வீட்ல இருக்கும்போது இவர்க்கு மிரட்டல் போன் வந்திட்டேயிருக்கும். ஆகஸ்ட் ஐந்தாம் தேதி வரைக்கும் நீ உயிரோடு இருந்தாத்தானே கமிஷன் அறிக்கையை வெளியிடுவேன்னு போன்ல மிரட்டுவாங்க...”

கமலம் அழுகை அடைத்துக்கொண்ட குரலில் சொல்லிக் கொண்டிருக்கும்போதே விவேக்கின் பார்வை பட்டாச்சார்யாவின் உடம்பின் மேல் விழுந்து கிடந்த க்ரே நிற உல்லன் போர்வையின் மேல் சட்டென்று நிலைத்தது.

போர்வையை நோக்கிப் போனான்.

# 17

கிழக்கு திசை விடியும் பக்குவத்தில் இருக்க தன் வீட்டு மாடி சிட்-அவுட்டில் யோசனையாய் நடை போட்டுக் கொண்டிருந்தாள் பார்கவி.

கோவிந்த் மாடிப்படிகள் ஏறி மூச்சிரைக்க வந்தான். நெற்றியும் கழுத்தும் வியர்த்திருந்தது.

"அம்மா...!"

"என்ன! சாம்ராட் ஹோட்டலுக்குப் போய்ட்டு வந்தியா?"

"ஆமாம்மா..."

"என்ன பேசிக்கறாங்க...?"

"பட்டாச்சார்யா ஹார்ட்அட்டாக்கில்தான் செத்துப் போயிட்டதா எல்லாரும் பேசிக்கறாங்க..."

"போலீஸ் வந்தாங்களா?"

"போலீஸ் யாரும் கிடையாது. ஆனா க்ரைம் ப்ராஞ்ச் ஆபீஸர் விவேக், பட்டாச்சார்யா ஒய்ப்போடு அங்கே வந்து பேசிட்டிருக்கார். அறைக்கு வெளியே காவலுக்கு இருந்த செக்யூரிடீஸ் இது கொலையா இருக்க முடியாதுன்னு அடிச்சு சொல்லிட்டாங்க. டாக்டரோட ஸ்டேட்மெண்ட்டும் ஹார்ட் அட்டாக்தான்."

"ஸோ... இது கொலைன்னு ஊர்ஜிதமாக வாய்ப்பே இல்லை?"

"சுத்தமா இல்லீங்கம்மா..."

"சிபி இந்தக் காரியத்தை எப்படி பண்ணியிருப்பான்னு நீ நினைக்கிற கோவிந்த்...?"

"அதாம்மா எனக்கும் ஆச்சர்யமாயிருக்கு.. அவன் ஒரு படிச்ச க்ரிமினல். விஞ்ஞானபூர்வமா யோசனை பண்ணிக் காரியத்தைக் கச்சிதமா முடிக்கிறதுல கில்லாடி..."

கீழே போர்டிகோவில் கார் ஹார்ன் சத்தம் கேட்டது.

கோவிந்த் ஓடிப்போய் எட்டிப் பார்த்துவிட்டு வந்து சொன்னான். "அய்யா வந்திருக்கார்ம்மா..."

"மேலேயே அவரை வரச் சொல்லு கோவிந்த். அரை மணி நேரம் கழிச்சு காப்பி கொண்டுட்டு வா, போதும்."

“சரிங்கம்மா...”

கோவிந்த் கீழே இறங்கிப் போக அடுத்த சில நிமிடங்களில் நேற்றைக்கு இரவு வந்துவிட்டுப் போன சஃபாரி நபர் சிறிது பதட்டமாய் மேலே ஏறி வந்தார். பின்னாலேயே கோவிந்த்.

“பார்கவி...” மூச்சிரைத்தார் சஃபாரி.

அவள் அவரை நெருங்கித் தோளில் தன் கைகளை மாலையாய்ப் போட்டாள்.

“போட்ட திட்டம் துல்லியமாய் சக்சஸ். உங்க பாதுகாப்புத் துறைக்கு சிம்ம சொப்பனமாக இருந்த பட்டாச்சார்யா இப்போ உயிரோடு இல்லை தெரியுமா? ஆள் ஹார்ட் அட்டாக்ல போயிட்டார்.”

சஃபாரி இன்னமும் மூச்சிரைத்தார்.

“எனக்கும் நியூஸ் வந்தது...”

“நியூஸைக் கேள்விப்பட்ட பின்னாடியும் நீங்க சந்தோஷமா இருக்கிற மாதிரி தெரியலையே...?”

“எப்படி சந்தோஷமா இருக்க முடியும் பார்கவி...! பட்டாசார்யாவோட மரணம் தர்ற சந்தோஷத்தை அனுபவிக்க முடியாமே செந்தமிழனோட மரணம் நிகழ்ந்திருக்கே...”

பார்கவி திடுக்கிட்டாள்.

“என்னது? செந்தமிழன் இறந்துட்டாரா?”

“ஆமா...!

“எப்படி?”

“மொட்டை மாடியிலிருந்து விழுந்து தற்கொலை பண்ணி இறந்திருக்கிறான்...”

“ஏன்?”

“நேத்து மிட்நைட்டுக்கு மேல செந்தமிழன் என்னை அவனோட செல்போன்ல காண்டாக்ட் பண்ணிப் பேசினான். பட்டாச்சார்யா வீட்டுக் கார் ட்ரைவர் மாரிச்சாமியை கோவிந்தும் செந்தமிழனும் கொலை பண்ணி புழல் ஏரிக்கரையில் புதைச்சது வெட்ட வெளிச்சமாயிடுச்சு. நல்ல வேளை கோவிந்த் பேர், உன்னோட பேர் வெளியே வரலை...”

“புழல் ஏரிக்கரையில ட்ரைவர் மாரிச்சாமியை புதைச்ச விஷயம் போலீஸுக்கு எப்படித் தெரிஞ்சது...?”

“அதைப் பத்தி செந்தமிழனுக்குத் தெரியலை. ஆனால் ட்ரைவரைக் கொலை செய்யும்போது செந்தமிழனோட சர்ட் பாக்கெட்டிலிருந்து கீழே விழுந்த அவனோட விசிட்டிங் கார்டை எடுத்து மாரிச்சாமி தன்னோட வாய்க்குள்ளே அதக்கி வைக்கப்போய்- போலீஸ் நேரா அவனோட அட்ரஸுக்குப் போய் என்கொயர் பண்ணியிருக்காங்க. அவனும் ஏதோ சொல்லி சமாளிச்சிருக்கான். போலீஸும் மறுநாள் காலையில பத்து மணிக்கு க்ரைம் ப்ராஞ்ச் ஆபீஸ்க்கு வரச் சொல்லிட்டுப் போயிருக்காங்க. இந்த விபரத்தையெல்லாம் செந்தமிழன் மிட்நைட்டே… அதாவது போலீஸ் வந்துட்டுப் போன பின்னாடி எனக்குப் போன் பண்ணிச் சொன்னான். கொஞ்ச நேரத்துக்கு முன்னாடி அந்தப் பக்கமா வந்தபோது செந்தமிழன் குடியிருந்த அபார்ட்மெண்ட்க்கு முன்னாடி ஒரே கூட்டம். கூட்டத்துல ஒருத்தரை விசாரிக்கப்போன செந்தமிழன் போலீஸ்க்குப் பயந்து மொட்டை மாடியிலிருந்து கீழே குதிச்சு தற்கொலை பண்ணிக்கிட்டானாம்…”

பார்கவி பெருமூச்சு விட்டாள்;.

“நல்ல வேளை! செந்தமிழன் போலீஸ் கையில மாட்டிக்கலை.”

கோவிந்த் குறுக்கிட்டுச் சொன்னான். “அம்மா! நான் ஆரம்பத்திலேயே சொன்னேன். ட்ரைவர் மாரிச்சாமியைக் கொலை செய்யறது வேண்டாத வேலை. அவன் நமக்கு எவ்வளவு விசுவாசமா இருக்கான். பட்டாச்சார்யா எங்கே போறார்.. எங்கே வர்றார்… யாரைப் பார்க்கிறார். இது மாதிரியான விஷயமெல்லாம் உடனுக்குடன் நமக்குக் கிடைச்சுட்டு இருந்தது. அவனைக் கடைசி வரைக்கும் நமக்கு உளவாளியாகவே வெச்சுக்குவோம்னு நான் சொன்னதை செந்தமிழன் ஒத்துக்கலை. மாரிச்சாமி என்னிக்கு இருந்தாலும் ஒரு நாள் நம்மைப் போலீஸ்ல காட்டிக் கொடுத்துடுவான். இப்பவே அவனோட பேச்சு சரியில்லை. பணம் அதிகமா எதிர்பார்க்கிறான்…! நாம் ஏதாவது சொன்னா முணுமுணுப்போட பேசறான். இவனை விட்டு வைக்கக் கூடாதுன்னு சொல்லி தீர்த்துக் கட்டறதுக்கு ஏற்பாடு பண்ணினார் செந்தமிழன். தீர்த்துக்கட்டின பிறகும் சொன்னேன்.. பாடியை புதைக்க வேண்டாம்… எங்கேயாவது கொண்டு போய் பெட்ரோல் ஊத்தி எரிச்சுடலாம்னு. அதையும் செந்தமிழன் காதுல போட்டுக்கலை. பாடியைப் புழல் ஏரிக்கரைக்குக் கொண்டு போய் ஏனோதானோன்னு புதைச்சார். எதையுமே யோசிச்சு தீர்க்கமா பண்ணியிருந்தா போலீஸ் நம்ம இருக்கிற திசைப்பக்கம் வந்திருக்காது.”

“எப்படியோ பட்டாச்சார்யா ஒழிஞ்சார். இப்போதைக்கு இந்தச் சந்தோஷம் போதும்..” பார்கவி சொல்ல சஃபாரி கேட்டார்.

“சிபி வந்தானா?”

“ம்… கொஞ்ச நேரத்துக்கு முந்திதான் வந்துட்டுப் போனான். மறுபடியும் பணத்துக்காகப் பத்து மணிக்கு வர்றதா சொல்லிட்டுப் போயிருக்கான்.”

“பட்டாச்சார்யாவுக்கு ஹார்ட் அட்டாக்கை எப்படி வரவழைச்சான்னு சொன்னானா?”

“சொல்லலை. பணம் வாங்க வரும்போது சொல்கிறானாம்.”

“பட்டாச்சார்யாவோட மரணம் ஹார்ட் அட்டாக் மூலமா இயற்கையா ஏற்பட்டதுதான்னு முடிவா தீர்மானமாகற வரைக்கும் மனதுக்கு நிம்மதி கிடையாது…”

பார்கவி கோவிந்தை ஏறிட்டாள்.

“கோவிந்த்! நீ கீழே போய் காப்பி ப்ரிபேர் பண்ணு. நாங்க இப்ப வந்துடறோம்...”

“சரிங்கம்மா..”

கோவிந்த் கீழே இறங்கிப் போக-

பார்கவி சில விநாடிகள் மௌனித்துவிட்டு சொன்னாள். “பத்து மணிக்கு பணம் வாங்க வரப் போகிற சிபி இங்கிருந்து உயிரோடு திரும்பிப் போகப் போறதில்லை. அதுக்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் பண்ணிட்டேன்...”

சஃபாரி பார்கவியைப் பயத்தோடு பார்த்தார்.

“இது தேவையா?”

“எது...?”

“சிபியைத் தீர்த்துக் கட்டறது தேவையா?” அவனால பின்னாடி ஆபத்து வரும்னு நீ நினைக்கிறியா?”

ஆபத்து வருதோ இல்லையோ... அவனால எனக்கும் உங்களுக்கும் இடைஞ்சல்தான். ஒரு கோடி ரூபாயை வாங்கிட்டுப் போறவன் சும்மா இருக்க மாட்டான். மறுபடி மறுபடி வருவான். ப்ளாக்மெயில் பண்ணுவான்... எந்தக் காரணத்தை சொல்லியும் நாம அவனைத் தவிர்க்க முடியாது.”

“நல்லா யோசனை பண்ணு பார்கவி...”

“பண்ணிட்டேன்! வீட்ல இருக்கிற வேண்டாத குப்பைகளை ஒழிச்சுக்கட்டற மாதிரி... நம்ம க்ருப்புல இருக்கிற தேவையில்லாத ஆட்களை கொஞ்சம் கொஞ்சமா களை எடுக்கணும்.”

“சிபியை தீர்த்துக் கட்டப்போற விஷயம் நம்ம கோவிந்துக்குத் தெரியுமா?”

“தெரியாது. காரியத்தை முடிச்ச பின்னாடி அவன்கிட்ட சொல்லிக்கலாம். சிபியோட பாடியை டிஸ்போஸ் பண்ண வேண்டியது அவனோட வேலை. நான் எதைச் சொன்னாலும் சரி, கோவிந்த் தட்டிப் பேசமாட்டான்.”

“பார்கவி உன்னோட துணிச்சல் என்கிட்ட கிடையாது. நீ எதைப் பண்ணினாலும் சரி, ஒரு தடவைக்கு ரெண்டு தடவை யோசனை பண்ணு.. ஏன்னா விஷயம் வெளிவந்தா மாட்டிக்கப் போறது நீ மட்டும் இல்லை. என்னையும் சேர்த்துப் பாதுகாப்புத் துறையில் இருக்கிற முக்கியமான பல அதிகாரிகளும்தான்.”

“நீங்க எதுக்கும் பயப்படாமே உங்க டிபார்ட்மெண்ட்டுக்குப் போய் வேலையை கவனிங்க.. நான் இங்கே எல்லாத்தையும் பார்த்துக்கிறேன்...”

# 18

பட்டாச்சார்யாவின் உடம்பின் மேல் கிடந்த க்ரே நிற உல்லன் போர்வையை உன்னிப்பாய் பார்த்தபடி பக்கத்தில் போனான் விவேக்.

அந்த போர்வையை மெல்ல உருவிப் பிரித்துப் பார்க்க-பெயிண்ட் துகள்களும் பொடிப் பொடியான சிமெண்ட் துகள்களும் ஒட்டிக் கிடப்பது தெரிந்தது.

விவேக் ஹோட்டல் மானேஜரைக் கையசைத்துக் கூப்பிட்டான். ப்ளீஸ் ஒரு நிமிஷம்... இப்படி வாங்க..”

வந்தார்.

“இந்த அறையில் நேத்து ஏதாவது ரிப்பேர் வேலை நடந்ததா?”

“இல்லையே ஸார்.”

“பின்னே எப்படி பட்டாச்சார்யா போர்த்திக்க உபயோகப்பட்ட இந்தப் போர்வையில பெயிண்ட் பார்ட்டிகள்ஸும் சிமெண்ட் பார்ட்டிகள்ஸும் விழுந்து கிடக்கு.”

“தெரியலையே ஸார்..” சொல்லிவிட்டு அறையின் எல்லா சுவர்களையும் சுற்றிப் சுற்றிப் பார்த்தார்.

விவேக்கின் பார்வையும் அறையின் எல்லாப் பக்கங்களிலும் சுழன்று விட்டு கடைசியில் மேற்கூரை சீலிங்கில் போய் பதிந்தது.

அறையின் சீலிங் பரப்பு முழவதும் ப்ளாஸ்டர் ஆஃப் பாரிஸ் ஒட்டப்பட்டு பூ வேலைப்பாடுகளோடு தெரிந்தது.

“மானேஜர்..”

“ஸார்.”

“உயரமான ஸ்டுல் ஒண்ணு வேணும். ஏற்பாடு பண்ண முடியுமா?”

“இதோ..”

மானேஜர் அங்கிருந்த இண்டர்காமை எடுத்து தகவல் கொடுக்க-சீலிங் வரைக்கும் ஏறி வேலை பார்க்கக்கூடிய வகையில் உயரமான ஸ்டுல் ஒன்று அடுத்த ஐந்தாவது நிமிஷம் அறைக்குள் நுழைந்தது.

விவேக் ஸ்டுலில் ஏறி-பட்டாச்சார்யா படுத்திருந்த கட்டிலுக்கு நேர் மேலே இருந்த சீலிங் பகுதிக்கு வந்து அந்தப் பரப்பைத் தடவிப் பார்த்தான்.

சில விநாடி நேர தடவலுக்குப் பின் விவேக்கின் இடது கை ஆட்காட்டி விரலுக்கு சீலிங் பரப்பில் மறைந்திருந்த அந்த சிறிய குழி தட்டுப்பட்டது.

விவேக்கின் மூளைக்குள் நியூரான்கள் விழித்துக் கொண்டன, "இங்கேதான்... ஏதோ விஷயம் இருக்கிறது!"

தன் சட்டைப் பாக்கெட்டில் இருந்த பால்பாயிண்ட் பேனாவை எடுத்து அந்தச் சிறிய குழிக்குள் நுழைத்து கிளறிப் பார்த்தான்! பேனாவின் நுனியில் வெள்ளையாய் எதுவோ பசை மாதிரி ஒட்டிக் கொண்டு வந்தது.

விவேக் அதைக் கையால் தடவிப் பாத்தான். ஒட்டிக் கொண்டது. முகர்ந்து பார்த்தான். வாசனை எதுவும் இல்லை.

"மானேஜர்."

"ஸார்."

"இங்கே ஒரு குழி மாதிரி இருக்கே... இது எதுக்காக?"

"குழியா?"

"ம்..."

"அங்கே குழி எதுவும் இருக்காதே ஸார்?"

"இருக்கே!"

பேனாவை மறுபடியும் உள்ளே நுழைத்துக் காட்டி விட்டுச் சொன்னான். "குழிக்குள்ளே வெள்ளையா ஏதோ மாதிரியும் இருக்கு."

"ஸார்... நான் இந்த ஹோட்டலுக்கு மானேஜரா வந்து ரெண்டு வருஷம்தான் ஆகுது. இங்கே இருக்கிற கட்டிட அமைப்பைப் பத்தி எனக்கு எதுவும் தெரியாது..."

"சரி... இந்த அறைக்கு நேர் மேல எட்டாவது மாடிதானே?"

"ஆமா ஸார்.."

"இந்த சீலிங்குக்கு மேல எத்தனையாவது நெம்பர் அறை வரும்?"

"888 எண் அறை, ஸார்."

"அந்த அறையில் யார் தங்கியிருக்காங்க?"

"தெரியலை! ரிசப்ஷன்ல கேட்டுச் சொல்லட்டுமா ஸார்?"

“வேண்டாம். இந்த அறைக்கு நாமே போய் அங்கே யார் இருக்காங்கன்னு பார்க்கலாம்.”

இருவரும் அறையை விட்டு வெளியே வந்து எட்டாவது மாடியை நோக்கிப் போனார்கள்.

இரண்டு நிமிஷ நடை.

எட்டாவது மாடி. 888 எண் அறை வந்தது. கதவு இறுக்கமாய் சாத்தியிருக்க – காலிங்பெல் ஸ்விட்ச் தலையில் கையை வைத்தான் விவேக்.

சில விநாடிகளுக்குப் பின்-கதவு திறக்கப்பட வரிவரியான பைஜாமாவோடு அந்த நபர் தெரிந்தார்.

விவேக் அந்த நபரைப் பார்வையால் ஊடுருவிக் கொண்டே கேட்டான்.

“உங்க பேர் என்ன?”

“ப்ரான்ஸிஸ்!”

“நேட்டிவ் ப்ளேஸ்?”

“கோயமுத்தூர்.”

அந்த அறைக்குள் நுழைந்த – விவேக் விரலை உயர்த்தியபடி சொன்னான். “இது போலீஸ் விசாரணை. உங்க அறைக்கு நேர் கீழ் அறையில் இருந்த ஒரு முக்கியமான நபர் இறந்து போயிருக்கிறார். அவர் எப்படி இறந்தார் என்கிற உண்மையைக் கண்டுபிடிக்கிற முயற்சிதான் இது. எனக்கு வேண்டியது உண்மையான தகவல்கள்?”

அந்த நபரின் முகம் கலவரத்துக்குப் போவதைக் கவனித்த விவேக் கேட்டான்.

“இந்த அறையில் என்ன நடந்தது, உங்களைத் தவிர வேற யாராவது இருந்தாங்களா?”

விவேக்கின் குரலில் இரந்த கண்டிப்பை உணர்ந்த அவன் கைகளைக் கூப்பினான்.

“ஸ... ஸார் இந்த அறையில் என்ன நடந்ததுங்கிற உண்மையை இப்பவே உங்ககிட்ட சொல்லிடறேன். இன்னிக்கு அதிகாலை மூணேகால் மணி சுமார்க்கு என்னோட அறைக்கதவு தட்டப்படற சத்தம் கேட்டது. தூக்கக் கலக்கத்துல யார்னுகூட கேக்காமே அவசரப்பட்டுப் போய் திறந்துட்டேன். வெளியே ஒரு ஆள் நின்னுட்டிருந்தான். நான் யார்னு கேட்கும் போதே என் நெற்றியில் அவன் துப்பாக்கியை வெச்சு என்னை உள்ளே தள்ளினான். அறைக் கதவை தாழ் போட்டுகிட்டு என்னை சுவரோரமா போய் உட்காரச் சொல்லிவிட்டு இந்தக் கட்டிலை நகர்த்தி மார்பிள் தரையின் ஒரு சின்னப் பகுதியில் எதையோ தடவி சின்னச்சின்ன சத்தங்களோடு ஒரு பத்து நிமிஷத்துக்கு மும்முரமா ஏதோ வேலை செஞ்சான்.”

"அவன் என்ன பண்ணினான்னு நீங்க பார்க்கலையா?"

"பார்க்க முடியலை... நான் எதுவும் பார்த்துடக் கூடாதுன்னு என்னை அந்தப் பக்கமா திரும்பி உட்கார வெச்சிட்டான். சரியா இந்த ரூமுக்குள் பதினஞ்சு நிமிஷம் இருந்தான். போயிட்டான். போகும்போது என்னை மிரட்டிட்டுப் போனான்."

"என்னான்னு?"

"இங்கே நடந்ததை வெளியே யார்கிட்டேயும் சொல்லக் கூடாது. சொன்னா உன்னோட அட்ரஸைக் கண்டுபிடிச்சுட்டு வந்து உன் உயிரை எடுப்பேன்னு சொல்லிட்டுப் போனான். நான் ரொம்பவும் பயந்தவன் ஸார். அதான் போலீஸுக்குத் தகவல் கொடுக்காமே மௌனமா இருந்துட்டேன். இப்ப நீங்க வந்து கீழ் ரூம்ல யாரோ செத்துட்டதா சொல்லி விசாரணை பண்றதால உங்ககிட்ட நடந்த உண்மைகளைச் சொல்லிட்டிருக்கேன்..."

விவேக் கேட்டான்.

"அவன் வேலை பார்த்த மார்பிள் தரை போர்ஷன் எது?"

கட்டிலை நகர்த்திக் காட்டினான்.

விவேக் குனிந்து பார்த்தான்.

அந்தப் பெரிய மார்பிள் சதுரத்தில் ஒரு கோலிக்குண்டு சைஸ் பரப்பில் நிறம் வித்தியாசமாய்த் தெரிந்தது.

பால்பாயிண்ட் பேனாவால் அதைக் கிளறிப் பார்த்தான்.... விவேக். அது லேசாய் இளகி உள்ளே போயிற்று.

பார்த்துக் கொண்டிருந்த மானேஜர் அதிர்ச்சியாய்க் குரல் கொடுத்தார்.

"ஸார்...இந்த ரூமிலிருந்து கீழ் ரூமுக்கு அவன் துளை போட்டிருக்கான்."

"எப்படி துளைபோட முடியும்? மார்பிள், அதற்குக் கீழே அரையடி கனத்துக்கு கான்கிரீட் இருக்கும்போது வந்த நபர் ஒரு பதினைஞ்சு நிமிஷ நேரத்தில் துளைபோட்டு இந்த வழியா பட்டாச்சாரியாவை எப்படிக் கொலை பண்ணியிருக்க முடியும்?" என்று குழப்பமாய் சொன்ன விவேக் அந்த நபரை ஏறிட்டான்.

"உங்க பேர் என்ன சொன்னீங்க? பிரான்ஸிஸ்ஸா?"

"ஆமா ஸார்..."

"வந்த ஆள் எப்படியிருந்தான்?"

“வந்தவன் இளைஞனா...இல்லை மிடில் ஏஜ்டான்னு தெரியலை ஸார். நீல நிற ஷெர்வாணி கோட், தலையில் ஒரு ஜரிகைக் குல்லா. கையில் தங்க பூண் போட்ட வாக்கிங் ஸ்டிக்.”

மானேஜர் சட்டென்று பதட்டமானார்.

“ஸார்…அவன் பேர் விட்டல்தாஸ். பம்பாய் பார்ட்டி. நேத்திக்குக் காலையிலதான் ரூம் எடுத்தான்.”

“எந்த ரூம்?”

“ரிசப்ஷனில் கேட்டால்தான் தெரியும்.”

“கேளுங்கள்.”

மேனேஜர் வேகவேகமாய் இண்டர்காமை உயிர்ப்பித்துக் கேட்டார்.

உடனே பதில் வந்தது.

“விட்டல்தாஸ் ரூமைக் காலி பண்ணிட்டுப் போயிட்டார் ஸார்!”

“எப்போ?”

“விடிகாலை 3.45 மணிக்கு…”

“அவ்வளவு காலை நேரத்துல ஏன் வெகேட் பண்றீங்கன்னு நீ கேட்கலையா?”

“கேட்டேன் ஸார்…”

“என்ன சொன்னார்?”

“அஞ்சு மணி பம்பாய் ஃப்ளைட்டை பிடிக்கணும்னு சொன்னார்.”

“ஏர்போர்ட்டுக்கு எப்படிப் போனார்….காரா?”

“நான் நோட் பண்ணலை ஸார்.”

“ஏர்போர்ட்டுக்கு உடனே போன் பண்ணி அஞ்சு மணிக்கு பம்பாய் ஃப்ளைட் ஏதாவது இருக்கான்னு கேட்டுப் பாரு…”

“எஸ்…ஸார்;”

# 19

காலை மணி எட்டு நாற்பத்தைந்து.

விவேக் குளித்து விட்டு டிஃபன் சாப்பிட டைனிங் டேபிளுக்கு வந்து உட்கார்ந்தான்.

ரூபலா ஹாட்பேக்கில் இருந்த இட்லியை தட்டில் எடுத்து வைத்துக்கொண்டே கேட்டாள்.

“பட்டாச்சார்யா போஸ்ட்மார்ட்டம் ரிபோர்ட்ல ஏதாவது க்ளூ கிடைச்சுதா?”

“கிடைக்கலை ரூபி. டாக்டர்ஸோட போஸ்ட் மார்ட்டம் ரிப்போர்ட்படி பட்டாச்சார்யா இறந்தது ஹார்ட் அட்டாக்கில். ஆனா உண்மையில் நடந்தது கொலை. விட்டல்தாஸ்னு ஓர் ஆள் நேத்திக்குக் காலையில் ஹோட்டலுக்கு வந்து ரூம் எடுத்துத் தங்கி இன்னிக்கு விடிகாலை மூணே முக்கால் மணிக்கு எட்டாவது மாடிக்குப் போய் அங்கே ரூம் நெம்பர் 888-இல் தங்கியிருந்த பிரான்ஸிஸ் என்கிற ஆளை மிரட்டி ரூம்ல துளை போட்டு அந்த ரூமுக்கு நேர் கீழே இருந்த 788 ரூமில் தங்கியிருந்த பட்டாச்சார்யாவை முடிச்சிருக்கான்...”

ஹ! அது எப்படிங்க முடியும்? பால்பாயிண்ட் பேனா உள்ளே நுழையற அளவுக்குத்தான் ரூம்ல துளை போட்டிருக்கிறதாக சொன்னீங்க, அந்த சின்னத் துளையை வெச்சுக்கிட்டு ஒருத்தரை எப்படி தீர்த்துக் கட்ட முடியும்?”

ஒரு வாய் இட்லியை விழுங்கிவிட்டு விவேக் சொன்னான். “என்ன நடந்திருக்கும்ங்கறதை நான் ஓரளவு கெஸ் பண்ணிட்டேன் ரூபி...”

“என்ன சொல்லுங்க?”

“அந்த விட்டல்தாஸ் ஏதோ சம் கெமிக்கல்லை யூஸ் பண்ணி மார்பிள் தரையில சின்னதா துளை போட்டு அந்த துளை வழியாக ஹார்ட்அட்டாக்கை வரவழைக்கிற ஏதாவது ஒரு ஸ்மோக்கி கெமிக்கல்ஸை உள்ளே போட்டிருக்கலாம். பட்டாச்சார்யா தங்கியிருந்தது ஒரு ஏர்கண்டிஷண்ட் ரூம். அந்த கெமிக்கல்ஸை சுவாசிச்ச அவர்க்கு ஹார்ட் அட்டாக் வந்திருக்கலாம். துளை வழியா ஸ்மோக்கி கெமிக்கல்ஸை போட்ட விட்டல்தாஸ் அந்தத் துளை வழியா கெமிக்கல் மேல் அறைக்கும் வந்துடக் கூடாதுங்கறதுக்காக அந்தத் துளையை ஏதோ ஒரு பசை மாதிரியான பொருளை உள்ளே போட்டு அடைச்சிருக்கான்.”

“இப்படி அவர் கெமிக்கல்ஸை சுவாசிச்சிருந்தா போஸ்ட்மார்ட்டம் ரிப்போர்ட்டுக்கு சிக்காமே கண்ணாமூச்சி ஆட்டம் ஆடறதும் உண்டு.”

“விட்டல்தாஸைக் கண்டுபிடிக்க முடியுமா?”

“ட்ரேஸ் பண்ணிட்டிருக்கோம். அவன் ஹோட்டல் ரூமை காலி செய்யும் போது அஞ்சு மணி ஃபிளைட்டைப் பிடிக்கப் போறதா சொன்னதும் பொய். அந்த நேரத்துக்கு எந்தப் ஃப்ளைட்டும் கிடையாது.”

ரூபலா பெருமூச்சு விட்டாள்.

“ஆயிரம் கோடி ரூபாய் ஆயுத பேரல் ஊழல் செய்த பேர்வழிகளை நாட்டுக்கு அடையாளம் காட்ட இருந்த நல்ல மனிதர் பட்டாச்சார்யா இப்போ உயிரோடு இல்லை இனியும் இந்த தேசம் உருப்படும்னு நீங்க நினைக்கறீங்களா?”

“ரூபி! அநியாய சக்திகள் ஆரம்பத்துல ஜெயிக்கற மாதிரிதான் இருக்கும். ஆனா கடைசியில் அந்தச் சக்திகள் இருக்கிற இடம் தெரியாம போயிடும்.”

“பட்டாச்சார்யாவை இப்ப இழந்துட்டோமே?”

“இது மாதிரியான சில இழப்புகளையும் நாம தாங்கிக்கத்தான் வேணும். நீதி, நேர்மை, நியாயம், தர்மம் நிலைக்கணும்ங்கிறதுக்காக எத்தனையோ நல்லவங்க, தங்களோட உயிர்களை இந்த நாட்டுக்காகத் தியாகம் பண்ணியிருக்காங்க. அந்த லிஸ்ட்ல பட்டாச்சார்யாவையும் சேர்த்துக்க வேண்டியதுதான்.”

“அந்த விட்டல்தாஸ் கைக்குக் கிடைப்பானா?”

“இவ்வளவு கெட்டிக்காரத்தனமாய், ஹோட்டலுக்குள்ளே வந்து ஒரு கொலையை இயற்கையான மரணம் மாதிரி பண்ணிட்டுப் போயிருக்கான். அவனை உங்களால.... உங்க போலீஸ் டிபார்ட்மெண்டால பிடிக்க முடியும்னு எனக்கு தோணலை...”

விவேக் சிரித்தான். “நீ சொல்ற நிலைமை இன்னும் தமிழ்நாட்டுப் போலீஸுக்கு வரலை ரூபி.”

“சரி! அந்த விட்டல்தாஸை நோக்கி நீங்க எப்படி மூவ் பண்ணுவீங்க? அவன் இப்போ எந்த திசையில் இருக்கான்னாவது உங்களுக்குத் தெரியுமா?”

“தெரியாது...”

“பின்னே எப்படி அவனை ட்ரேஸ் பண்ணுவீங்க?”

“மொதல்ல ஒரு இட்லியை வை. அப்புறமா சொல்றேன்.”

இட்லியை வைத்துவிட்டு ரூபலா கேட்டாள்.

“ம்... சொல்லுங்க.”

“நேத்து ராத்திரி நடந்த சம்பவங்களையெல்லாம் க்யூ வரிசையில் ஞாபகத்துக்குக் கொண்டு வந்து யோசிச்சு பாரு ரூபி. புழல் ஏரிக் கரையில் புதைக்கப்பட்ட ஒரு பாடி கிடைச்சது. அது பட்டாச்சார்யா வீட்டு ட்ரைவர் மாரிச்சாமி, வாய்ல அதக்கி வெச்சிருந்த விஸிட்டிங் கார்டை வெச்சு செந்தமிழனை மடக்கினோம். அவன் போலீஸுக்குப் பயந்து தற்கொலை பண்ணிக்கிட்டான். அவன் செல்போன்ல யார்கூடவோ பேசியிருக்கான். அந்த எக்ஸ் யார்னு தெரியலை. இந்தச் சம்பவங்கள் எல்லாமே ஒரு ட்ராக். அந்த விட்டல்தாஸ் வேற ட்ராக். ரெண்டு ட்ராக்கும் ஏதாவது ஒரு இடத்துல மீட் பண்ணியேயாகணும். அந்த இடம் எதுன்னு லேசா ஸ்மெல் பண்ணினா போதும், விட்டல்தாஸ் லாக்கப்புக்கு பின்னாடி மண்டி போட்டு உட்கார்ந்திருப்பான்.”

“அந்த இடத்தை எப்படி கண்டுபிடிக்கப் போறீங்க?”

“சோப்பு போட்டு துணியைக் கசக்கற மாதிரி மூளையையும் கசக்கி கசக்கிப் பார்க்கணும்”

விவேக் சாப்பிட்டு முடித்து வாஷ் பேசினில் கையைக் கழுவிக் கொண்டு எழுந்தான் .

ரூபலா கேட்டாள்.

“இப்ப அடுத்தபடியா உங்க மூவ் என்ன?”

“பட்டாச்சார்யா வீட்டுக்குப் போயிட்டிருக்கேன். அவரோட உடல் இறுதி மரியாதைக்காக அங்கே வைக்கப்பட்டிருக்கு. இறுதி அஞ்சலி செலுத்த வர்றவங்களை அப்ஸர்வ் பண்ணிப் பார்த்தா இந்தக் கேஸ்ல மேற்கொண்டு மூவ் பண்ண ஏதாவது தோணலாம்...”

விவேக் புறப்பட்டான்.

# 20

காலை மணி ஒன்பதரை.

டீபாயின் மேல் ஒரு கோடி ரூபாய்களைக் கர்ப்பம் தாங்கிக் கொண்டு இந்த சூட்கேஸ் உட்கார்ந்திருக்க – எதிர் சோபாவில் பார்கவி டி.வி பார்த்தபடி சாய்ந்திருந்தாள். டி.வி திரையின் கீழே ப்ளாஷ் நியூஸாக அந்த ஒற்றை வரிச் செய்தி ஓடிக் கொண்டிருந்தது.

"பட்டாச்சார்யாவின் மரணம் இயற்கையானது அல்ல, அவர் கொலை செய்யப் பட்டிருக்கலாம். போலீஸார் தீவிர விசாரணை.

கோவிந்திடம் சீறினாள் பார்கவி.

"பார்த்தியா கோவிந்த்... நீ மெச்சி மெச்சி கூட்டிட்டு வந்த சிபி, காரியத்தைக் கச்சிதமா பண்ணாமே கோட்டை விட்டுட்டான். இன்னும் ஓர் அரைமணி நேரத்துல இங்கே பணத்துக்காக வருவான். பணத்தை அவனுக்கு தர்றதா வேண்டாமா?"

"பேசினபடி பூரா தொகையையும் கொடுக்காமே ஏதோ ஒரு தொகையைக் கொடுத்து அனுப்பிடுங்கம்மா. பணத்தை தரலைன்னா அவனோட பகையை நாம ஃபேஸ் பண்ண வேண்டியிருக்கும்."

"கோவிந்த்! இப்படிப் பண்ணினா என்ன?"

"எப்படீங்கம்மா?"

"சிபி உயிரோடு இருந்தாத்தானே அவனோட பகையை நாம ஃபேஸ் பண்ண வேண்டியிருக்கும். ஆளையே தீர்த்துக் கட்டிட்டா?"

கோவிந்த் அதிர்ச்சியானான்.

"அ... அம்மா! நீங்க என்ன சொல்றீங்க? சிபியைத் தீர்த்துக் கட்டறதா?"

"ம்..."

"அது அவ்வளவு சுலபம் இல்லேம்மா."

"சுலபம்னு நினைச்சா அது சுலபம்தான். அவனைத் தீர்த்துக் கட்டறதுக்கு ரொம்பவும் கஷ்டப்பட வேண்டியதில்லை. பணம் நிரம்பியிருக்கிற இந்த சூட்கேஸே போதும்..."

"எப்படீம்மா?"

"டீபாய்க்கு கீழே கொஞ்சம் குனிந்து பாரு."

கோவிந்த் குனிந்து பார்த்தான்.

இரண்டு மெல்லிய மின்சார வயர்கள் ஸ்விட்ச் போர்டிலிருந்து திருட்டுத்தனமாக பயணம் செய்து கார்பெட்டுக்குள் கீழே ஒளிந்து ஒளிந்து டீபாயின் உட்பக்கமாய் நுழைந்து சூட்கேஸின் ஸ்டீல் பட்டையில் போய் புதைந்திருந்தது.

கோவிந்த் அதிர்ச்சியாய் நிமிர்ந்தான்.

"அ... அம்மா!"

பார்கவி புன்னகைத்தாள்.

"என்னோட இடது உள்ளங்கையைப் பார்த்தியா?"

பார்த்தான்.

பார்கவியின் உள்ளங்கையில் ஸ்விட்ச் பட்டன் தெரிந்தது. சொன்னாள். "கோவிந்த்! இந்த ஸ்விட்சை இப்போ நான் ஆ∴ப் பண்ணி வெச்சிருக்கேன். இதை நான் ஆன் பண்ணினா போதும் சூட்கேஸின் ஸ்டீல் கைப்பிடியில் மூவாயிரம் வோல்ட் மின்சாரம் பாயும். பத்தே பத்து விநாடிகள் போதும். ஆள் இதே ஸ்தலத்தில் மரணம்."

"அம்மா...!"

"என்ன?"

"நீங்க நினைக்கிற மாதிரி சிபி சாதாரண நபர் கிடையாது. அவனுக்கு உடம்பு பூராவும் கண்."

"நீ அவனைப் பார்த்து ரொம்பவும் பயப்படறே கோவிந்த். அவனும் நம்மைப்போல ஒரு மனுஷன்தான். என்ன அவனுக்கு கொஞ்சம் புத்திசாலித்தனம் அதிகம் அவ்வளவுதான்... புள்ளிமானைப் பிடிக்க வலை. ஒரு யானையைப் பிடிக்கணும்னா குழி. இந்த சிபியை வீழ்த்தணும்னா மூவாயிரம் வோல்ட் மின்சாரம். சரியா பத்து மணிக்குப் பணத்தை வாங்கிட்டுப் போக வருவான். பணம் இருக்கிற சூட்கேஸை எடுத்துப் பணத்தை எண்ணி சரி பார்த்துக்கோன்னு சொல்ல வேண்டியது. அவன் சூட்கேஸோட ஸ்டீல் கைப்பிடியை பிடித்துத் தூக்கும்போது நான் இந்த ஸ்விட்சைத் தட்டுவேன். எண்ணி பத்தே செகண்ட்ஸ். சிபி இந்த உலகத்தில் உயிரோடு இல்லை..."

பார்கவி சொல்லிக் கொண்டிருக்கும்போதே அறையின் மூலையில் இருந்த டெலிபோன் கூப்பிட்டது.

கோவிந்த் ஓடிப்போய் ரிஸீவரை எடுத்து காதுக்கு ஒட்ட வைத்தான்.

"ஹலோ..."

"கோவிந்த்! நான் சிபி பேசறேன்..."

“சி... சிபியா? சொல்லு... என்ன விஷயம்?”

“பார்கவி இல்லையா?”

“இருக்காங்க...”

“ரிஸீவரை அங்கே குடு...”

கோவிந்த் ரிஸீவரின் வாயைப் பொத்திக்கொண்டு பார்கவியைப் பார்த்துக் குரல் கொடுத்தான்.

“அம்மா, போன்ல சிபி.”

பார்கவி வேகவேகமாய் வந்து ரிஸீவரை வாங்கி, “சொல்லுங்க சிபி” என்றாள்.

“இப்போ மணி ஒன்பது முப்பத்தஞ்சு. சரியா பத்து மணிக்கு உன் வீட்ல இருப்பேன். பணம் உடனே என் கைக்கு வரணும்.”

“பணம் ரெடியா இருக்கு. நீ வரலாம். ஆனா...”

“என்ன ஆனா...?”

“டி.வி நியூஸ் பார்த்தீங்களா?”

“நான் பார்க்கலை. என்ன விஷயம்?”

“பட்டாச்சார்யா கொலை செய்யப்பட்டிருக்கலாம்னு ஃப்ளாஷ் நியூஸ் போடறாங்க...”

“போட்டா போட்டுட்டுப் போறாங்க. டாக்டர்ஸோட ரிப்போர்ட் ஸ்ட்ராங்கா ஹார்ட் அட்டாக்னுதான் சொல்லுது. கோர்ட்டுக்கு போனா அந்த பாயிண்ட்தான் நிக்கும்.”

“சரி... நீங்க பத்து மணிக்கு வாங்க! பணம் ரெடியா இருக்கும்.”

“இதோ பார் பார்கவி! பணம் தர்ற விஷயத்தில் என்னை ஏமாத்த நினைச்சா... அதுக்கப்புறம்...”

பார்கவி சிரித்தாள்.

“எனக்கு உங்களைப் பற்றித் தெரியாதா என்ன? உங்களுக்குத் தர வேண்டிய தொகை ஒரு கோடி ரூபாய் சூட்கேஸ்ல ரெடியா இருக்கு. நீங்க பத்து மணிக்கு வந்து பணத்தை வாங்கிட்டு பத்து நிமிஷத்துல கிளம்பிப் போயிட்டே இருக்கலாம்.”

“சரியா பத்து மணிக்கு வர்றேன்.”

“வாங்க...”

பார்கவி ரிஸீவரை வைத்துவிட்டு பக்கத்தில் நின்றிருந்த கோவிந்தைப் பார்த்து புன்னகைத்தாள்.

“சிபி சாகிறதுக்காக வர்றேன்னு சொல்றான். வரட்டும்... இன்னிக்குத்தான் அவனோட ஆயுள் முடியப் போகிற நாள்ன்னு அவனுக்குத் தெரியாது...”

“அம்மா...” தயக்கமாய்க் குறுக்கிட்டான்.

“என்ன?”

“சிபியோட பாடியை எப்படி டிஸ்போஸ் பண்றது? இந்த பகல் நேரத்துல எங்கே கொண்டு போய்... எப்படி டிஸ்போஸ் பண்ண முடியும்...?”

“பாடியை டிஸ்போஸ் பண்றதுக்கு ராத்திரி நேரத்தைக் காட்டிலும் பகல் நேரம்தான் சரி... முகத்தை அடையாளம் தெரியாதபடிக்கு சிதைச்சு சிட்டி அவுட்டர்க்குக் கொண்டு போய் ஆள்நடமாட்டம் இல்லாத இடத்துல போட்டுட்டு வந்துடலாம்.”

# 21

பட்டாச்சார்யாவின் உடல் ஹாலில் கிடத்தப்பட்டிருக்க ரோஜா மாலைகளும் மலர் வளையங்களும் அவரை மொய்த்திருந்தன.

மரணத்தில் உறைந்துபோன முகம். நாசித்துவாரங்களில் பஞ்சு. வழக்கமாக அணியும் கண்ணாடி மூக்கு நுனியில் தொற்றியிருந்தது.

விவேக் மாடி வராந்தாவில் ஓர் ஓரமாய் நாற்காலியைப் போட்டுக் கொண்டு உட்கார்ந்தபடி இறுதி அஞ்சலி செலுத்த வரும் நபர்களை தன் பார்வையால் கழுவிக் கொண்டிருந்தான்.

பல்வேறு அரசுத் துறைகளைச் சேர்ந்த அதிகாரிகள், எம்.எல்.ஏ-க்கள், மந்திரிகள், நீதிபதிகள் என்று ஒரு பெரிய வி.ஐ.பி-க்கள் கூட்டமே வரிசையில் நின்றபடி அங்குலம் அங்குலமாய் உள்ளே வந்து கொண்டிருந்தார்கள்.

கமலம் பட்டாச்சார்யாவின் தலைமாட்டில் உட்கார்ந்தபடி கதறிக் கொண்டிருக்க-வி.ஐ.பி-க்களின் மனைவிமார்கள் அவளைச் சூழ்ந்து தேற்றும் முயற்சியில் ஈடுபட்டிருந்தார்கள். ஹாலின் வசதியான மூலையில் இருந்தபடி டி.வி காமிரா ஒன்று காட்சிகளை சாப்பிட்டுக்கொண்டு இருந்தது.

“ஸார்...”

பின்பக்கம் குரல் கேட்டு விவேக் திரும்பினான். நான்கைந்து பத்திரிக்கை நிருபர்கள் பேப்பரும் பேனாவுமாய் தெரிந்தார்கள்.

“என்ன?”

“பட்டாச்சார்யா மரணம் பற்றி உங்க கருத்துக்களைச் சொன்னா பரவாயில்லை.”

“இது பேட்டி எடுக்கக்கூடிய இடம் இல்லை. எல்லாம் சாயந்தரமா கமிஷனர் ஆபீஸுக்கு வாங்க. அங்கே வெச்சு பேசிக்கலாம்.”

நிருபர்களில் ஒருவர் விடவில்லை.

“ஸார்... ஒரே ஒரு கேள்விக்கு மட்டும் பதிலைச் சொல்லுங்க போதும்...”

“என்ன கேள்வி?”

“பட்டாச்சார்யாவோட மரணத்துக்கு காரணம் அரசியலா, இல்லை தனிப்பட்ட விரோதமா?”

“என்கொய்ரி நாலாபக்கமும் போயிட்டிருக்கு. இனிமேல்தான் ஒவ்வொரு உண்மையா வெளியே வரும்.”

“இதுவரைக்கும் யாரையாவது கைது பண்ணியிருக்கீங்களா?”

“இல்லை...”

விவேக் தலையாட்டிக் கொண்டிருக்கும்போதே பங்களா வாசலில் லேசாய் ஒரு பதட்டம் அரும்பியது.

விவேக் பார்வையை அங்கே திருப்பினான்.

ஓய்வு பெற்ற முன்னாள் ஜனாதிபதி ஒருவர் காரை விட்டு இறங்கி உள்ளே வந்து கொண்டிருக்க-இரண்டு பேர் மலர் வளையத்தோடு முன்னால் போய்க் கொண்டிருந்தார்கள்.

பத்திரிகை நிருபர்கள் விவேக்கை விட்டுவிட்டு அந்தப் பக்கமாய் வேகவேகமாய் நகர்ந்தார்கள்.

விவேக் உட்கார்ந்திருந்த இடத்தை விட்டு மெல்ல எழுந்து மாடி வராந்தாவின் இன்னொரு கோடியில் இருந்த சப்-இன்ஸ்பெக்டர் இளங்கோவனைக் கையசைத்துக் கூப்பிட்டான்.

இளங்கோவன் வேகவேகமாய் ஓடி வந்து பக்கத்தில் நின்றார், “ஸார்...”

நீங்க ஒரு காரியம் பண்ணணும்.”

“சொல்லுங்க சார்.”

“இப்போ முன்னாள் ஜனாதிபதி இறுதி மரியாதை செலுத்தறதுக்காக வந்திருக்கார். அவர் இங்கிருந்து கிளம்பிப் போனதுமே நான் சொல்ற ஒருத்தரை அந்த ரூமுக்கு தனியா கூட்டிட்டு வரணும்.”

“யாரை ஸார்?”

விவேக் பெயரைச் சொல்ல இளங்கோவன் தன் முகத்தில் கணிசமான அதிர்ச்சியைக் காட்டினார்.

“ஸார்... அவங்களையா?”

“ஆமா.”

“எதுக்கு ஸார்?”

“கேள்வி கேட்டுகிட்டு இருக்காதீங்க... நான் சொன்னது இப்போ யார்க்கும் தெரியாமே நடக்கணும்.”

“எஸ்... ஸார்...”

இளங்கோவன் நகர-விவேக் தன் பார்வையைக் கீழே ஹால் பரப்புக்குக் கொண்டு போனான்.

அந்த முன்னாள் ஜனாதிபதி, முகத்தில் எந்தவிதமான உணர்ச்சியையும் காட்டாமல் பட்டாச்சார்யாவின் உடலுக்கு மலர் வளையம் வைத்துக் கொண்டிருந்தார்.

வீடியோ காமிராக்கள் அவரை வெளிச்சத்தில் நனைத்தன. பட்டாச்சார்யாவின் மனைவி கமலத்துடன் இரண்டு வார்த்தைகள் ஆறுதலாய் பேசிக் கொண்டிருந்துவிட்டு அதே உணர்ச்சியற்ற முகத்தோடு வாசலை நோக்கிப் போனார்.

# 22

நேரம் 9.45

டீபாயின் மேல் ஒரு கோடி ரூபாயை நிரப்பிக் கொண்டு சூட்கேஸ் காத்திருக்க- சோபாவில் பார்கவி இடது கையில் அதக்கிய ஸ்விட்ச்சோடும் வலது கையில் பீர் நிரம்பிய டம்ளரோடும் உட்கார்ந்திருந்தாள்.

கோவிந்த் உள்ளே வந்தான்.

“அம்மா...”

“ம்...”

“இப்பத்தான் எனக்கு ஒரு விஷயம் ஞாபகத்துக்கு வந்தது.”

“என்ன?”

“இன்னிக்கு அனேகமா காலையில பத்து மணியிலிருந்து பனிரெண்டு மணி வரைக்கும் கரண்ட் கட் இருக்கலாம். நேத்திக்கு எனக்கு பேப்பர்ல படிச்ச ஞாபகம்...”

பார்கவி அதிர்ச்சியாய் கையில் இருந்த பீர் டம்ளரைக் கீழே வைத்தாள்.

“கோவிந்த்! நீ என்ன சொல்றே?”

“ஆமாம்மா. நேத்திக்கு பேப்பர்ல பார்த்த ஞாபகம்.”

“எலக்ட்ரிசிடி டிபார்ட்மெண்ட்டுக்கு போன் பண்ணி இன்னிக்குக் காலையில பவர்கட் இருக்குமான்னு கேட்டுட வேண்டியதுதானே?”

“போன் பண்ணாமே இருப்பேனா? போன் பண்ணினேன். என்க்கேஜ் டோன்.”

பார்கவி சுவர்க் கடிகாரத்தில் நேரம் பார்த்தாள்.

9.51

லேசாய் பதட்டமானாள். “கோவிந்த்! இன்னும் ஒன்பது நிமிஷம்தான் இருக்கு. சிபி சரியா பத்து மணிக்கு வந்துடுவான். அந்த நேரம் பார்த்து கரண்ட் போயிட்டா நாம என்ன பண்றது?”

கோவிந்த் வியர்த்தான்.

“என்ன பண்றதுன்னு எனக்கும் தெரியல்லேம்மா. நான் மறுபடியும் எலக்ட்ரிசிடி டிபார்ட்மெண்ட்டுக்கு போன் பண்ணிப் பார்க்கிறேன்...

“அதைச் செய்... மொதல்ல...”

# 23

இறுதி அஞ்சலி செலுத்தும் கூட்டம் ஹாலுக்குள் அலை மோதிக் கொண்டிருக்க சப்-இன்ஸ்பெக்டர் இளங்கோவன் கும்பலில் மெதுவாய் ஊர்ந்து சேலைத் தலைப்பை வாயில் பொத்தி அழுதபடி நின்றிருந்த கமலத்துக்குப் பக்கத்தில் வந்து நின்றார்.

“மேடம்...”

கமலம் அழுது அழுது களைத்துப் போன விழிகளோடு நிமிர்ந்தாள். என்ன என்பது போல் பார்த்தாள்.

“மிஸ்டர் விவேக் உங்ககிட்டே தனியா ஏதோ பேச விரும்பறார். மாடியறையில் காத்திருக்கார். ஒரு ரெண்டு நிமிஷம் வந்து பேசிட்டு போக முடியுமா?”

“என்ன விஷயமாய்...?”

“தெரியலை மேடம்...”

“சரி வாங்க...” கும்பலினின்றும் விலகி இளங்கோவனோடு நடந்தாள் கமலம்.

மாடிப்படிகளில் ஏறி யாரும் இல்லாத மாடி வராந்தாவில் நடந்து-விவேக் நடை போட்டுக் கொண்டிருந்த அறைக்குள் நுழைந்தார்கள்.

விவேக் நடையை நிறுத்தினான்.

“இளங்கோவன் நீங்க கீழே போங்க...”

அவர் தலையசைத்துவிட்டுப் போக-விவேக் கமலத்தை ஏறிட்டான்.

“உங்களை இங்கே வரவழைச்சதுக்காக ஸாரி மேடம்...”

“எதுக்காக என்னை வரச் சொன்னீங்க?”

விவேக் மெல்லிய குரலில் சொன்னான். ”மேடம்! கொஞ்ச நேரத்துக்கு முந்தி ஓய்வு பெற்ற முன்னாள் ஜனாதிபதி உங்க கணவர்க்கு இறுதி மரியாதை செலுத்தறதுக்காக வந்தார். அந்த நேரத்துல பத்திரிகை நிருபர்கள் சிலபேர் என்கிட்ட ஏதோ கேள்விகளைக் கேட்டுகிட்டு இருந்தாங்க. நானும் பதில் சொல்லிட்டிருந்தேன். நான் அவங்ககிட்ட பேசிட்டிருந்தாலும் பார்வை என்னவோ கீழே இருந்த ஹாலில்தான் இருந்தது.”

கமலம் குழப்பமாய் பார்க்க விவேக் தொடர்ந்தான். “முன்னாள் ஜனாதிபதி கீழே வந்தபோது கும்பல் எழுந்து ஒரு நெரிசலை உண்டாக்கியபோது நான் அந்தக் காட்சியைப் பார்த்துட்டேன். எல்லாம் ஒரு விநாடி நேர காட்சிதான்.”

“என்ன பார்த்தீங்க?”

“உங்களுக்குப் பக்கத்துல க்ரே கலர் சேலை கட்டிகிட்டு இருந்த ஒரு பெண் தன்னோட கையில் வெச்சிருந்த ஒரு கவரை உங்ககிட்ட கண்ணிமைக்கிற நேரத்துல சட்டுன்னு கொடுத்தாங்க. நீங்களும் அதை வாங்கி சேலை தலைப்பாலே மறைச்சு மார்புப் பகுதிக்குக் கொண்டுபோய் மறைச்சுக்கிட்டீங்க. இப்படியொரு கவர் பரிமாற்றம் எதுக்காகன்னு நான் தெரிஞ்சுக்கலாமா?”

விவேக் நிதானமான குரலில் கேட்க- கமலத்தின் அழுகை கீறிய கண்களில் இப்போது கோபம் மின்னியது.

“என்ன உளர்றீங்க? என்கிட்ட ஒரு பெண் கவர் கொடுத்தாளா?”

“ஆமா...”

“இது பேத்தல்...”

“மேடம்...! உங்களுக்கு இந்த நிமிஷம் வரைக்கும் மரியாதை கொடுத்துதான் பேசி வந்திருக்கேன். இனிமேலும் உங்களுக்கு அந்த மரியாதை வேணும்னா உங்ககிட்டயிருந்து எனக்கு உண்மை வரவேண்டியது அவசியம். நீங்க மறைச்சு வெச்சிருக்கிற அந்தக் கவரை நீங்களாகவே எடுத்து தர்றீங்களா... இல்லை பெண் போலீஸை வரவழைச்சு சோதனை போட்டு அந்தக் கவரை எடுக்கச் சொல்லட்டுமா?”

“நீங்க யார்கிட்ட பேசிட்டி...”

“ஷ்...! இந்தக் குரலை உயர்த்திப் பேசறதெல்லாம் வேண்டாம். உங்ககிட்ட ஏதோ தப்பு இருக்கு. நீங்க அந்தக் கவரை எடுத்துக் கொடுக்காத பட்சத்தில் நான் கடுமையான நடவடிக்கை எடுக்க வேண்டியிருக்கும். க்ரே கலர் சேலை கட்டிய அந்தப் பொண்ணைக் கான்ஸ்டபிள் ஒருத்தர் இப்போ வாட்ச் பண்ணிட்டிருக்கார். அவளையும் மேலே கொண்டு வரச் சொல்லட்டுமா?”

கமலம் கலகலத்துப் போனாள். அடைத்துக் கொண்ட குரலில் சொன்னாள்.

“மிஸ்டர் விவேக்! இந்தக் கவர் விஷயம் வெளியே தெரிய வேண்டாம்...”

“மொதல்ல அந்தக் கவரை எடுங்க. அதுல என்ன இருக்குன்னு பார்த்துட்டு அப்புறமா ஒரு முடிவுக்கு வருவோம்.”

கமலம் கை நடுங்க தன் ஜாக்கெட் பரப்புக்குள் கையை நுழைத்து அந்தச் சிறிய பழுப்புநிறக் கவரை வெளியே எடுத்து விவேக்கிடம் நீட்டினாள்.

விவேக் வாங்கிப் பிரித்தான்.

உள்ளே நான்காய் மடிக்கப்பட்ட ஒரு கடிதம். கடிதத்தில் கிறுக்கலாய் எழுதப்பட்ட சில தமிழ் வரிகள் பார்வைக்குக் கிடைத்தன.

எதிர்பாராதது நடந்துவிட்டது. உன் கணவரின் மரணத்தை நான் நிச்சயம் எதிர்பார்க்கவில்லை. மனதைத் தேற்றிக் கொள்ளவும். ஏற்கெனவே உன் கணவர் தயாரித்து வைத்திருக்கும் அறிக்கையைப் பற்றி இன்றே பத்திரிகையாளர்களிடம் சொல்லி விடவும். நேரில் நிறையப் பேசுவோம்.

இப்படிக்கு

யூ.ஆர்.

விவேக் அந்தக் கடித வரிகளைப் படித்துவிட்டு நிமிர்ந்தான். மெல்லிய குரலில் கேட்டான்.

"யார்... அந்த... யூ... ஆர்...?"

"வந்து... வந்து..."

"இனி பொய் வேண்டாம் மேடம். பொய் சொல்லி வீண் பிரச்னைகள்ல மாட்டிக்காதீங்க..."

"அது... வந்து... அவர் உத்தம்ராவ்."

விவேக் புருவங்களை உயர்த்தினான்.

"எதிர்க்கட்சித் தலைவர் உத்தம்ராவா?"

"அவர்தான்..."

"இந்தக் கடிதத்தை அவர் எதுக்காக அனுப்பினார். இதுல இருக்கிற வாசகங்களுக்கு என்ன அர்த்தம்னு நான் தெரிஞ்சுக்கலாமா?"

கமலம் தயங்க-

விவேக் கேட்டான்.

"சரி... ஸ்டேஷனுக்கு போய் சொல்றீங்களா?"

"வே... வேண்டாம். இங்கேயே சொல்லிடறேன்."

"சொல்லுங்க..."

கமலம் சில விநாடிகள் தலைகுனிந்தபடி இருந்துவிட்டு சொல்ல ஆரம்பித்தாள்.

“ஆயிரம் கோடி ரூபா ஆயுத பேர ஊழலை விசாரிக்கும் கமிஷன் தலைவரா என்னோட கணவர் நியமிக்கப்பட்டதும், ஒருநாள் ராத்திரி உத்தம்ராவ் எங்க வீட்டுக்கு வந்தார். தற்போதைய ஆளும் கட்சியை வரப்போகிற தேர்தலில் தோற்கடிக்க அந்த ஆயுத பேர ஊழலை பயன்படுத்திக்க நினைச்சார். உண்மையிலேயே அந்த ஊழல் நடக்கலை. ஆனா ஊழல் நடந்தமாதிரி தீர்ப்பு எழுதி ஆளும் கட்சியின் மேலும் பாதுகாப்புத் துறையைச் சேர்ந்த மந்திரிகள் மேலேயும் பழி போடணும்னு என் கணவர்கிட்ட உத்தம்ராவ் வேண்டிக்கிட்டார்.”

விவேக் குறுக்கிட்டுக் கேட்டான்.

“அதுக்கு உங்க கணவர் ஒத்துக்கலையா?”

கமலம் கசப்பாய் புன்னகைத்தாள். “என்னோட கணவர் வெளியே பேசும்போது மட்டும் நீதி, நியாயம், நேர்மை, யாரும் ஊழல் செய்யக்கூடாதுன்னு பேசுவார்; ஆனால் நடைமுறையில் அவர் பணத்துக்கு அடிமை. இன்னின்ன காரியம் செய்யறதுக்கு இவ்வளவு பணம்னு அவர் ஒரு லிஸ்ட்டே வெச்சிருக்கார். அதன்படி இந்த கமிஷன் அறிக்கையைத் தயார் பண்ணி ஆளும் கட்சி மேலே பழி சுமத்தறதுக்காக பத்து கோடி ரூபாய் பேரம் பேசினார். உத்தம்ராவும் அதுக்கு ஒத்துகிட்டார். அந்த அடிப்படையில் இந்த ஆயுத பேர ஊழலைப் பற்றிய விசாரணையை நடத்தி ஆளும் கட்சிக்குப் பாதகமா தீர்ப்பு அறிக்கையை தயார் பண்ணி வர்ற ஆகஸ்ட் 5-ஆம் தேதி அதிகாலையில் பத்திரிகை நிருபர்களுக்கு முன்னாடி படிச்சுக் காட்ட திட்டம் போட்டிருந்தார்.”

விவேக் மறுபடியும் குறுக்கிட்டான்.

“ஏற்கெனவே அறிக்கையை ரெடி பண்ணிய பிறகு மறுபடியும் எதுக்காக ஹோட்டல் சாம்ராட்ல ரூம் போட்டுகிட்டு தீர்ப்பை எழுதிவிட்டு இருக்கேன்னு சொல்லணும்...?”

“இது வெளியுலகத்தை ஏமாத்தறதுக்காக ரொம்பவும் சின்சியரா ஒரு காரியத்தைப் பண்ற மாதிரி காட்டிக்கிறதுக்காக...”

“பட்டாச்சார்யா ஒரு நேர்மையான மனிதர்ன்னு இந்த இந்தியாவே கொண்டாடிட்டு இருக்கும்போது அவர்க்குள்ளே இவ்வளவு பெரிய முரண்பாடா?”

“யாருக்குமே நம்பறதுக்கு ரொம்பவும் கஷ்டமாயிருக்கும். நானும் எவ்வளவோ தடவை புத்தி சொல்லிப் பார்த்துட்டேன். அவர் திருந்தற மாதிரி தெரியலை.”

“சரி... அவரோட மரணத்துக்கு யார் காரணமாயிருந்திருப்பாங்கன்னு நினைக்கறீங்க?”

“எனக்குத் தெரியாது.”

“யூ... ஆர்... ராவ்?”

“நிச்சயமாக அவராக இருக்காது...”

“உங்களுக்கு லெட்டர் கொண்டு வந்து கொடுத்த அந்தப் பொண்ணு யாரு?”

“யூ ஆர்... ராவோட செக்ரட்ரி...”

“இப்ப நீங்க என்கிட்டே சொன்ன இந்த உண்மைகளையெல்லாம் வெளியே சொல்லியாகணும் மேடம்...”

“என் கணவரோட காரியங்கள் முடிஞ்சதும் நானே பத்திரிகை நிருபர்களைக் கூட்டிவெச்சு சொல்லிடறேன்...”

“இந்த லெட்டர் என்கிட்டேயே இருக்கட்டும். இனி நீங்க போய் உங்க கணவர் தலைமாட்டுல உட்கார்ந்துகிட்டு அழலாம்.”

# 24

கடிகாரத்தில் சரியாய் பத்து மணி.

மின்சாரம் உயிரோடு இருக்க- வாசலில் காலிங் பெல் சத்தம் கேட்டது.

கோவிந்த் போய்க் கதவைத் திறந்தான்.

சிபி நின்றிருந்தான்.

“வா சிபி!”

“பணம் ரெடியா?”

“ரெடியா இருக்கு வா...”

கோவிந்த் உள்ளே கூட்டிப் போனான்.

பார்கவி அதே சோபாவில்- அதே போஸில் உட்கார்ந்திருந்தாள். இடது கையின் மூடிய விரல்களில் ஸ்விட்ச் அழுத்தப்பட காத்திருந்தது.

பார்கவி புன்னகைத்தாள்.

“வாங்க சிபி... உட்கார்ங்க...”

“எனக்கு உட்கார நேரமில்லை. பணத்தை வாங்கிட்டு நான் உடனே புறப்படணும்.”

“இதோ உங்க பணம். டீபாய் மேல ரெடியா இருக்கு...”

“அமௌண்ட் கரெக்டா இருக்குமா?”

“சூட்கேஸை எடுத்து நீங்களே... எண்ணிப் பார்த்துருங்களேன்.”

சிபி புன்னகைத்தான்.

“பணத்தை எண்ணிப் பார்க்கிறதுக்கு முந்தி உனக்கும் கோவிந்துக்கும் நன்றி சொல்லணும்...”

“நன்றியா? எதுக்கு அந்த ஃபார்மாலிடியெல்லாம்? நாங்க சொன்னபடி பட்டாச்சார்யாவை தீர்த்துக் கட்டினீங்க. இதோ பேசினபடி பணம். எடுத்துக்குங்க...”

“நான் நன்றி சொல்லாமே பணத்தைத் தொட மாட்டேன்.” சிபி சொல்லிக் கொண்டே தன் இடுப்புக்குக் கையைக் கொண்டு போய் விருட்டென்று பிஸ்டலை எடுத்தான்.

பார்கவி-கோவிந்த் திகைத்துக் கொண்டிருக்கும் போதே மாறி மாறி குறி பார்த்தான்.

“உங்களை மாதிரியான விஷ ஜந்துக்கள் எல்லாம் உயிர் வாழவே கூடாது. போய்ட்டு வாங்க…”

சுட்டான்.

முதலில் பார்கவியும்-

பின் கோவிந்தும்-

சிவப்பானார்கள்.

# 25

காலை மணி 10.15.

விவேக் பட்டாச்சார்யா வீட்டு மாடியறையில் இருந்து கொண்டே செல்போனில் போலீஸ் கமிஷனரிடம் நடந்த உண்மைகளை சொல்லி முடித்தபோது-

இளங்கோவன் கார்ட்லெஸ் டெலிபோனோடு மேலே ஏறி வந்தார்.

"ஸார்! உங்களுக்கு போன்?"

"போன்ல யாரு?"

"உங்க ப்ரண்டுன்னு சொன்னார் ஸார்."

"ஃப்ரண்டா?"

விவேக் ரிஸீவரை வாங்கிக் காதுக்குக் கொடுத்தான்.

"ஹலோ..."

"வணக்கம்... விவேக் ஸார்..."

"யாரு?"

"விவேக் ஸார்... என் பேர் சிபி. விட்டல்தாஸா மாறி ஹோட்டல் சாம்ராட்ல பட்டாச்சார்யாவுக்கு அமரர் பதவியைக் கொடுத்தவன். நான் இப்படிச் சொன்னதுமே நான் பேசற லைனை ட்ரேஸ் பண்ற வேலை வேண்டாம். ஏன்னா எனக்கும் கொஞ்சம் விஞ்ஞானம் தெரியும். நான் எங்கிருந்து பேசறேன்னு உங்களால கண்டுபிடிக்க முடியாது. ஸார்! உங்களுக்கும் எனக்கும் ஒரு விஷயத்துல ஒற்றுமை இருக்கு. அந்த ஒற்றுமை எது தெரியுமா ஸார்? இந்த இந்தியாவில் குற்றவாளிகள் இருக்கக்கூடாது. நீங்க போலீஸ் அதிகாரத்தோடு அந்த வேலையைச் செய்யறீங்க. நான் மஃப்டியில் பண்றேன். இதுல ஒரு பெரிய வித்தியாசம் என்னன்னா... நீங்க சட்டப்படி. குற்றவாளிகளை போலீஸ் ஸ்டேஷன் கோர்ட்னு கொண்டு போய் ஆயுள், தூக்குன்னு தண்டனை வாங்கித் தர்றீங்க. என்னோட கோர்ட்ல ஒரே தண்டனைதான். அது மரண தண்டனைதான். பதினைஞ்சு நிமிஷத்துக்கு முன்னாடிதான் பட்டாச்சார்யாவைக் கொலை செய்ய எனக்கு பேரம் பேசிய பார்கவிங்கிற பொண்ணையும், கோவிந்த்ங்கிற ஒரு நபரையும் டாக்டர் அவென்யூ, 31ஆம் எண் பங்களாவில் என் ரிவால்வராலே தண்டிச்சேன்."

விவேக் ஏதோ பேச முயல-

அவன் விடாமல் தொடர்ந்தான்,"விவேக் ஸார்! சாம்ராட் ஹோட்டல்ல நான் ரொம்பவும் திறமையா சீலிங்கை துளை போட்டு அதன் வழியா "ஆந்திரக்ஸ்"னு

சொல்லப்படற விஷ வாயு மாத்திரையை உள்ளே போட்டு பட்டாச்சார்யாவை தீர்த்துக் கட்டினேன். அந்த “ஆத்திரக்ஸ்” விஷவாயு மாத்திரை ஒரு பத்து நிமிஷ நேரத்துல காத்துல கரைஞ்சு வாயுவை வெளிப்படுத்தும், அதை சுவாசிச்ச பத்து நிமிஷத்துக்குள்ளே இயற்கையான முறையில் ஹார்ட் அட்டாக் வரும். ஆனால் உடம்புல அந்த விஷத்தை உள்வாங்கின அடையாளமே இருக்காது. நான் யுரேனியம் ராடை வெச்சு ஹோட்டல் சீலிங்கில் துளை போட்டதை யாராலும் கண்டுபிடிக்க முடியாதுன்னு நினைச்சேன். நீங்க கண்டுபிடிச்சுட்டீங்க... பட்டாச்சார்யாவை நான் மொதல்ல நாணயமானவர் நல்லவர்னு நினைச்சேன். ஆனால் அவரும் அநியாயங்களுக்கு விலை போகக்கூடியவர்னு தெரிஞ்சது. என்னோட ரூல்ஸ்படி தண்டனையைக் கொடுத்துட்டேன். நீங்க இதுவரைக்கும் டீல் பண்ணின எல்லா கேஸ்களிலேயும் கொலையாளிகளையும் புடிச்சுடுவீங்க. ஆனா நீங்க என்னைப் பிடிக்க முடியாது. இப்போதைக்குப் பிடிக்க முடியாது. என்னிக்காவது ஒரு நாள் என்னை நீங்க நெருங்கிடுவீங்க... அந்த நாள் வர்றதுக்குள்ளே என்னோட பங்குக்கு நாட்டில் இருக்கிற சில தீய சக்திகளை என்னோட பாணியில் ஒழிச்சுக் கட்ட விரும்புறேன். பார்கவி கொடுத்த பாவப் பணம் ஒரு கோடி ரூபாய் என்கிட்ட இருக்கு. முள்ளை முள்ளால் எடுக்கற மாதிரி இந்த பாவப் பணத்தை வெச்சுகிட்டே சில பாவாத்மாக்களை ஒழிக்கப் போறேன். இந்த தேசத்துல நல்லவங்க மட்டுமே இருக்கணும். என்னை நீங்க புடிக்கிற வரை என்னோட பணி தொடரும். உங்களுக்கும் உங்க மனைவி மேடம் ரூபலாவுக்கும் மாஸ்டர் பாரத்துக்கும் என்னோட புத்தாண்டு ப்ளஸ் பொங்கல் வாழ்த்துக்கள்.”

ரிஸீவர் மறுமுனையில் வைக்கப்பட்டு விட- விவேக் முகம் தெரியாத அந்த சிபியிடம் மானசீகமாய் சபதம் போட்டான்.

“சிபி! நீ உன்னோட அடுத்த தண்டனையை யார்கிட்டயாவது நிறைவேத்திக்கிறதுக்கு முந்தி உன் கையில் நான் விலங்கை மாட்டுவேன். எனக்கு தோத்துப் பழக்கமில்லை. ஜெயிச்சுதான் பழக்கம்! நீ இந்த வருஷம் பொங்கலை ஜெயிலுக்குள்ளேதான் கொண்டாடப் போறே...!”

விவேக் சொல்லி எது நடக்காமல் போயிருந்தது?

**(முற்றும்)**

# நியூடெல்லி 2001

# 1

ஜனவரி, வருஷம் 2001. பனி பெய்யும் சாயந்திர வேளை.

டெல்லி ரீகல் ஸ்கொயர்க்கு எதிரே இருந்த பாலிகஞ்ச் அண்டர்க்ரெளண்ட் ஷாப்பிங் மார்க்கெட்டுக்கு முன்பாக டாக்ஸியை நிறுத்தி இறங்கிக் கொண்ட விவேக்கும் ரூபலாவும் பேஸ்மெண்டில் நடை போட்டார்கள்.

"என்னங்க..."

"ம்..."

"ஸ்வெட்டர் எடுத்து வந்திருக்கலாம். இது என்ன டெல்லியா...? இல்லை ப்ரிஜ்ஜா...? இந்தக் குளிர் குளிருது. அம்மாடி!"

விவேக் உள்ளங்கைகளைத் தேய்த்துக் கொண்டே ரூபலாவைப் புன்னகையோடு பார்த்தான்.

"இதுக்காகத்தான் நீ டெல்லிக்கு வராதே, உன்னோட அம்மா வீட்டுக்குப் போயிருன்னு சொன்னேன். நீ கேட்கலை. டெல்லியில எவ்வளவு குளிராயிருந்தாலும் சரி... அதைப்பத்தி எனக்கு கவலையே கிடையாதுன்னு சொன்னே...! இப்ப இங்கே வந்து இது டெல்லியா இல்ல ப்ரிஜ்ஜான்னு கேட்கிற...?"

"இதுக்கு முந்தியெல்லாம் டெல்லி வந்திருக்கேனே! இப்படி ஒரு குளிர் இருந்ததே இல்லை. என்னமோ அண்டார்டிகா பனிப் பிரதேசத்தில் நடந்து போற மாதிரி இருக்கு."

"உனக்கு இப்போ குளிரக்கூடாது. அவ்வளவுதானே?"

"ஆமா..."

"அதுக்கு ஒரே வழிதான் இருக்கு..."

"என்ன வழி...?"

"என் இடுப்புல கையைப் போட்டு கெட்டியா கட்டிப்பிடிச்சுக்க."

"அப்படி பிடிச்சுகிட்டா...?"

“குளிர் ஓடிப்போயிடும்...”

“தமிழ் சினிமா நிறையப் பார்த்துப்பார்த்துக் கெட்டுப் போயிட்டீங்க... பேசாமே நடங்க...”

“நீ எதுக்கும் மசியமாட்டியே. அங்க பாரு எல்லாரும் எப்படி ஜோடிஜோடியா போறாங்கன்னு. புருஷனோட இடுப்பை பிடிச்சுக்கிட்டாகூட தப்பா...?”

“இந்த ரோட்டு ரொமான்ஸ் எல்லாம் நமக்கு வேண்டாம்.”

“உனக்கு வயசாயிருச்சு ரூபி. அதான் இப்படி ரொமான்ஸ் விஷயத்துல பேக் அடிக்கிறே...”

“என்ன சொன்னீங்க...? எனக்கு வயசு ஆயிடுச்சா?”

“ஆமா.”

“உங்களுக்கு...?”

“அய்யா என்னிக்குமே இளமைதான். நித்ய மார்க்கண்டேயன்.”

“அய்யே...! ரொம்பவும் பீத்திக்காதீங்க...!”ரூபலா விவேக்கின் காதைப் பிடித்துத் திருகிக் கொண்டிருக்கும் போதே அவனுடைய சஃபாரி சர்ட் பாக்கெட்டில் இருந்த செல்போன் மெலிதாய் ஓர் எலக்ட்ரானிக் இசை கொடுத்துக் கூப்பிட்டது.

செல்போனை எடுத்து இடது காதுக்கு வைத்தான் விவேக்.

“ஹலோ...”

“.........”

“எஸ் ஸார். ஐயாம் விவேக்...”

“.........”

“ஞாபகம் இருக்கிறது ஸார்! இரவு பத்து மணிக்குத்தானே...?”

“.........”

“வந்துவிடுவேன் ஸார். டெல்லிக்கு வந்ததே அந்தப் பணிக்காகத்தானே...?”

“இப்போது நான் என் மனைவியோடு பாலிகஞ்ச் அண்டர்க்ரௌண்ட் ஷாப்பிங் காம்ப்ளக்ஸூக்குப் போய்க் கொண்டிருக்கிறேன். என் மனைவியின் ஹாபி வெளியூர்களுக்குப் போனால் ஷாப்பிங் செய்வதுதான்.”

“.........”

“ஷாப்பிங் ஒரு மணி நேரத்தில் முடிந்துவிடும் ஸார். நான் சரியாய்ப் பத்து மணிக்கெல்லாம் உங்களுக்கு முன்பாய் நின்றிருப்பேன்.”

“.........”

“எஸ் ஸார்...!” பேசிவிட்டு செல்போனை அணைத்தான் விவேக்.

ரூபலா கேட்டாள்.

“போன்ல யார்ங்க...?”

“ஆர்.ஏ.எஃப் கமிஷனர்.”

“ஆர்.ஏ.எஃப்-னா...?”

“RAPID ACTION FORCE. தமிழ்ல சொல்லணும்னா அதி விரைவுப் படை...”

பாலிகஞ்ச் அண்டர்க்ரௌண்ட் ஷாப்பிங் காம்ப்ளக்ஸ் சுரங்கப் படிகளோடுவர, விவேக்கும் ரூபலாவும் இறங்கி நடந்தார்கள்.

ஜனக்கூட்டம் உள்ளே அலைமோதியது.

“என்னங்க...”

“ம்...”

“நாம டெல்லி மண்ணை மிதிச்சு ரெண்டு நாளாகப் போகுது...”

“ஆமா...”

“இப்பவாவது சொல்லுங்க... நீங்க டெல்லிக்கு என்ன காரியமா வந்திருக்கீங்க...?”

“வெங்காயத்தை ஒட்டுமொத்தமா கொள்முதல் பண்ணி மெட்ராஸ் கொத்தவால் சாவடிக்குக் கொண்டு போய் வியாபாரம் பண்ணத்தான்...”

“நான் சிரீயஸா கேட்டுக்கிட்டு இருக்கேன்.”

“ரூபி! ஒரு விஷயம் சொன்னா உனக்கே ஆச்சர்யமாயிருக்கும்.”

“என்ன...?”

“டெல்லி அழைப்பு எதுக்காகன்னு எனக்குத் தெரியாது ஆனா ரெட் டாட்ஸ் மேட்டர்...”

“ரெட் டாட்ஸ் மேட்டரா...? அப்படின்னா என்ன அர்த்தம்...?”

“ரெட் டாட்ஸ் மேட்டர் என்கிற வார்த்தை ஒரு கோட் வேர்ட் மாதிரி. ரெட் டாட்ஸ்னா ரத்தத் துளிகள்ன்னு அர்த்தம். ரத்தத் துளிகள் சிந்தப் போகிற ஒரு சம்பவம் டெல்லியில் நடக்கலாம். அதைப்பத்திப் பேசி ஒரு முடிவு எடுக்கத்தான் எனக்கு இந்த அவசர அழைப்பு. மொத்தம் ஏழு பேர்க்கு மட்டுமே அழைப்பு. அதுல அடியேனும் ஒருத்தன்…”

ரூபலாவின் முகம் இப்போது மாறியிருந்தது. கண்களில் லேசாய்த் திகில்.

“என்னங்க… நீங்க சொல்றதை கேக்கும்போதே எனக்கு வயித்தைக் கலக்கற மாதிரி இருக்கு. ரத்தம் சிந்தற மாதிரி டெல்லியில என்ன சம்பவம் நடக்கப் போகுது?”

“தெரியாது. இன்னிக்கு ராத்திரி பத்து மணிக்கு ரேபிட் ஆக்சன் ஃபோர்ஸ் டிபார்ட்மெண்டைச் சேர்ந்த ஹை-அபீஷியல்ஸோடு பேசிப் பார்த்தாத்தான் தெரியும்…”

நடந்து கொண்டிருந்த ரூபலா நின்று விட்டாள்.

“என்ன நின்னுட்டே…?”

“வாங்க… ஹோட்டல் ரூமுக்கே போயிடலாம்.”

“ஷாப்பிங்…?”

“வேண்டாம்…”

“ஏன்…?”

“ஷாப்பிங் பண்ற மூடு இப்போ இல்லை.”

“பயந்துட்டியா…? இதுக்குத்தான் உன்கிட்ட எதையுமே சொல்றதில்லை.”

“ரெட் டாட்ஸ் மேட்டர் என்னவாயிருக்கும்னு போன நிமிஷத்தில் இருந்தே என்னோட இருதயம் எக்ஸ்ட்ராவா துடிக்க ஆரம்பிச்சிருச்சு… வாங்க, ஹோட்டல் ரூமுக்குப் போயிடலாம். ரூபலா சொல்லிக் கொண்டே திரும்ப முயல, விவேக் அவளுடைய தோல் மேல் கையை வைத்தான்.”

“ரூபி! உடனடியா நாம ஹோட்டல் ரூமுக்குத் திரும்ப முடியாது.”

“ஏன்?”

“ஒரு பொண்ணு உன்னையும் என்னையும் கடந்த அரைமணி நேரமா ஃபாலோ பண்ணிட்டிருக்கா. இப்பகூட நமக்குப் பின்னாடி ஐம்பதடி தூரத்துல ஒரு ரெடிமேட் துணிக் கடைக்கு பக்கத்துல ஏதோ பராக்கு பார்க்கிற மாதிரி நின்னுட்டிருக்கா! நீ திரும்பிப் பார்த்துடாதே… அவ உஷாராயிடுவா.. டென்ஷன் படாமே இயல்பா நட. இதே பாலிகஞ்ச் காம்ப்ளக்ஸ் கட்டிடத்துக்குள்ளேயே அவளை மடக்கிடலாம்.”

ரூபலா பதட்டப்பட்டாள்.

“அய்யோ... என்னங்க இது! ஏற்கனவே நீங்க சொன்ன ரெட் டாட்ஸ் மேட்டர் விஷயத்துல கலங்கிப் போயிருக்கேன்... இப்போ எக்ஸ்ட்ராவா இது வேறவா...? அந்தப் பொண்ணை நான் பார்க்கணுமே...?”

“பார்க்கலாம்...! அவ நம்மை ஃபாலோ பண்றதை தெரிஞ்சுகிட்டதா நாம காட்டிக்கக் கூடாது. ஏதாவது சிரிச்சுப் பேசிக்கிட்டே நட...”

“எனக்கு அவளைப் பார்க்கணும் போலிருக்கே!”

“அவசரப்படாதே! காரியம் கெட்டுடும்.”

ரூபலா நடந்து கொண்டே கேட்டாள். “சரி, அவ பார்க்கிறதுக்கு எப்படியிருக்கா...?”

“வயது தீர்மானம் பண்ண முடியலை. ஒரு இருபத்தஞ்சு இருக்கலாம். அழகாயிருக்கா..”

“சேலையா... சுடிதாரா...?”

“சல்வார் கம்மீஸ்...”

“கலர்?”

“பிங்க்...”

“வேற ஏதாவது அடையாளம்?”

“தோள்ல வானிடி பேக் மாட்டியிருப்பா...”

“சரி...வாங்க அந்த ஐஸ்க்ரீம் ஸ்டாலுக்குள்ளே போய் உட்கார்வோம். ஐஸ்க்ரீமை சாப்பிட்டுக்கிட்டே அவளை அப்ஸர்வ் பண்ணுவோம்...”

“ரூபி! அவளை நேரிடையா பார்த்து வைக்காதே. அவளை நாம கவனிக்கவே இல்லை என்கிற மாதிரி நம்ம நடவடிக்கைகள் இருக்கணும்...”

“உங்க ஒய்ஃப் நான். ஒரு பிரச்னையை எப்படி ஹேண்டில் பண்றதுன்னு எனக்குத் தெரியாதா என்ன?”

விவேக்கும் ரூபலாவும் ஐஸ்க்ரீம் பார்லர்க்குள் நுழைந்து பாலிவினைல் நாற்காலிகளில் சாய்ந்தார்கள்.

ரூபலா கீழே குனிந்து சேலையைத் திருத்திக் கொள்கிற பாவனையோடு பார்வையை விரட்டிப் பார்த்தாள்.

பார்வைக்கு பிங்க் சுடிதார் தட்டுப்படவில்லை.

“என்னங்க...”

“என்ன…?”

“நீங்க சொன்ன அவளைக் காணோமே…?”

“இருக்கா..”

“எங்கே…?”

“ஒரு பான் பீடாக்கடை தெரியுதா…?”

“ஆமா..”

“அதுக்குப் பின்னாடி ஒண்டிகிட்டா. நாம ஐஸ்க்ரீம் சாப்பிட்டு வெளியே போகிற வரைக்கும் அந்த பான் கடைக்குப் பின்னாடிதான் ஒண்டிகிட்டு இருப்பான்னு நினைக்கிறேன்…”

“க்யா சாஹியே…?” ஐஸ்க்ரீம் பார்லர் ஆள் பக்கத்தில் வந்து நின்றான்.

“தோ பிஸ்தா..” ஆர்டர் கொடுத்துவிட்டு விவேக் ரூபலாவைப் பார்த்தாள்.

“ரூபி! நீ அந்தப் பான் கடையையே பார்த்துட்டிருக்காதே! என்னைப் பார்த்துக்கிட்டே ஏதாவது ஜோவியலாப் பேசு..”

“என்ன பேசறதுன்னு தெரியலை…”

“சரி. நான் ஒரு கேள்வி கேக்கறேன். அதுக்குப் பதில் சொல்லு பார்க்கலாம்.”

“கேளுங்க…”

“எலிக்கு ஏன் அவ்வளவு பெரிய வால் இருக்கு தெரியுமா?”

“சீரியஸா கேக்கறீங்களா? இல்லை அறுவை ஜோக்கா…?”

“அறுவை ஜோக்தான்..”

“கேள்வி என்ன? மறுபடியும் சொல்லுங்க பார்க்கலாம்..”

“எலிக்கு ஏன் அவ்வளவு பெரிய வால் இருக்கு?”

ரூபலா யோசித்துவிட்டு தலையாட்டினாள்.

“தெரியலையே..”

“எலியை அடிச்சுக் கொன்னபிறகு அதைத் தூக்கிட்டுப் போய் வெளியே போட வேண்டாமா.. அதுக்குத்தான் அவ்வளவு பெரிய வால்.”

ரூபலா சிரிக்காமல் மறுபடியும் அந்தப் பான் கடையைப் பார்க்க, அவள் முகம் மாறியது.

“என்னங்க...?”

“ம்.. ”

“அவளைக் காணோம்.. ”

விவேக்கும் பான் கடைக்குப் பின்னால் தன் பார்வையைக் கொண்டு போய் நிறுத்தினான்.

அந்தப் பெண் ஒண்டியிருந்த இடம் காலியாய் இருந்தது.

‘அதற்குள் எங்கே மறைந்தாள்..?’

விவேக்கின் பார்வை கும்பலில் அலைந்தது.

# 2

பூமா ஐ.எஸ்.டி-யில் கலிபோர்னியாவில் இருக்கும் தன் கணவனோடு பேசிக் கொண்டிருந்தாள். பூமாவின் கணவன் ஸ்ரீராம் ஒரு எம்.பி.ஏ பட்டதாரி.

“என்னங்க...”

“சொல்லு பூமா...”

“உங்க பையன் இங்கே எக்கச்சக்க லூட்டி பண்றான்...”

“அப்படியா...?”

“ம்...”

“என்ன பண்ணினான்?”

“எட்டி எட்டி உதைக்கிறான்...”

“உதைக்கிறானா? நல்லா உதைக்கட்டும்.”

“என்னங்க இது...? உங்க பையனை மிரட்டற லட்சணம் இதுதானா...? வலி தாங்க முடியலைங்க. அதுவும் ராத்திரி நேரத்துல அவன் படுத்தறபாடு இருக்கே. ஒரு பத்து நிமிஷம் நிம்மதியா தூங்க முடியலைங்க.”

“இவ்வளவு லூட்டியா பண்றான்...?”

“நான் என்ன வேணும்னா சொல்றேன். நீங்களே வேணும்னாலும் உங்க பையனை விசாரிச்சு பார்த்துக்குங்க.”

“சரி! போனை அவன்கிட்ட குடு...”

பூமா தன் காதில் வைத்திருந்த ரிஸீவரை எடுத்து தன் ஏழு மாத பம்மிய வயிற்றின் மேல் வைத்தாள்.

“டேய் உங்கப்பா பேசறார்... பேசு.”

ஸ்ரீராம் குரல் கொடுத்தான்.

“ஏண்டா கண்ணா, அம்மாவைத் தூங்கவிடாமே இம்சை பண்றே...? நான் ஊர் வந்து சேர்ற வரைக்கும் சமத்தா இருக்கணும்...”

“.........”

“என்னது... தங்கச்சி பாப்பாவா...? அதுக்கெல்லாம் ஊர்க்கு வந்துதான் ஏற்பாடு பண்ணணும்டா கண்ணா!”

பூமா குறுக்கிட்டு ரிஸீவரில் குரலைக் கொடுத்தாள். “கட்... கட்... இதுக்கு மேல உங்களைப் பேசவிட்டா பையன் கெட்டுப் போயிடுவான்...”

“உன் பையன் தான் தங்கச்சி பாப்பா வேணும்னு கேட்டான்.”

“அதெல்லாம் அஞ்சு வருஷத்துக்கப்புறம்தான்...! அதாவது உங்க பையன் மாஸ்டர் ஸ்ரீராம் யூ.கே.ஜி-க்கு போய் நர்ஸரி ரைம்ஸ் சத்தம் போட்டு பாடணும்...”

“ரொம்ப பெரிய கேப்...”

“இருக்கட்டும்... இருக்கட்டும்...”

“சரி பூமா... இந்த டிஸ்கஷனை இந்தியாவுக்கு நான் வரும்போது வெச்சுக்கலாம். இப்போ எனக்கு கம்பெனிக்கு நேரமாச்சு கிளம்பட்டுமா...? நாளைக்கு போன் பண்றேன்.”

“எத்தனை மணிக்கு...”

“இதே நேரம்...! போனுக்கு பக்கத்துல வெயிட் பண்ணு...”

“சரிங்க...”

“இது விடைபெறும் நேரம். எங்கே ஒரு ஸ்வீட் அண்ட் ஹாட் கிஸ் ப்ளீஸ்..”

“இதை மட்டும் மறக்க மாட்டீங்களே...?”

“இதுக்குத்தானே நான் போனே பண்றேன்.”

“சரி...சரி! கன்னத்தைக் கொண்டு வாங்க.”

“கன்னம் ஆல்ரெடி தயார்...”

பூமா தன் செர்ரி உதடுகளைக் குவித்து காற்றில் ஒரு முத்தத்தைப் பிறப்பித்துவிட்டு ரிஸீவரை வைத்தாள்.

மாஸ்டர் ஸ்ரீராம் வயிற்றில் உதைத்தான். பூமா வயிற்றில் கை வைத்து அதட்டினாள்.

“குட்டி ராஸ்கல்...! கையையும் காலையும் வெச்சுக்கிட்டு சும்மாயிருக்க மாட்டியா...? உங்கப்பனுக்குத் தப்பாமே பொறந்து இருக்கே...!”

சமையலறையிலிருந்து பூமாவின் அம்மாக்காரி வள்ளியம்மை எட்டிப் பார்த்தாள்.

“என்ன மாப்பிள்ளைகிட்ட பேசிட்டியா...?”

“ம்...”

“என்னமோ போடியம்மா... வயிறு நிறைய புள்ளைய வெச்சுக்கிட்டு நீ இங்கே உட்கார்ந்திருக்கே... மாப்பிள்ளையோ மேல்படிப்பு, வேலைன்னு கலிபோர்னியாவில் உட்கார்ந்திருக்கார், இந்த மாதிரியான நேரத்துலதான் பொண்டாட்டிக்கு பக்கத்துல புருஷன் இருக்கணும்.”

பூமா அம்மாவை முறைத்தாள்.

“உன்னோட புலம்பலை ஆரம்பிச்சுட்டியா...? எனக்குப் பசிக்குது. ஏதாவது சாப்பிடக் குடு...?”

“மாதுளம் ஜூஸ் போட்டு வெச்சிருக்கேன். தரட்டுமா?”

“ம்...கொடு...”

பூமா தலையாட்டிக் கொண்டிருக்கும்போதே வாசலில் கைனடிக் ஹோண்டா ஸ்கூட்டர் சத்தம் கேட்டது.

வள்ளியம்மை எட்டிப் பார்த்துவிட்டு பூமாவை ஏறிட்டாள். “உன்னோட வாயாடி ஃப்ரெண்ட் ராணி வர்றா... இனி அவ கிளம்பிப்போக ராத்திரி எட்டு மணியாயிடும்...”

“சரி...சரி...அவளுக்கு முன்னாடி மூஞ்சியைத் தூக்கி வெச்சுக்கிட்டுத் திரியாதேம்மா. இந்த டெல்லியில் எனக்கு இருக்கிற ஒரே ஃப்ரண்ட் அவ ஒருத்திதான். அவளையும் இங்கே வரவிடாமே பண்ணிடாதே...”

“நான் ஏண்டியம்மா வாயைத் தொறக்கறேன். அவ பாடு...உன் பாடு...” வள்ளியம்மை சொல்லிக் கொண்டிருக்கும்போதே அந்த ராணி சுடிதாரில் அழகாய் ஹாய் சொல்லிக் கொண்டே உள்ளே வந்தாள்.

“வாடீ...”

“ரெண்டு நாளா உன்னை வந்து பார்க்கணும்னு ட்ரை பண்றேன். முடியவே இல்லை. இன்னிக்கு கன்னாட்ப்ளேஸ் பக்கம் வரவேண்டியிருந்தது. அப்படியே உன் வீட்டுப் பக்கம் திருப்பிட்டேன்.”

“மொதல்ல உட்கார்டி...”

ராணி வள்ளியம்மையிடம் திரும்பினாள்.

“ஆன்ட்டி! எனக்கு சூடா காப்பி வேணும். இந்த டெல்லிக் குளிர்ல தலை திம்னு இருக்கு...”

வள்ளியம்மை வேண்டாவெறுப்பாய் புன்னகைத்து, “இதோ தர்றேண்டியம்மா” என்று சொல்லிவிட்டு உள்ளே போனாள்.

ராணி பூமாவின் பம்மிய வயிற்றை மெள்ளத் தொட்டு, “பையன் எப்படியிருக்கான்…”

“வயித்துக்குள்ளே துவம்சம் பண்றான்.”

“டெலிவரி டேட் என்னிக்கு?”

“மே லாஸ்ட் வீக்ல ஏதாவது ஒருநாள், பயம்மாயிருக்குடி!”

“எதுக்கு பயம்?”

“நார்மல் டெலிவரிக்கு சான்சஸ் ரொம்ப கம்மியாம். மே பி சிசேரியன்…”

“பயப்படாதே…! உனக்கு நார்மல் டெலிவரிதான். நான் ஆசிர்வாதம் பண்ணிட்டேன்” சொல்லிச் சிரித்தவள், வீட்டை ஒரு பார்வை பார்த்துவிட்டு மெல்லிய குரலில் கேட்டாள்.

“உன்னோட கணவர் வீட்டுக்குள்ளே இருக்காரா இல்லே வெளியே போயிட்டாரா...?”

பூமா விநோதமாய் ராணியைப் பார்த்தாள்.

“என்னடி உளர்ற? அவர் இன்னும் கலிபோர்னியாவிலதானே இருக்கார். மறந்துட்டியா?”

ராணி நெற்றியைச் சுருக்கினாள்.

“இன்னிக்குக் காலையில் பத்துமணிக்கு உன்னோட கணவரை அக்பர் ரோட்டு கார்னர்ல இருக்கிற ஒரு டிபார்ட்மென்டல் ஸ்டோர் வாசல்ல பார்த்தேன்…”

பூமா தன் தலையில் நோகாமல் அடித்துக் கொண்டு சிரித்தாள்.

“நீ வேற யாரையோ பார்த்திருக்கே! பத்து நிமிஷத்துக்கு முன்னாடிதானே அவர் எனக்கு கலிபோர்னியாவிலிருந்து போன் பண்ணிப் பேசினார்.”

ராணியின் முகம் இப்போது ஒரு சீரியஸ்தனத்துக்கு உட்பட்டிருந்தது.

“நோ பூமா... உன்னோட கணவரை எனக்குத் தெரியாதா என்ன...? கடந்த மூணு வருஷ காலமா உன் ஃபேமிலியோடு நெருங்கிப் பழகிட்டு வர்றேன். உன்கிட்ட அரட்டை அடிக்கிற மாதிரியே உன்னோட கணவர்கிட்டேயும் மணிக்கணக்கா பேசியிருக்கேன். நான் இன்னிக்கு காலையில பத்துமணிக்கு அக்பர் ரோட்ல உன்னோட கணவரைப் பார்த்தது நூத்துக்கு நூறு உண்மை.”

பூமா இன்னமும் பெரிதாக சிரித்துவிட்டு சொன்னாள். “என்னோட கணவர் சாயல்ல வேற யாரையாவது நீ பார்த்திருக்கலாம்.”

“இல்லவேயில்லை. அது உன்னோட கணவர்தான்!”

“பைத்தியம் மாதிரி உளறாதே…”

“பூமா! சிரிக்காதே! பீ சீரியஸ். அயாம் நாட் ஜோக்கிங். நான் உன்னோட கணவரைப் பார்த்தது நிஜம்.”

“சரி! அவரை நீ பார்த்தியே! அவர்கிட்ட ஏதாவது பேசினியா...?”

“இல்லை...”

“ஏன்...?”

அவர் காரை விட்டு இறங்கி யாரோ ஒருத்தரோடு மும்முரமா பேசிட்டுப் போனார்.

“ராணி...! நிச்சயமா நீ பார்த்தது என்னோட கணவரா இருக்க முடியாது.”

“நோ... நான் பார்த்தது அவரைத்தான்...! சென்ட் பர்செண்ட் அவர் உன்னோட கணவர்தான்...”

பூமா சமையலறையிலிருந்து வெளிப்பட்ட தன் தாயைப் பார்த்துவிட்டு சொன்னாள்.

“ராணி சொல்றதைக் கேட்டியாம்மா...! இன்னிக்குக் காலையில பத்துமணி சுமார்க்கு அக்பர் ரோட்ல உன்னோட மாப்பிள்ளையை இவ பார்த்தாளாம்...”

வள்ளியம்மை தவறிப்போன பல்வரிசையில் சிரித்தாள். “ஏதாச்சும் கனவு கண்டியா ராணி...?”

“இல்லீங்கம்மா... உங்க மாப்பிள்ளையை நான் பார்த்தேன். இது கனவு கிடையாது. நிஜம். முழு நிஜம். ஏதாவது ஓர் அவசர காரியமா டெல்லிக்கு வந்துட்டுப் போயிருக்கலாம்...”

பூமா இப்போது கண்டிப்பான தொனியில் குரலை உயர்த்தினாள். “டோன்ட் பி சில்லி ராணி, கலிபோர்னியா எங்கே இருக்கு? டெல்லி எங்கேயிருக்கு...? ப்ளைட்ல பனிரெண்டு மணிநேர ஜர்னி. இன்னிக்குக் காலையில பத்து மணிக்கு அவரை நீ பார்த்ததா சொல்றே. இப்போ மணி சாயந்தரம் ஆறு. வந்துட்டு போக எப்படி சாத்தியம்? அப்படியே அவர் வந்து இருந்தாலும் என்னைப் பார்க்காமே எப்படிப் போவார்...?”

“அதுதான் எனக்கும் குழப்பமாயிருக்கு. பூமா. டெல்லிக்கு வந்துட்டு உன்னைப் பார்க்காமே போக உன்னோட கணவர்க்கு எப்படி மனசு வரும்...? பட், நான் அவரைப் பார்த்தது நிஜம். எனக்காக நீ ஒரு காரியம் பண்றியா?”

“சொல்லு...”

“உன்னோட கணவர் வேலை பார்க்கிற கம்ப்யூட்டர் கம்பெனியோட போன் நெம்பர் உனக்குத் தெரியும்தானே?”

“ம்... தெரியும்...”

“இப்பவே அவருக்கு போன் பண்ணு....”

“கொஞ்ச நேரத்துக்கு முந்திதானே என்கிட்ட அவர் பேசினார்...”

“பரவாயில்லை. இருக்கட்டும்... எனக்காக நீ மறுபடியும் போன் பண்ணு...”

பூமா தயங்கினாள்.

“ம்... பண்ணு....”

சில விநாடி யோசனைக்குப் பின் ரிஸீவரை கையில் எடுத்தாள். பூமா. டயலில் எண்களைத் தட்ட ஆரம்பித்தாள்.

# 3

ரூபலா சற்றே கவலையாய் விவேக்கைப் பார்த்தாள்.

“என்னங்க... நீங்க அந்தப் பொண்ணை அப்ஸர்வ் பண்ணிட்டதை ஸ்மெல் பண்ணிட்டு போயிட்டான்னு நினைக்கிறேன்.”

“அப்படி இருக்காது ரூபி... அவ வேற ஏதாவது ஒரு பக்கம் மறைஞ்சு நின்னுக்கிட்டு நம்மை வாட்ச் பண்ணலாம்.”

கண்ணாடிக் கோப்பையில் வெண்ணெய்க் குவியலாய் பிஸ்தா ஐஸ்க்ரீம் வந்தது.

விவேக் ஐஸ்க்ரீமை இரண்டு வாய் சாப்பிட்டுவிட்டு “ரூபி” என்றான் மெல்ல.

“என்னங்க...”

“நீ ஐஸ்க்ரீம் சாப்பிட்டுகிட்டு இரு. ரெண்டு நிமிஷத்துல நான் வந்துடறேன்.”

“எங்கே போறீங்க...?”

“அவ இந்த பாலிகஞ்ச் மார்க்கெட்டை விட்டு அவ்வளவு சீக்கிரத்துல போயிருக்க மாட்டா... நான் ஓர் அவசர சர்வே பண்ணிட்டு வந்துடறேன்...”

“வேண்டாங்க... அவ மறுபடியும் கண்ணுல பட்டா பார்ப்போம் இல்லேன்னா விட்டுடுவோம்...”

“அப்படி அவளை விடமுடியாது ரூபி. டெல்லி வந்திருக்கிற என்னை ஒருத்தி ஃபாலோ பண்றான்னா அவகிட்ட ஏதோ ஒரு முக்கியமான விஷயம் இருக்கு...”

“இருங்க...! நானும் வர்றேன்.”

“வேண்டாம். இந்த ஜனக் கூட்டத்துல உன்னால வேகமாக நடக்க முடியாது. நான் அஞ்சே நிமிஷத்துல சின்னதாக ஒரு சர்வே பண்ணிட்டு வந்துடறேன்.”

“என்னங்க... எனக்கு பயம்மாயிருக்கு...”

“பயப்படாதே... டென்ஷனைக் காட்டிக்காமே நிதானமாக ஐஸ்க்ரீமை சாப்பிட்டுக்கிட்டு இரு. அஞ்சே நிமிஷம் வந்துடறேன்...”

விவேக் வெளியே வந்து பாலிகஞ்ச் மார்க்கெட்டின் ஜனக்கூட்டத்தில் கலந்தான்.

ரூபலாவுக்கு இருதயத்தில் ஒரு பக் பக் ஆரம்பமாயிருக்க, ஐஸ்க்ரீமை மர ஸ்பூனால் கலக்கிக்கொண்டே சாப்பிடத் தோன்றாமல் உட்கார்ந்திருந்தாள்.

ஐந்து நிமிஷங்கள் காணாமல் போய் ஆறாவது நிமிஷம் உற்பத்தியாயிருக்க, ரூபலா ஐஸ்க்ரீமைத் தள்ளி வைத்து விட்டு விவேக் போன திசையையே வெறிக்க ஆரம்பித்தாள்.

நிமிஷங்கள் கரைந்தன.

ஏழு... எட்டு... ஒன்பது... பத்து.

ரூபலாவுக்கு அந்தக் குளிரிலும் வியர்க்க ஆரம்பித்தது.

நிமிஷங்கள் மேலும் கரைந்து. கால் மணிநேரம் விழுங்கப்பட்டிருக்க. ரூபலா கலவரமாகி நாற்காலியில் இருந்து எழ முயன்ற விநாடி,

அவளுக்குப் பக்கவாட்டில் யாரோ வந்து நிற்பது போல் தோன்றவே நிமிர்ந்தாள்.

பிங்க் நிற சல்வார் கம்மீஸ் அணிந்த அந்தப் பெண் தெரிந்தாள்.

புன்னகைத்தாள்.

“உங்க கணவர் மிஸ்டர் விவேக் என்னைத் தேடிக்கிட்டு இந்தப் பாலிகஞ்ச் மார்க்கெட்டுக்குள்ள போயிருக்கார் போலிருக்கே...?”

ரூபலா எதுவும் பேசத் தோன்றாமல் நிற்க, அவள் ரூபலாவின் தோளில் கை வைத்தாள்.

ரூபலா அவளுடைய மெல்லத் தட்டிவிட்டாள். “யார் நீ...?”

அவள் ரூபலா கேட்ட கேள்விக்கு பதில் சொல்லாமல் மெல்லிய குரலில் கேட்டாள்.

“நீங்களும் உங்க கணவரும் எதுக்காக டெல்லி வந்து இருக்கீங்கன்னு நான் தெரிஞ்சுக்கலாமா?”

“அதை நான் சொல்றேன்.”

பின்பக்கம் குரல் கேட்டு அந்த சல்வார் கம்மீஸ் திரும்பினாள்.

விவேக்.

# 4

பூமா டயலில் எண்களைத் தட்டிவிட்டு கலிபோர்னியா லைன் கிடைப்பதற்காகக் காத்திருந்தாள்.

பதினைந்து விநாடிகளுக்குப் பிறகு இணைப்பு கிடைத்தது.

பூமா ஆங்கிலத்தில் குரல் கொடுத்தாள்.

“அது ப்யூச்சர் க்ளான்ஸ் கம்ப்யூட்டர் கம்பெனிதானே...?”

“ஆமாம்...”

“என்ஜினியர் மிஸ்டர் ஸ்ரீராம் ப்ளீஸ்...”

“நீங்கள் யார் பேசுவது...?”

“அவருடைய மனைவி..”

“ஒரு நிமிடம் லைனில் இருங்கள்.”

காத்திருந்தாள் பூமா. நெற்றியிலும், மேலுதட்டிலும் வியர்வை பூத்திருந்தது.

முப்பது விநாடிகளுக்குப் பிறகு ரிஸீவரில் குரல் கேட்டது.

“மேடம்... மிஸ்டர் ஸ்ரீராம் ஓர் அவசர வேலை விஷயமாய் பக்கத்து நகரமான டெல்பியாவுக்கு போயிருக்கிறார்.”

“எப்போது திரும்பி வருவார்.?”

“இன்று மாலை ஆறு மணிக்கு மேல்...”

“ஒரு தகவல் வேண்டும்.”

“என்ன...?”

“என்னுடைய கணவர் கடந்த இரண்டு நாட்களில் கலிபோர்னியாவிலிருந்து இந்தியாவுக்கு வந்துவிட்டுப் போனாரா?”

“இந்தியாவுக்கா?”

“ஆமாம்...”

“இல்லையே...! ஒரு முக்கியமான கம்ப்யூட்டர் ப்ராஜக்ட் விஷயமாக அவர் இங்கே மும்மரமான பணியில் ஈடுபட்டுள்ளார்.”

“தேங்க்யூ ஃபார் யுவர் கைண்ட் இன்பர்மேஷன். மறுபடியும் ஆறுமணிக்கு மேல் போன் செய்கிறேன்...”

பூமா ரிஸீவரை வைத்துவிட்டு ராணியைப் பார்த்தாள். உதட்டில் பெரிய புன்னகை.

“சென்ட் பர்சன்ட் கன்ஃபர்ம். என்னோட ஹஸ்பென்ட் கலிபோர்னியாவிலதான் இருக்காராம். ஒரு முக்கியமான கம்ப்யூட்டர் ப்ராஜெக்ட் விஷயமாக ரொம்பவும் பிஸியா இருக்கிறதாகத் தகவல்...”

ராணி மெல்லச் சிரித்தாள்.

“அப்படீன்னு அவங்க சொன்னதுதானே?”

“ஏய்... ராணி... நீ... என்ன சொல்றே...?”

“இதோ பார் பூமா! நான் திரும்பத் திரும்ப ஒண்ணையே சொல்லிக்கிட்டிருக்கிறதா நினைக்க வேண்டாம். இப்போ நீ கலிபோர்னியாவுக்கு போன் பண்ணப் பேசினே... பட் உன்கிட்ட பேசினது அந்தக் கம்பெனியோட ஆட்கள்தான். உன்னோட கணவர் உன்கிட்டே நேரிடையா பேசலை..”

சாயந்தரம் ஆறு மணிக்கு மேல் அவர் கம்பெனிக்குத் திரும்புவாராம்...

“நீ வேணும்னா ஆறு மணிக்கு மேல போன் பண்ணிப் பாரு.. உன்னோட கணவர் லைன்ல கிடைக்க மாட்டார்.”

“நீ என்னடி சொல்றே....?”

“என் மனசுல பட்டதைச் சொல்றேன்..”

பூமா ராணியை பயமாய் பார்த்தாள்.

# 5

சல்வார் கம்மீஸ் பெண்ணின் முகத்தில் திகைப்பு பரவ, விவேக் அவளுக்குப் பக்கத்தில் வந்து நின்றான்.

"உன்னைத் தேடி கண்டுபிடிக்கிறதுக்காக இந்த பாலிகஞ்ச் மார்க்கெட்டுக்குள்ளே நான் போனதாக நீ நினைச்சா அது தப்பு. உன்னை இப்படி ரா ஹேண்டா பிடிக்கிறதுக்காக நான் இந்த ஐஸ்க்ரீம் பார்லர்க்குப் பின்னாடிதான் ஒளிஞ்சுட்டிருந்தேன். எனக்குத் தெரியும். என்னோட ஒய்ஃப் ரூபலாவை இப்படித் தனியா விட்டுட்டுப் போனா நீயோ, உன்னோட ஆட்களோ பக்கத்துல வருவீங்கன்னு தெரியும். அதான் உன்னைத் தேடிட்டுப் போற மாதிரி பாவ்லா காட்டிட்டு ஐஸ்க்ரீம் பார்லர்க்குப் பின்னாடி போய் ஒளிஞ்சுக்கிட்டேன். நான் நினைச்ச மாதிரியே உன்னோட மூவ்மெண்ட்ஸ் இருந்தது. இப்ப சொல்லு, நீ யாரு? எதுக்காக எங்கள ஃபாலோ பண்ணிட்டு வர்றே?"

அவள் தன் கையில் வைத்து இருந்த சிறிய பூப்போட்ட கர்ச்சீப்பால் மூக்கு நுனி வியர்வையை ஒற்றிக்கொண்டு சின்னதாய் புன்னகைத்தாள்.

"மிஸ்டர் விவேக்..! நீங்க நினைக்கிற மாதிரி நான் இல்லீகல் வுமன் கிடையாது. என் பேர் மிருதுளா. எனக்கு சொந்த ஊர் மெட்ராஸ். நான் இந்த டெல்லிக்கு வந்து நாலு வருஷமாச்சு, என்னோட கணவர்க்கு டெல்லி யூனிவர்ஸிடியில் பயோகெமிஸ்ட்ரி ப்ரொபசர் உத்யோகம்.."

"சரி! எதுக்காக எங்கள ஃபாலோ பண்ணினே?"

"உங்ககிட்ட நான் கொஞ்சம் பேசணும்.."

"அப்படிப் பேசறதாயிருந்தா, நேரிடையா வந்து பேசியிருக்கலாமே..?

"எனக்கு டவுட்டாயிருந்தது ஸார்."

"என்ன டவுட்..?"

"நீங்க விவேக்கா இல்ல வேற யாராவதான்னு, ஏன்னா இதுவரைக்கும் உங்களை போட்டோவில்தான் பார்த்திருக்கேன். நேர்ல பார்க்கறது இதுதான் முதல் தடவை. அதான் தயக்கமாயிருந்தது. ஃபாலோ பண்ணி ஏதாவது ஓர் இடத்துல உங்ககிட்ட பேசிடலாம்னு நினைச்சேன். நீங்க பார்லரை விட்டு வெளியே போனதும் தனியா இருக்கிற உங்க மிஸஸ்கிட்ட கேட்டுப் பார்க்கலாம்ன்னு பக்கத்துல வந்தேன்.."

விவேக் அவளை ஒரு நம்பாத பார்வை பார்த்துவிட்டு கேட்டான்

"உம் பேர் உன்ன சொன்னே...?"

"மிருதுளா..."

“சரி... என்கிட்ட என்ன பேசணும்...?”

“தனியா ஏதாவது ஒரு இடத்துக்குப் போய் பேசலாமா? இந்த மார்க்கெட் இரைச்சல்ல எதுவும் பேச முடியாது...”

“எங்கு போய் பேசலாம்? நீயே சொல்லு...”

“மார்க்கெட்டுக்கு வெளியே பார்க் ஒண்ணு இருக்கு அங்கே போயிடலாம்...”

“சரி, வா...”

பாலிகஞ்ச் மார்க்கெட்டை விட்டு ரூபலா, விவேக், மிருதுளா மூன்று பேரும் வெளியே வந்தார்கள்.

பார்க் உறைபனியில் இருந்தது. ஆண்களும் பெண்களும் கம்பளி கோட்டுக்களில் நெருக்கியடித்துக் கொண்டு சிமெண்ட் பெஞ்சுகளில் உட்கார்ந்திருந்தார்கள்.

மிருதுளா நடந்துகொண்டே சொன்னாள்.

“மிஸ்டர் விவேக்...! டெல்லியில் உங்களைப் பார்த்தது என்னோட அதிர்ஷ்டம்னுதான் சொல்லணும். நான் இப்படி ஒரு வாய்ப்பை எதிர்பார்க்கவேயில்லை...”

விவேக் காலியாய் இருந்த ஒரு சிமெண்ட் பெஞ்சைக் காட்டினான்.

“இப்படி உட்காரலாமா..?”

மிருதுளா தலையாட்ட, அந்த நீளமான சிமெண்ட் பெஞ்சில் உட்கார்ந்தார்கள்.

சில விநாடி மௌனத்துக்குப் பிறகு மிருதுளா மெள்ளப் பேச்சைத் தொடர்ந்தாள்.

“மிஸ்டர் விவேக்..! உங்க நாட்டுப்பற்றும் இந்தியாவை எவ்வளவு தூரம் நீங்க நேசிக்கிறீங்கங்கிற விஷயமும் எனக்குத் தெரியும். உங்க இன்வெஸ்டிகேஷன் திறமையால எத்தனையோ கேஸ்கள் தூள்தூளாகிப் போன விஷயமும் எனக்குத் தெரியும். உங்ககிட்ட உனக்குப் பிடிச்ச விஷயம் எது தெரியுமா...?”

விவேக் கையமர்த்தினான். ”இதோ பார்! நீ நேரிடையாவே விஷயத்துக்கு வரலாம். இந்தப் பாராட்டுபத்திரம் வாசிக்கிற வேலையெல்லாம் வேண்டாம்... விஷயத்தைச் சொல்லிட்டுப் பின்னாடி நேரம் இருந்தா அந்த வேலையை வெச்சுக்கலாம்.”

“ஸாரி! உங்களைப் பார்த்த ஆர்வத்துல ஏதேதோ பேசிக்கிட்டிருக்கேன்... இதோ, விஷயத்துக்கு வந்துட்டேன்..”

“சொல்லு...”

“என்னோட கணவர் கோவிந்த்வர்மா டெல்லி யூனிவர்ஸிடியில்...”

“பயொகெமிஸ்ட்ரி ப்ரொபஸர்ன்னு சொன்னே. மேற்கொண்டு விஷயத்துக்கு வா...”

“இதோ வந்துட்டேன். கோவிந்த் வர்மாவுக்கு நான் இரண்டாவது மனைவி. அவர்க்கு வயசு ஐம்பத்தி அஞ்சு... முதல் மனைவி இறந்து கிட்டத்தட்ட ஏழெட்டு வருஷமாகுது. குழந்தைகள் இல்லை. நான் அவர்க்கு ரெண்டாவது தாரமா வாழ்க்கைப்பட்டது நானே எதிர்பாராத ஒண்ணு...”

விவேக் மிருதுளாவையே பார்த்துக் கொண்டிருக்க, அவள் தொடர்ந்தாள்.

“என்னுடைய கணவர் கோவிந்த் வர்மாவுக்கு என் மேல் அவ்வளவு ஈடுபாடு கிடையாது. வீட்ல நான் ஒருத்தி இருக்கிறதா ஃபீல் பண்ணிக்கவே மாட்டார். எப்பப் பார்த்தாலும் தடிமன் தடிமனா புஸ்தகங்களைப் படிச்சுட்டும் ராத்திரி முழுக்க எதையாவது எழுதிகிட்டு இருக்கிறதும்தான் வேலை.”

“நீ இன்னும் விஷயத்துக்கே வரலை...”

“இதோ வந்துட்டேன்...!”அவசரக் குரலில் சொன்ன மிருதுளா குரலைத் தாழ்த்திக் கொண்டாள்.

“மிஸ்டர் விவேக்! கொஞ்ச நாளாகவே என்னோட கணவர் இயல்பா இல்லை. ரெஸ்ட்லெஸ்ஸா இருக்கார். ராத்திரி நேரங்கள்ல நிறைய ஐ.எஸ்.டி கால்ஸ் பேசறார். நான் ஒட்டு கேட்டேன். அதுல நிறைய கோட் வேர்ட்ஸ். எனக்கு எதுவுமே புரியலை. பட் ஒரு விஷயம் மட்டும் புரிஞ்சுது...”

“என்ன?”

“இந்த 2001-ஆவது வருஷத்துல டெல்லிக்கு ஏதோ ஒரு மிகப் பெரிய ஆபத்து வரப் போகுது...”

“என்ன ஆபத்து...?”

“அது என்னன்னு எனக்குத் தெரியலை. போலீஸுக்கு விஷயத்தைக் கொண்டு போகவும் பயமாயிருக்கு. விஷயம் என்னான்னு சரியா தெரிஞ்சுக்காமே போலீஸுக்குப் போறதும் அவ்வளவு சரியில்லையே...?”

விவேக் அவளைக் கையமர்த்திவிட்டுக் கேட்டான்.”ஃபோன்ல உன்னோட கணவர் பேசும்போது என்னென்ன கோட் வேட்ஸ் யூஸ் பண்ணுவார்ன்னு சொல்ல முடியுமா?”

“இந்த நோட்ல குறிச்சு வெச்சிருக்கேன்” சொன்ன மிருதுளா, தன் வானிடி பேக்கிலிருந்து ஒரு சிறிய பாக்கெட் நோட்டை எடுத்துப் பிரித்தாள்.

“அந்தக் கோட் வேர்ட்ஸை படிக்கட்டுமா ஸார்?”

“ம்... படி...”

அவள் படிக்க ஆரம்பித்தாள்.

“ஸ்வீட் பாய்ஸன்...”

“ம்...”

“கறுப்பு மயில்.”

“ம்...”

“மேகம் இல்லாத வானம்.”

“ம்...”

“ரெட் டாட்ஸ்....”

விவேக் நிமிர்ந்தான்.

“என்ன சொன்னே?”

“ரெட் டாட்ஸ்.”

“அந்தப் பாக்கெட் நோட்டை என்கிட்டே குடு.”

மிருதுளா கொடுத்தாள். விவேக் அதை வாங்கிப் பார்த்துவிட்டு சில விநாடிகள் கழித்துக் கேட்டான்.

“உன்னோட கணவர் இப்போ வீட்லதான் இருக்காரா...?”

“இல்லை. வெளியூர் போயிருக்கார்.”

“எந்த ஊர்க்கு...?”

“ஜான்ஸி...”

“எதுக்காகப் போயிருக்கார்...?”

“எனக்குத் தெரியாது. எதுக்காக ஜான்ஸி போறீங்கன்னு கேட்டாலும் சொல்லமாட்டார்...”

“ஜான்ஸிக்கு அடிக்கடி போவாரா?”

“மாசத்துக்கு ரெண்டு தடவையாவது போவார்...”

“தங்கிட்டு வருவாரா?”

“இல்லை... காலையில் போய்ட்டு ராத்திரி பத்து பதினோரு மணிக்குள்ளே திரும்பி வந்துடுவார்...”

“சரி… கிளம்பு…”

“எங்கே ஸார்?”

“உன்னோட வீட்டுக்கு! அவர் இல்லாத நேரத்துல அவரோட அறையை அலசிப் பார்க்கத்தான் அவர்கிட்ட என்ன தப்பு இருக்குன்னு தெரிஞ்சுக்க முடியும்…”

மிருதுளா தயங்கினாள்.

“ஸ… ஸார்… அது வந்து…”

“என்ன?”

“ஜான்ஸிக்குப் போயிருக்கிற அவர் திடீர்னு திரும்பி வந்துட்டா…?”

“அவர் ராத்திரிக்குத்தானே வருவார்…? இப்போ மணி ஏழு கூட ஆகலை…! உன் கணவரோட அறையை அலசிப் பார்க்க ஒரு அரை மணிநேரம் போதும்…”

“எனக்குப் பயம்மாயிருக்கு ஸார். நீங்க சோதனை போட்டுக்கிட்டு இருக்கும்போது அவர் வந்துட்டார்னா பெரிய பிரச்னையா போயிடும்…”

“அப்படியொரு நிலைமை வந்தா நான் பார்த்துக்கிறேன்… நீ கிளம்பு…”

மிருதுளா சில விநாடிகள் தயங்கிவிட்டு எழுந்தாள். “வாங்க…”

# 6

காலை எட்டு மணி.

ராணி குளியலறையிலிருந்து டவலைக் கட்டிக் கொண்டு வெளிப்பட்டபோது கார்ட்லஸ் போன் டீபாயின் மேல் உட்கார்ந்து சிணுங்கிக் கொண்டிருந்தது.

எடுத்தாள்.

"ஹலோ..."

"ராணி! நான் பூமா பேசறேன்..."

"நானே உனக்குப் போன் பண்ணணும்னு நினைச்சிட்டிருந்தேன். என்ன கலிபோர்னியாவிலிருந்து உன்னோட கணவர் பேசினாரா...?"

"இல்லை! எவ்வளவு ட்ரை பண்ணியும் அவர் லைன்ல கிடைக்கலை... நேத்து ராத்திரி பூராவும் சுத்தமா ஒரு பொட்டு தூக்கம் கிடையாது."

"உன்னோட கணவர் வேலை செய்யற கம்பெனியில் என்ன சொல்றாங்க...?"

"அவுட் ஆ்ஃப் ஸ்டேஷனுக்குப் போனவர் இன்னும் வரலைன்னு சொல்றாங்க... அதிகமா என்கொயரி பண்ணினா ப்ராப்பரா ரிப்ளை பண்ண மாட்டேங்கறாங்க. நீ உடனே புறப்பட்டு வர்றியா..." எனக்கு ரொம்பவும் பயம்மாயிருக்கு..."

"நான் இப்பவே வர்றேன்... நீ மனசைப் போட்டு அலட்டிக்காதே..."

"சீக்கிரம் வா... லேட் பண்ணிடாதே!"

"இதோ... கிளம்பிட்டேன்..."

"ராணி ரிஸீவரை வைத்துவிட்டு வேக வேகமாய் ஒரு சல்வார் கம்மீஸுக்குள் நுழைந்தாள். தலைமுடியை போனிடெய்லாக்கி புருவ மத்தியில் ஒரு ஸ்டிக்கர் பொட்டைப் பொருத்திக் கொண்டு அறையினின்றும் வெளிப்பட்டாள்.

அவளுடைய அப்பா கீர்த்திவாசன் பார்த்துக் கொண்டிருந்த நாளிதழை மடக்கிக் கொண்டு நிமிர்ந்தார்.

'எங்கேம்மா...! இவ்வளவு சீக்கிரத்துல சாப்பிடக்கூட இல்லாமே கிளம்பிட்டு..."

"அப்பா! ஒரு முக்கியமான வேலை. சாவகாசமா உட்கார்ந்து சாப்பிட நேரமில்லை. வழியில நான் பார்த்துக்கறேன்..."

“மத்தியான லஞ்சுக்கு…?”

“முடிஞ்சா வர்றேன். எனக்காக வெயிட் பண்ணிட்டிருக்காதீங்கப்பா…”

“என்னம்மா… ஏதாவது பிரச்னையா…?”

“ஆமாப்பா…! பட் பிரச்னை எனக்கில்லை. பூமாவுக்கு…? நான் சாயந்திரம் வந்து எல்லாத்தையும் சொல்றேன்ப்பா. இப்போ நின்னு பேசிட்டிருக்க நேரமில்லை…”

ராணி சொல்லிக் கொண்டே போர்டிகோவில் நின்றிருந்த தன்னுடைய கைனடிக் ஹோண்டாவுக்குப் போய் செல்ஃப் ஸ்டார்ட்டர் பட்டனை அழுத்தி உயிரூட்டிக் கொண்டு ‘விர்ர்ர்ர்’ரென்று காற்றை அரைத்துக் கொண்டு புறப்பட்டாள்.

டெல்லியின் போக்குவரத்து குறைந்த சாலைகளில் பதினைந்து நிமிஷம் பயணம்.

பூமாவின் வீடு வந்தது.

அழைப்பு மணிக்கு வேலை கொடுக்க பூமா கனமான கவலை முகத்துடன் வந்து கதவைத் திறந்தாள். ராணியைப் பார்த்ததும் கண்களில் நீர் சட்டென்று அரும்பி பளபளத்தது.

“ரா ராணி…”

பூமாவின் தோளில் கை வைத்தாள் ராணி.

“கவலைப்படாதே…! மறுபடியும் போன் பண்ணிப் பார்த்தியா…?

“போன் பண்ணினேன். ரெஸ்பான்ஸே இல்லை. ஒரே என்கேஜ்ட் டோன்.”

“அப்படின்னா… நீ போன் மூலமா அவங்களை காண்டாக்ட் பண்றதை கம்பெனிக்காரன் விரும்பலை.”

“அப்படித்தான் நானும் நினைக்கிறேன்…”

“சரி… உன்னோட கணவர் வேலை செய்யற கலிபோர்னியா கம்பெனியின் போன் நெம்பரை என்கிட்ட சொல்லு. நான் இப்போ போன் பண்ணிப் பார்க்கிறேன்…”

பூமா எண்களைச் சொல்ல ராணி டயலில் எண்களைத் தட்டினாள்.

ஓவர்சீஸ் லைன் கலிபோர்னியாவைத் தேடிக்கொண்டு போயிற்று. தொடர்ந்து என்கேஜ்ட் டோன்.

“சுத்தம்! ரிஸீவரை எடுத்துக் கீழே வெச்சுட்டாங்க போலிருக்கு…”

பூமா கலக்கமாய் கேட்டாள்.

“இப்ப என்னடி பண்றது...? என்னோட கணவர் இப்போ கலிபோர்னியாவில இருக்காரா... இல்லை இந்தியாவில் இருக்காரான்னு தெரியலையே. இந்தியாவில் இருந்தா என்னை ஏன் பார்க்க வரலை...?”

பூமாவின் அம்மா சேலைத் தலைப்பில் கண்களை ஒற்றிக்கொண்டு பக்கத்து அறையினின்றும் வெளிப்பட்டாள்.

“ராணி! பூமா நேத்து ராத்திரியிலிருந்து ஒரு வாய் தண்ணி கூட சாப்பிடலை... அசந்து ஒரு நிமிஷம் படுக்கக்கூட இல்லை... நீயாவது கொஞ்சம் தைரியம் சொல்லி அவளைச் சாப்பிட வை...”

ராணி பூமாவின் மோவாயை நிமிர்த்தினாள்.

“இதோ பார் பூமா...! அமெரிக்கன் எம்பஸியில் எனக்கு வேண்டிய ஒருத்தர் இருக்கார். அவரை காண்டாக்ட் பண்ணி விஷயத்தை சொல்வோம். ஹி வில் ஹெல்ப் யூ... உன்னோட கணவர்க்கு ஒண்ணும் ஆகியிருக்காது. நீ மொதல்ல ஒரு வாய் சாப்பிடு...”

“இல்ல ராணி! எனக்கு மொதல்ல என்னோட கணவர் எங்கேன்னு தெரியணும்... அவர்கிட்ட பேசின பின்னாடிதான் எனக்கு சாப்பாடு, தூக்கம் எல்லாமே...”

“வயிறு நிறைய குழந்தையை வெச்சுக்கிட்டு இப்படி நீ சாப்பிடாமே, தூங்காமே இருந்தா, அந்தக் கெடுதல் உனக்கு மட்டும் இல்லை. குழந்தைக்கும்தான்”

“இருக்கட்டும்...! நீ மொதல்ல அமெரிக்கன் எம்பஸிக்கு போன் பண்ணி உனக்குத் தெரிஞ்சவர்கிட்ட பேசிப் பாரு...”

பூமா சொல்லிக் கொண்டிருக்கும்போதே, டெலிபோன் தன் வாயைத் திறந்து கூப்பிட்டது,

பக்கத்தில் இருந்த ராணி ரிஸீவரை எடுத்து காதுக்குப் பொருத்தினாள்.

“ஹலோ...”

மறுமுனையில் அமெரிக்க ஆங்கில அக்ஸெண்ட்டோடு ஒரு குரல் கேட்டது.

“கால் ஃப்ரம் கலிபோர்னியா. ப்யூச்சர் க்ளான்ஸ் கம்ப்யூட்டர் கம்பெனியிலிருந்து பேசுகிறோம்.”

“சொல்லுங்கள்...”

“பேசுவது மிஸஸ் பூமா ஸ்ரீராம் அவர்களா?”

“இல்லை. அவளுடைய தோழி...”

“மிஸஸ் பூமா பக்கத்தில் இருக்கிறார்களா?”

“இருக்கிறார்கள்…”

“மிஸஸ் பூமா அவர்களுக்கு ஓர் அதிர்ச்சியான செய்தியைச் சொல்ல வேண்டிய வருத்தமான சூழ்நிலையில் உள்ளோம்.”

“அதிர்ச்சியான விஷயம்?”

“ஆமாம். ஸ்ரீராம் இப்போது உயிரோடு இல்லை…”

“எ…… எ… என்னது…?”

“ஸாரி டு ஸே திஸ்! நாங்களே இப்போது மனதைத் திடப்படுத்திக் கொண்டுதான் சொல்லிக் கொண்டிருக்கிறோம்.”

“எப்படி…? என்னாயிற்று அவருக்கு…?”

“கார் விபத்து! டெல்பியா நகரத்துக்கு ஓர் அவசர வேலையாகப் போனவர் ஒரு டாக்ஸியை அமர்த்திக்கொண்டு கலிபோர்னியாவுக்குத் திரும்பும் வழியில் ஒரு கனரக ட்ரக்கோடு மோதி மோசமான விபத்து நேர்ந்துவிட்டது.”

“மை குட்னஸ்…”ராணி அதிர்ந்து போய் பூமாவை பார்த்துக் கொண்டிருக்க, ரிஸீவரில் குரல் கேட்டுக்கொண்டிருந்தது.

“விபத்து நடந்த சம்பவ இடத்திலேயே ஸ்ரீராமும் டாக்ஸி ட்ரைவரும் உடல் நசுங்கி, மிக மோசமான நிலையில் உருத்தெரியாமல் இறந்து போனார்கள். இறந்தது ஸ்ரீராம்தான் என்பதைக் கண்டுபிடிக்கவே போலீஸாருக்குப் பல மணி நேரமாகி விட்டது.”

மறுமுனையில் குரல் சொல்லிக் கொண்டே போக, ராணி திக்பிரமையோடு ரிஸீவரைப் பிடித்துக்கொண்டு நின்றாள்.

# 7

டெல்லிக்கு சற்றே அவுட்டரில் மயூரி அவென்யூவில் இருந்தது மிருதுளாவின் சிறிய பங்களா.

சற்று பழைய பங்களா.

துருப்பிடித்த கேட்டுக்கு முன்பாய் விவேக் காரை நிறுத்த, மிருதுளா இறங்கிப்போய் வானிடி பேக்கிலிருந்து ஒரு சாவியை எடுத்து கேட்டில் தொங்கிக் கொண்டிருந்த பூட்டின் வாய்க்குக் கொடுத்துத் திறந்தாள்.

கேட் எண்ணெய் போடாத குறையை இரைச்சலாய் சொல்லிக்கொண்டே பின்னால் போயிற்று.

ரூபலா விவேக்கின் முதுகை மெல்லத் தொட்டாள்.

“என்னங்க…”

“ம்…”

பங்களாவைப் பார்த்தாலே ஒரு மாதிரியா இருக்கு… இவளை என்னால நம்ப முடியலை. நாம டெல்லி போலீஸுக்கு இன்ஃபார்ம் பண்ணி வந்திருக்கணும்.”

விவேக் புன்னகைத்தான்.

“இந்த மிருதுளா சொல்றது உண்மையா பொய்யான்னு பங்களாவுக்குள்ளே போனதுமே தெரிஞ்சுடும். பார்க்கலாம். இடுப்புல துப்பாக்கி இருக்கு. பயப்படாதே.”

உள்ளேயிருந்தபடி கையசைத்தாள் மிருதுளா.

“காரை போர்டிகோவுக்கு கொண்டு வாங்க ஸார்.”

விவேக் காரை நகர்த்தி போர்டிகோவுக்குக் கொண்டு வந்து நிறுத்தினான்.

மிருதுளா பக்கத்து சுவர்க்குப் போய் சில ஸ்விட்ச்சுகளைத் தட்ட, போர்டிகோவின் சீலிங் பரப்பில் அழுக்கான நாற்பது வாட்ஸ் பல்பு ஒன்றும், பங்களாவின் பக்கவாட்டு சுவரில் சோகையான ட்யூப்லைட் ஒன்றும் உயிர் பிடித்துக் கொண்டு வெளிச்சத்தைக் கொடுத்தன.

ரூபலாவின் பார்வை பயமாய் பங்களாவைச் சுற்றிலும் போக, லேசாய் ஒரு அதிர்ச்சிக்கு உட்பட்டாள்.

பங்களாவைச் சுற்றிலும் வைக்கப்பட்டிருந்த செடி கொடிகள் எல்லாமே கருகிப்போய் தெரிந்தன. சில ரோஜா தொட்டிகள் உடைக்கப்பட்டிருந்தன.

ரூபலா பொறுக்க முடியாமல் கேட்டாள்.

"என்ன இதெல்லாம்...?"

மிருதுளா உதடுகளில் சலிப்பாய் ஒரு புன்னகை உற்பத்தியாயிற்று.

"இதெல்லாம் என் கணவரோட கைங்கர்யம். எனக்கு கார்டனிங்கில் இண்ட்ரஸ்ட். என்னுடைய கணவர்க்கு இண்ட்ரஸ்ட் கிடையாது. ரெண்டு நாளைக்கு முன்னாடி எங்களுக்குள்ளே ஒரு சின்ன வாய்த்தகராறு. தகராறுக்கு காரணம் அவர் குடிக்கிறதுக்காக வெந்நீர் கேட்டார். கொண்டு போய்க் கொடுத்தேன். வாட்டர் ஹாட்டாவே இல்லைன்னு சத்தம் போட்டார். கெட்ட வார்த்தையில் என்னைத் திட்டினார். நானும் பொறுக்க முடியாமே திட்ட, அவர்க்கு என் பேர்ல இருந்த கோபத்தை தீர்த்துக்கிறதுக்காக மறுநாள் காலையில் ஹீட்டரைப் போட்டுக் கொதிக்க கொதிக்க வெந்நீரை பக்கெட்ல கொண்டு போய் எல்லா செடிகளுக்கும் ஊத்திட்டார்."

ரூபலா மறுபடியும் பயமாய் அந்த செடிகளைப் பார்த்தாள்.

எல்லாமே கருகிப்போய் துவண்டு கிடந்தன.

"இப்படியும் ஒரு மனுஷன் இருப்பாரா?"

மிருதுளா பெருமூச்சொன்றை விட்டபடியே ரூபலாவைப் பார்த்தாள்.

"அவர் என்னைப் பொறுத்தவரைக்கும் மனுஷனே கிடையாது. புராண காலத்து அரக்கன். அவராலே எனக்கு எந்த ஓர் ஆபத்து வந்தாலும் தாங்கிக்குவேன். பட்... இந்த தேசத்துக்கு அவரால் ஓர் ஆபத்து வருதுன்னா அதை என்னால் தாங்கிக்க முடியாது. அதைத் தடுத்து நிறுத்த என்ன வழின்னு யோசனை பண்ணிட்டிருக்கும்போதுதான் நீங்க ரெண்டு பேரும் என்னோட பார்வையில் பட்டீங்க... என்னோட கணவர் எது மாதிரியான நிழல் காரியங்களில் ஈடுபட்டிருக்கார்னு எனக்குத் தெரியாது. அதை நீங்கதான் கண்டுபிடிச்சு அவர்க்கே தெரியாமே எராடிகேட் பண்ணணும்."

மிருதுளா பேசிக் கொண்டே போய் வாசல் பக்கக் கதவுக்கு சாவியைக் கொடுத்து தள்ளி, அது உள்ளே போனதும் ஸ்விட்ச்சுகளைப் போட்டாள்.

வீட்டுக்குள் வெளிச்சம் நிரம்பியது.

"வாங்க மிஸ்டர் விவேக்..."

உள்ளே கூட்டிப் போனாள் மிருதுளா. ஹால் அவ்வளவு சுத்தமாக இல்லை. சுவர்களில் பூசியிருந்த டிஸ்டெம்பர் நிறம் மங்கிப் போய்த் தெரிந்தது, ஹாலின் மூலைகளில் ஒட்டடை... கண்ணாடி டீபாயின் மேல் லேசாய் தூசுப் படலம்.

விவேக் கேட்டான்.

“உன் கணவரோட அறை எது...?”

“வாங்க காட்டறேன்...”

ஹாலைக் கடந்து உள்ளே கூட்டிப்போனாள். ரூபலா பொறுக்க முடியாமல் கேட்டாள்.

“வீடு ஏன் சுத்தமாகவே இல்லை...?”

மிருதுளா சிரித்துவிட்டு சொன்னாள். “என்னோட அன்பான கணவர்க்கு வீட்டைச் சுத்தம் பண்ணினா பிடிக்காது. இப்படி தூசியும், ஒட்டடையுமா இருந்தாத்தான் பிடிக்கும்.”

“படிச்ச ஒருத்தர் இப்படி இருப்பாரா?”

“இருக்காரே! அவர் ஒரு விசித்திரமான மனிதர். ஒரு வகையில் பார்த்தா ஸேடிஸ்ட்.”

வீட்டின் கடைசி அறைக்கு வந்ததும் நின்றாள்.

“இதான் ஸார்...! அவரோட இறை. நானே கல்யாணமான நாளிலிருந்து நாலைஞ்சு தடவைதான் இந்த அறைக்குள்ளே போயிருக்கேன்.”

“வெளியூர்க்குப் போகும்போது கதவை பூட்டிட்டுப் போகமாட்டாரா...?”

“மாட்டார். பட் அவர்க்குத் தெரியாமே நான் அறைக்குள்ளே போனா வெளியூரிலிருந்து அவர் வந்ததும் நான் ரூமுக்குள்ளே போனதை அவர் சுலபமா கண்டுபிடிச்சிடுவார்.”

“எப்படி...?”

“அதான் எனக்குத் தெரியாது...”

விவேக் அந்த அறைக்கதவின் மேல் கையை வைத்து மெல்லத் திறந்தான்.

அது சத்தம் இல்லாமல் உள்ளே போயிற்று.

இருட்டு.

மிருதுளா உள்ளே நுழைந்து ஸ்விட்சைத் தேய்த்தாள். ட்யூப்லைட் ஒளிர்ந்தது.

சுவர் போட்டோவில் அந்த வழுக்கைத் தலை மனிதர் லாமினேஷனில் முறைத்தார். முகத்தில் புன்னகை 100 சகவிகிதம் மிஸ்ஸிங். நீளமான நாசிக்குக் கீழே நான்கைந்து ஈக்கள் உட்கார்ந்த தினுசில் மீசை.

“இவர்...?” விவேக் குரலை இழுக்க, மிருதுளா புன்னகைத்தாள்.

“என்னோட கணவர்...”

விவேக் போட்டோவினின்றும் பார்வையை நகர்த்தினான்.

அறை முழுக்க புத்தக செல்ஃப்கள். உள்ளே தலை சைஸுக்குப் புத்தகங்கள். பெரும்பாலானவை வெளிநாட்டு புத்தகங்கள்.

விவேக் ஒரு செல்ஃப்பைத் திறந்து ஒரு புத்தகத்தை எடுத்து தலைப்பைப் பார்த்தான்.

'க்ளோபல் ஆர்காணிஸம்ஸ்'

இன்னொரு புத்தகத்தை எடுத்தான்.

'மேனிஃபுலேஷன் ஆஃப் லைஃப்'

மூன்றாவதாய் ஒரு புத்தகம்.

'பயோகெமிஸ்ட்ரி இன் எ மேன்'

நான்காவது புத்தகம்.

'ஃபிப்டி பர்செண்ட் வொர்ல்ட்'

விவேக் புத்தக செல்ஃபை சாத்திவிட்டு அறையின் மூலையில் இருந்த மேஜை நாற்காலியை நோக்கிப் போனான்.

"மிருதுளா!"

"ஸார்..."

"உங்க கணவர் உட்கார்ந்து படிக்கிற இடம் இதுதானா?"

"ஆமா ஸார்..."

விவேக் அந்த மேஜையை நெருங்கி அதன் ட்ராயரை இழுத்துப் பார்த்தான்.

உள்ளே -

கற்றையாய் கம்ப்யூட்டர் காகிதங்கள். விவேக் எடுத்துப் படித்துப் பார்த்தான்.

புரியாத வாசகங்கள்.

மிருதுளா சற்றே பதட்டமாய் குரல் கொடுத்தாள். "ஸார்... என்னோட கணவர் எந்த நிமிஷமும் ஜான்ஸியிலிருந்து வந்துடலாம். நீங்க உங்க சோதனையை கொஞ்சம் சீக்கிரமா முடிச்சுட்டா பரவாயில்லை. அவர் திடீர்னு வந்துட்டா அந்த சீனை என்னால ஃபேஸ் பண்ண முடியாது."

மிருதுளா சொல்லிக் கொண்டிருக்கும்போதே ஷெல்ப்புக்குப் பக்கத்தில் இருந்த டெலிபோன் முனகிமுனகிக் கூப்பிட்டது. கண்களில் கலவரப்பட்டுக் கொண்டு போய் ரிஸீவரை எடுத்து காதுக்குக் கொடுத்தாள் மிருதுளா.

“ஹலோ…!”

மறுமுனையில் ஒரு பெண் குரல் கேட்டது.

“மிஸ்டர் கோவிந்த் வர்மா ப்ளீஸ்…?”

“நீங்க யாரு?”

“என் பேர் துர்கா. டெல்லி யூனிவர்ஸிட்டியில் பிலாஸபி ப்ரொபசர். மிஸ்டர் கோவிந்த் வர்மாகிட்டே கொஞ்சம் பேசணும். வில் யூ கனெக்ட் ஹிம்?”

“ஸாரி…! அவர் வீட்ல இல்லை. அவுட் ஆஃப் ஸ்டேஷன்…”

“எப்போ வருவார்?”

“நோ… ஐடியா… அவர் வந்ததும் உங்களுக்கு போன் பண்ணச் சொல்றேன். போன் நெம்பர் குடுங்க.”

“வேண்டாம்… நாளைக்குக் காலையில் நானே அவர்க்குப் போன் பண்றேன்.”

“டொக்…”

ரிஸீவர் வைக்கப்பட்டுவிட, மிருதுளாவும், ரிஸீவரை வைத்துவிட்டு விவேக்கிடம் திரும்பினாள். விவேக் கேட்டான்.

“போன்ல யாரு?”

“அவரோட கொலீக்… பேர் துர்கா. பிலாஸபி டிபார்ட்மெண்ட்.”

“அடிக்கடி போன் பண்ணுவாளா அந்த துர்கா?”

“எனக்குத் தெரியாது. ரொம்ப நாளைக்கப்புறம் இன்னிக்குத்தான் அவரோட போனையே நான் தொடறேன்.”

“சரி… அதென்ன பீரோ…?”அறையின் இடது பக்க மூலையில் இருந்த ஒரு பெரிய பீரோவை சுட்டிக் காட்டிக் கேட்டான் விவேக்.

“அதுவும் அவர் உபயோகப்படுத்தற பீரோதான். உள்ளே என்ன இருக்குன்னு எனக்குத் தெரியாது…”

“பீரோவுக்கு சாவி…?”

“சாவியும் அவர்கிட்டதான் இருக்கும்.”

விவேக் பீரோவுக்குப் பக்கத்தில் போய் அதன் கைப்பிடியைப் பிடித்து இழுத்துப் பார்த்தான்.

“ப்ளக்...”

கைப்பிடி கீழே இறங்கியது.

“அட! பீரோ லாக் ஆகலை...”

“லாக் பண்ண மறந்துட்டார் போலிருக்கு.”

விவேக் பீரோவின் கைப்பிடியை இறுகப் பற்றிக் கொண்டு இழுத்தான்.

கதவு விரியத் திறந்து கொள்ள -

உள்ளே திணித்து வைக்கப்பட்டிருந்த ஒரு உடல் பீரோ திறந்த வேகத்தில் தன்னிச்சையாய் சரிந்தது.

விவேக் பின்வாங்கி -

கீழே சரிந்து விழுந்த உடலின் முகத்தைப் பார்த்தான்.

கோவிந்த் வர்மா.

# 8

அமெரிக்கன் எம்பஸி.

ராணி ரிசப்ஷனில் காத்திருந்தாள். மனசு முழுக்கக் கவலை.

எம்பஸியின் ரிசப்ஷனிஸ்ட் பெண் கண்ணாடி தடுப்பினின்றும் எட்டிப் பார்த்து "மிஸ் ராணி" என்று கூப்பிட எழுந்து போனாள்.

"நீங்கள் மிஸ்டர் ஆன்டனியைப் பார்க்க வந்திருக்கிறீர்கள், இல்லையா...?"

"ஆமாம்."

"நேரே போய் வலது பக்கம் திரும்புங்கள். எதிர்ப்படுகிற முதல் அறை அவருடைய அறைதான். உங்களுக்காக அவர் காத்துக் கொண்டிருக்கிறார்."

"நன்றி...!"

ராணி ரிசப்ஷனிஸ்ட் சொன்ன வழியில் போய் 'ஆன்டனி' என்று எழுதப்பட்ட ரோஸ்வுட் கதவுக்கு முன்பாய் போய் நின்றாள். கதவை மெல்லத் தட்டினாள்.

உள்ளேயிருந்து குரல் வந்தது.

"ப்ளீஸ்... கெட் இன்..."

கதவைத் தள்ளி ஏ.ஸி காற்றை சுவாசித்துக்கொண்டு உள்ளே நுழைந்த ராணியை ஆன்டனி என்கிற அந்த முப்பது வயது இளைஞன் புன்னகையோடு வரவேற்று எதிரில் இருந்த நாற்காலியைக் காட்டினான்.

"உட்கார் ராணி..."

ராணி உட்கார்ந்தாள்.

ஆன்டனி கேட்டான். "உன்னோட ஃப்ரெண்ட் பூமா இப்போ எப்படியிருக்கா?"

"வயித்துல குழந்தையோட இப்போ அவ கோமா ஸ்டேஜுக்கே போயிட்டா... ரெண்டு நாளைக்குள்ள அவளுக்கு சுயஉணர்வு திரும்பியாகணும். இல்லேன்னா வயித்துல இருக்கற குழந்தைக்கு ஆபத்துன்னு டாக்டர்கள் சொல்லிட்டாங்க! உங்களுக்கு கலிபோர்னியாவிலிருந்து நியூஸ் வந்ததா?"

"நீ எனக்கு போன் பண்ணி விஷயத்தைச் சொன்னதுமே நான் அது சம்பந்தமான என்கொய்ரியை ஆரம்பிச்சுட்டேன். எனக்குக் கிடைச்ச நம்பகமான தகவல்படி கார் விபத்துல இறந்து போனது ஸ்ரீராம்தான். நோ டவுட்..."

“அது ஸ்ரீராமாக இருக்க வாய்ப்பே இல்லை, மிஸ்டர் ஆன்டனி. அவரை நேத்திக்குக் காலையில் இதே டில்லியில் பார்த்தேன்...”

ஆன்டனி புன்னகைத்தான்.

“நீ சொன்ன இதே சந்தேகத்தை கலிபோர்னியா ஃப்யூச்சர் க்ளான்ஸ் பீப்பிளுக்கும் சொன்னேன். அவங்க ‘ஹைலி இடியாடிக்’னு ஒரே வார்த்தையில் சொல்லிட்டாங்க.

“நோ... ஆன்டனி! அது இடியாடிக் கிடையாது. கார் ஆக்ஸிடெண்ட்டில் இறந்தது நிச்சமாய் ஸ்ரீராம் கிடையாது. பாடியை டெல்லிக்குக் கொண்டுவந்து போஸ்ட்மார்ட்டம் பண்ணிப் பார்த்தா உண்மை தெரிஞ்சுடும்.

“ஸ்ரீராமோட பாடியைக் கொண்டு வர முடியாத அளவுக்கு உடல் ஆக்ஸிடெண்ட்ல சிதிலமாயிருக்கு. நசுங்கி கூழாகிப் போன பாடியை வெச்சுக்கிட்டு எப்படி போஸ்ட்மார்ட்டம் பண்ண முடியும்?”

“மிஸ்டர் ஆன்டனி...! நீங்க எங்களுக்கு ஃபேமிலி ஃப்ரண்ட். நீங்க ஸ்ரீராம் விஷயத்தில் கொஞ்சம் உத்யோகபூர்வமா பேசறதை விட்டுட்டு என்னோட கோணத்துல கொஞ்சம் திங்க் பண்ணிப் பார்த்தாப் பரவாயில்லை.”

ஆன்டனி தோள்களைக் குலுக்கிக் கொண்டான் “இட்ஸ் ஆல்ரைட்... சொல்லு...”

“ஸ்ரீராம் சாகலை...”

“அப்படின்னா கலிபோர்னியா ஃப்யூச்சர் க்ளான்ஸ் பீப்பிள் சொல்றது...”

“பொய்...”

“அங்கே செத்துப் போனதா சொல்றது?”

“வேற யாரோ...!”

“அதனால அவங்களுக்கு என்ன லாபம்?”

“ஏதோ ஒரு லாபம் இருக்கப் போய்தான் இப்படியொரு நாடகத்தை அரங்கேற்றம் பண்ணியிருக்காங்க...”

“நேத்துக் காலையில் பத்து மணி சுமார்க்கு டெல்லியில் எங்கே வெச்சு ஸ்ரீராமைப் பார்த்தே...?”

“அக்பர் ரோட்டு கார்னர்ல, ஒரு டிபார்ட்மெண்டல் ஸ்டோர்ஸுக்கு முன்னாடி...”

“ஆர் யூ ஷ்யூர்?”

“ஹண்ட்ரண்ட் பர்ஸண்ட் ஷ்யூர்.”

“ஸ்ரீராம் உனக்கு நல்ல பரிச்சயம்தானே?”

“பரிச்சயம்தான்.”

“நீ ஏன் பேசலை?”

“நான் ஒரு ‘ஹலோ’ சொல்லி பேசறதுக்கு முந்தி அவர் வேகமா யார்கூடவோ பேசிட்டே கார்ல போய் ஏறிக்கிட்டார்.”

“அந்த நபர் யார்னு தெரியுமா?”

“நான் சரியா அவரைப் பார்க்கலை...”

“சரி... அவங்க கார்லதானே ஏறிப் போனாங்க?”

“ஆமா...”

“எந்தக் கார்?”

ராணி யோசித்தாள். சில விநாடி யோசனைக்குப் பின் சொன்னாள். “ஒயிட் காண்டஸா..”

“நெம்பர் நோட் பண்ணியா?”

“இல்லை... பார்க்க முடியலை. கார் பார்க்கிங்கிலிருந்து ரிவர்ஸ் எடுக்கப்பட்ட கார் கண்ணிமைக்கிற நேரத்துக்குள்ளே வேகமா போயிருச்சு..”

“கார்லே வேற ஏதாவது அடையாளம்?”

“எதுவும் தட்டுப்படலை, ஒயிட் காண்டஸா, அது மட்டும்தான் இப்போ ஞாபகத்துக்கு வருது.”

“இவ்வளவு தூரம் நீ சொல்றதுனால இந்தப் பிரச்னையில் நான் இன்ட்ரஸ்ட் எடுத்துக்கறேன்” சொன்ன ஆன்டனி மேஜை பல வர்ணங்களில் இருந்த ஒரு டெலிபோனைத் தொட்டு எடுத்து காதுக்கு பொருத்திக் கொண்டு டயல் கோர் பட்டன்களைத் தட்டினான். மறுமுனையில் ரிங் போய் ரிஸீவர் எடுக்கப்பட்டதும் கேட்டான்.

“ஹோட்டல் ப்ருத்விராஜ் இண்டர்நேஷனல்?”

“எஸ்...” ரிசப்ஷனிஸ்ட் குரல்.

“ரூம் நெம்பர் 599-ல் மிஸ்டர் விவேக் தங்கியிருப்பார், வில் யூ கனெக்ட் மீ..?”

“எஸ் ஸார்..”

# 9

மிருதுளா அலறி பின்வாங்க, ரூபலா அதிர்ச்சியில் உறைந்து போய் சுவர்க்கு சாய, விவேக் கீழே சரிந்து மல்லாந்து விழுந்திருந்த கோவிந்த் வர்மாவின் உடலுக்குப் பக்கத்தில் குனிந்தான்.

இடதுபக்க மார்பில் அணிந்து இருந்த சட்டையையும் மீறிக்கொண்டு உறைந்துபோன ஒரு ரத்தகாயம் தெரிந்தது. உடம்பின் மற்ற பாகங்களில் ஒரு சின்ன ரத்த தீற்றல்கூட இல்லை.

திகைத்துப்போய் அழக்கூட தோன்றாமல் கணவனின் உடலையே வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்த மிருதுளாவை ஏறிட்டான் விவேக்.

“உன்னோட கணவர் ஜான்ஸி போயிருக்கிறதா சொன்னே.. பட் இப்படி பீரோவுக்குள்ளே நின்னுக்கிட்டே தூங்கிட்டிருந்திருக்காரே எப்படி?”

மிருதுளாவின் கண்களில் இப்போது நீர் எட்டிப் பார்த்தது. உதடுகள் இரண்டும் டெலிபிரிண்டர் தாள் மாதிரி துடித்தது.

“எ..எ..எனக்கு.. இது. இது.. எ. எப்படி தெரியலை..”

“காம்பௌண்ட் கேட் பூட்டியிருக்கு. வாசல் கதவும் பூட்டியிருந்தது. பூட்டின வீட்டுக்குள்ளே உன்னோட கணவர் கொலை செய்யப்பட்டிருக்கார். உறைந்து போயிருக்கிற இந்த ரத்தத்தைப் பார்க்கும்போது சம்பவம் நடந்து பனிரெண்டு மணி நேரமாகியிருக்கும் போலிருக்கே.”

மிருதுளாவின் அழுகை பெரிதாயிற்று.

“எ.. எனக்கு.. ஒண்ணுமே புரியலை.. ஸார்.”

“இப்ப நான் கேட்கப் போற கேள்விக்கு யோசனை பண்ணி பதில் சொல்லு... உன்னோட கணவர் காலையில எத்தனை மணிக்கு வெளியே கிளம்பினார்?”

“ஆறு மணிக்கு..”

“அவர் ஜான்ஸிக்கு போறதா உன்கிட்ட சொன்னாரா..”

“இல்லை..”

“பின்னே எப்படி அவர் ஜான்ஸிக்குத்தான் போறார்னு உனக்குத் தெரியும்?”

“போன்ல யார்கிட்டயோ சொல்லிட்டிருந்தார்.”

“யார்கிட்டயோன்னா? யாரு?”

“எனக்குத் தெரியாது..”

“சரி.. உன் கணவர் காலையில புறப்பட்டுப் போனதை நீ பார்த்தியா?”

“பார்த்தேன்...”

“எதுல போனார்?”

“ரயில்வே ஸ்டேனுக்குப் போகறதுக்காகத் தெருமுனைக்குப் போய் ஓர் ஆட்டோ பிடிக்கறதைப் பார்த்தேன்..”

“சரி... வீட்ல இருக்காமே எங்கே போனே?”

“அவர் எப்போ ஜான்ஸி புறப்பட்டுப் போனாலும் சரி, நானும் வீட்ல இருக்க பிடிக்காமே என்னோட ஃப்ரண்ட்ஸ்களைப் பார்க்கக் கிளம்பிருவேன். சாயந்தரம் ஆறு ஆறரை மணிக்கு மேல்தான் திரும்பி வருவேன்..”

“இன்னிக்குக் காலையில எத்தனை மணிக்கு நீ வீட்டை விட்டு கிளம்பினே?”

“காலையில பத்து மணி சுமார்க்கு... கிளம்பி ஒரு ஃப்ரண்டைப் பார்க்கப் போனேன். மத்தியானம் ஒரு மணி வரை அவ வீட்லயே இருந்துட்டு அங்கேயே சாப்பிட்டுட்டு மத்தியானம் சாணக்யா தியேட்டர்ல படம் பார்த்துட்டு சாயந்திர ரீகல் சர்க்கிள் பக்கமா வரும்போதுதான் உங்களைப் பார்த்தேன். நீங்க விவேக்கா இல்லையான்னு தெரிஞ்சுக்கிறதுக்காக ஃபாலோ பண்ணினேன். நீங்க விவேக்காயிருந்தா உங்ககிட்ட என் கணவரோட நிழலான காரியங்களைப் பத்தி சொல்லலாம்னு நினைச்சேன். நீங்க விவேக்தான்னு தெரிஞ்சதும் சந்தோஷப்பட்டு என் கணவரைப் பத்தின எல்லா விபரங்களையும் சொல்லி வீட்டுக்கும் கூட்டிட்டு வந்தேன். ஆனா வீட்ல இப்படியொரு விபரீதத்தை நான் எதிர்பார்க்கலை. பூட்டின வீட்டுக்குள்ளே இவர் எப்படி உள்ளே வந்தார்...? இவரை இந்த நிலைமைக்கு ஆளாக்கினது யார்? இதெல்லாம் எனக்கு குழப்பமாவே இருக்கு...?”

விவேக் கேட்டான் :

“ஜான்ஸிக்கு போறேன்னு சொன்னவர் வீட்டுக்கு ஏன் வந்தார்...? இவர்கிட்ட மாற்றுச் சாவி ஏதாவது இருந்ததா...?”

“இல்லை... இந்த வீட்டுக்கு ஒரே ஒரு கீசெட்தான். ட்யூப்ளிகேட் கிடையாது...”

“அப்படீன்னா... நீ வீட்டை பூட்டிக்கிட்டு போகும்போதே உன்னோட கணவர் இந்த பீரோவுக்குள்ளே கொலை செய்யப்பட்டு திணிக்கப்பட்டிருக்கணும்.”

“அதுக்கு சாத்தியமே கிடையாது. அவர்தான் ஆறு மணிக்கே கிளம்பி வெளியே போயிட்டாரே...? அப்படியே அவர் திரும்பி வந்திருந்தாலும் எனக்குத் தெரியாமே போயிருக்காதே!”

“அவர் ரயில்வே ஸ்டேஷனுக்குப் போக ஆட்டோ ஏறினதை நீ பார்த்தியா?”

“ம்... பார்த்தேன்...”

அவர் எந்த ஆட்டோவில் ஏறினார்னு தெரியுமா?”

“தெரியாது...”

விவேக் அங்கிருந்த டெலிபோனைத் தொட்டு ரிஸீவரை எடுத்துக் கொண்டு டயலில் எண்களைத் தட்டி டெல்லி போலீஸ் கண்ட்ரோல் ரூமைத் தொடர்பு கொண்டு கோவிந்த் வர்மாவின் மரணத்தைப் பற்றிச் சொல்லி விட்டு ரிஸீவரை வைத்தபடி மிருதுளாவிடம் கேட்டான்.

“அந்த ஆட்டோ ஸ்டாண்ட் இங்கிருந்து எவ்வளவு தூரம்...?”

“அரை கிலோ மீட்டர் தூரம் இருக்கும்...”

விவேக் ரூபலாவிடம் திரும்பினான். “ரூபி! டெல்லி போலீஸ் இன்னும் பத்து நிமிஷத்துக்குள்ளே இங்கே வந்து போலீஸ் சம்பந்தப்பட்ட ஃபார்மாலிடீஸை ஆரம்பிச்சுருவாங்க. அதுக்குள்ளே நான் அந்த ஆட்டோ ஸ்டாண்டுக்குப் போய் ஒரு என்கொயரி பண்ணிட்டு வந்துடறேன்...”

ரூபலா கோவிந்த் வர்மாவின் உடலை பயமாய் பார்த்துக் கொண்டிருக்கும்போதே விவேக் வீட்டைவிட்டு வெளியேறி வாசலுக்குப் போயிருந்தான்.

# 10

ஆன்டனி டெலிபோனில் காத்திருக்க, ஹோட்டல் ரிசப்ஷனிஸ்ட் பேசினாள்.

“ஸாரி ஸார்! மிஸ்டர் விவேக் அவருடைய அறையில் இல்லை. வெளியே போயிருக்கிறார்.”

“எப்போது போனார்...?”

“தெரியவில்லை ஸார், நான் ட்யூட்டிக்கு வந்து பத்து நிமிடம்தான் ஆகிறது...”

“இட்ஸ் ஆல்ரைட், வெளியே போயிருக்கிற மிஸ்டர் விவேக் எப்போது திரும்பி வந்தாலும் எனக்கு டெலிபோன் பண்ணச் சொல்லவும்...”

“உங்கள் டெலிபோன் நெம்பர் ஸார்...”

ஆன்டனி தன்னுடைய டெலிபோன் எண்களைச் சொல்லி ரிஸீவரை வைத்துவிட்டு எதிரில் உட்கார்ந்திருந்த ராணியைப் பார்த்தான்.

“ராணி! ஸ்ரீராம் இப்போது உயிரோடு இருக்கிறாரா இல்லையா என்பதுதான் உன்னுடைய பிரச்னை இல்லையா?”

“ஆமா...”

“மெட்ராஸ் க்ரைம் ப்ராஞ்ச் ஆபீஸர் விவேக் இப்போ டெல்லியில் இருக்கார். இதுமாதிரியான காம்ப்ளிகேட்டட் கேஸ்களையெல்லாம் அவர் நல்ல முறையில் டீல் பண்ணுவார்.”

ராணியும் மலர்ந்தாள்.

“மிஸ்டர் விவேக்கைப் பற்றி நானும் கேள்விப்பட்டிருக்கேன் ஸார்... அவர் இந்த ஸ்ரீராம் கேஸை டீல் பண்ணினா நிச்சயம் உண்மை வெளியே வரும்... மிஸ்டர் விவேக் உங்கள காண்டாக்ட் பண்ணிதும் எனக்கு இன்பர்மேஷன் கொடுங்க. நானே அவரை வந்து மீட் பண்றேன்.”

“ஷ்யூர்... ஐ வில் இன்ஃபார்ம் யூ.”

ராணி எழுந்து விடைபெற்றுக்கொண்டு போனதும் ஆன்டனி ஒரு ஃபைலை எடுத்து வைத்துக்கொண்டு தன் வேலையைக் கவனிக்க ஆரம்பித்தான்.

ஒரு ஐந்து நிமிஷம் கரைந்திருந்தபோது டெலிபோன் கூப்பிட்டது.

ரிஸீவரை எடுத்துப் பேசினான்.

“எஸ்…”

“மிஸ்டர் ஆன்டனி…?” ஆண் குரல் கேட்டது.

“எஸ்… ஹோல்டிங்…”

“ஆன்டனி உங்களுக்குக் கல்யாணமாகி வீட்ல அழகான பொண்டாட்டியும், அஞ்சு வயதுல ஒரு பெண் குழந்தையும் இருக்கிறதா கேள்விப்பட்டேன். உண்மையா?”

“நீங்க யார்ன்னு சொல்லவேயில்லையே…?”

“வேண்டியது இல்லை. ஒரு விஷயத்தை மட்டும் நீங்க தெரிஞ்சுக்கிட்டா போதும்…”

“என்ன…?”

“உங்க பொண்டாட்டிக்கு புருஷனா, குழந்தைக்கு அப்பாவா இருக்க ஆசைப்பட்டீங்கன்னா எம்பஸியில் என்ன வேலை இருக்கோ அதை மட்டும் பாருங்க… மத்த வெளி விஷயங்கள்ல மூக்கை நீட்டறது வேண்டாம்…”

“நீ… என்ன சொல்றே…?”

“ராணி வந்து சொல்லிட்டுப் போன ஸ்ரீராம் சம்பந்தப்பட்ட விஷயத்தை நீங்க கிளறிப் பார்க்க முயற்சி செய்யக் கூடாது. அப்படி ஏதாவது முயற்சி பண்ணினா உங்க வொய்ஃப், உங்க குழந்தை போஸ்ட்மார்ட்டம் ரிப்போர்ட்களை வாங்கி ஃபைல் பண்ணிக்க வேண்டிய நிலைமை வரும். உங்க வேலையை மட்டும் பார்த்துக்கிட்டு ஒழுங்கா இருந்தா போதும்… இது சினிமாவில் வர்ற வில்லன் மாதிரியான மிரட்டல் கிடையாது. என்னோட பேச்சை கேட்கலைன்னா, நாளைக்கு நடக்கப் போகிறது நிஜம்…”

“டொக்…”

ரிஸீவர் வைக்கப்பட்டு விட்டது.

# 11

விவேக் பத்து நிமிஷ நடைபோட்டு தெருமுனைக்குப் போய்ச் சேர்ந்தபோது ஏழெட்டு ஆட்டோக்கள் வரிசையில் தெரிந்தன. சர்தார்ஜி ட்ரைவர்கள் பக்கத்தில் இருந்த 'கரம் சாயா' கடையில் கைகளில் டீ டம்ளர்களை வைத்துக் கொண்டு ஹிந்தியில் உரக்கப் பேசிச் சிரித்துக் கொண்டிருந்தார்கள்.

விவேக் அவர்களை நோக்கி, அவர்களில் ஒருவன் "கிதர் ஜானே ஹை ஸாப்?" என்று கேட்டுக்கொண்டே பக்கத்தில் வந்தான்.

விவேக் அவனைக் கையமர்த்தி, தன் உத்யோக அட்டையைக் காட்டி போலீஸ் என்றதும், மற்ற டிரைவர்கள் திகைப்பாய் ஒருத்தரையொருத்தர் பார்த்துக் கொண்டார்கள்.

ஒருவன் கேட்டான்.

"ஆப்கோ க்யா சாஹியே ஸாப்...?"

விவேக்கும் ஹிந்தியிலேயே பேச ஆரம்பித்தான். "இதே தெருவில் குடியிருக்கும் புரொபசர் கோவிந்த் வர்மாவை உங்களுக்குத் தெரியுமா?"

"தெரியும் ஸார்..."

"இன்னிக்குக் காலையில் ஆறு மணி சுமார்க்கு அவர் ரயில்வே ஸ்டேஷன் போறதுக்காக இங்கே வந்து ஆட்டோ ஏறியிருக்கார். அவர் எந்த ஆட்டோவில் ஏறிப் போனார்ன்னு தெரியுமா?"

ஒரு சிங் முன்னால் வந்தான்.

"என்னோட ஆட்டோவில்தான் ஏறினார் ஸாப்."

விவேக்கின் பார்வை அவன்மேல் நிலைத்தது.

"உன்னோட பேர் என்ன?"

"கேதார் சிங் ஸாப்..."

"கோவிந்த் வர்மா ஆட்டோவில் தனியாத்தான் பயணம் பண்ணினாரா... இல்லை, கூட யாரவாது இருந்தாங்களா?"

"அவர் தனியாகத்தான் வந்தார்..."

"ரயில்வே ஸ்டேஷனில்தானே அவரைக் கொண்டு போய் ட்ராப் பண்ணினே...?"

“ஆமாம் ஸாப்...”

“வழியில வண்டிய நிறுத்தி வேற யார்கிட்டயாவது பேசினாரா...?”

“இல்ல ஸாப்! வண்டியை நேரா ரயில்வே ஸ்டேஷனுக்குத்தான் விடச் சொன்னார். வழியில் எங்கேயும் இறங்கலை.”

“கோவிந்த் வர்மா ஆட்டோவிலிருந்த இறங்கி ரயில்வே ஸ்டேஷனுக்குள்ளே போறதை நீ பார்த்தியா?”

“பார்க்கலை ஸாப்... ஸ்டேஷன் வாசல்ல விட்டுட்டு நான் உடனே திரும்பிட்டேன்...?” கேதார் சிங் சொல்லிக் கொண்டிருக்கும்போதே இன்னொரு டிரைவர் குறுக்கிட்டான்.

“ஸார்... பதினஞ்சு நாளைக்கு முன்னாடி கோவிந்த் வர்மா என்னோட ஆட்டோவில் ஏறி ரயில்வே ஸ்டேஷனுக்குப் போனார். ஆட்டோ சார்ஜ் கொடுக்க சில்லறை இல்லாததினால என்னை ஸ்டேஷனுக்குள்ளே கூட்டிட்டுப் போய் புக்ஸ்டால் வெச்சிருந்த அவரோட ப்ரண்ட்கிட்டயிருந்து எனக்கு பணம் வாங்கிக் கொடுத்தார்.”

“அந்த புக்ஸ்டால் பேர் என்ன?”

“பேரெல்லாம் தெரியாது ஸாப். டிக்கெட், புக்கிங் ஆபீஸுக்குப் பக்கத்துல இருக்கிற ஒரு புக் ஸ்டால்.”

ஆட்டோ டிரைவர் சொன்னதை மனதில் வாங்கிக் கொண்டு கோவிந்த் வர்மாவின் வீட்டை நோக்கி மறுபடியும் நடக்க ஆரம்பித்தான் விவேக்.

வீட்டு வாசலில் -

இப்போது இரண்டு போலீஸ் ஜீப்கள் நின்றிருக்க விவேக் உள்ளே போனான்.

போலீஸ் யூனிஃபார்ம்கள் பரவியிருந்தன. விவேக்கை பார்த்ததும் அந்த ஏரியா பீட் இன்ஸ்பெக்டர் வேகவேகமாய் வந்து சல்யூட்டோடு எதிர்கொண்டார்.

விவேக் அந்த இன்ஸ்பெக்டரின் சட்டைப் பையில் குத்தியிருந்த நேம் பேட்ஜை படித்துவிட்டு, “மிஸ்டர் குல்கர்னி” என்றான்.

“ஸார்...”

“பாடியை சீஸ் பண்ணி பி.எம்-க்கு அனுப்புங்க, பாடி இங்கிருந்து போனதுமே வீட்டைப் பூட்டி சீல் வையுங்க. நாளைக்கு திரும்ப வந்து வீட்டை தரோவா செக் பண்ண வேண்டியிருக்கு...”

“எஸ் ஸார்...”

“கோவிந்த் வர்மாவோட ஒய்ஃப் மிஸஸ் மிருதுளாவுக்கு செக்யூரிட்டி கொடுங்க. அவங்ககிட்டேயும் நிறைய விசாரணை பண்ண வேண்டியிருக்கு...”

“எஸ் ஸார்…”

“போலீஸ் ஃபார்மாலிடீஸைக் கண்டினியூ பண்ணுங்க. இந்தக் கேஸ் விஷயமா உடனடியா ஒருத்தரை என்கொயரி பண்ண வேண்டியிருக்கு. இஃப் எனி அர்ஜன்ஸி… ப்ளீஸ் காண்டாக்ட் மீ…”

“எஸ் ஸார்…”

விவேக் ரூபலா அழைத்துக் கொண்டு வாசலில் நின்றிருந்த கார்க்கு வந்தான்.

கார் நகர்ந்தபோது ரூபலா கேட்டாள். “என்னங்க… இப்ப நாம ஹோட்டலுக்குத்தானே போறோம்…?”

“இல்ல..”

“பின்னே…?”

“ரயில்வே ஸ்டேஷனுக்கு…”

“எதுக்கு?”

“ஒரு என்கொயரி அங்கே பாக்கியிருக்கு…”

“என்னங்க இது… டெல்லிக்கு வந்து இன்னும் ரெண்டு நாள்கூட ஆகலை… அதுக்குள்ளே இவ்வளவு பெரிய பிரச்னை. அந்த மிருதுளாவை நம்பாதீங்க. அவகிட்ட என்னமோ தப்பு இருக்கு.”

“என்ன தப்பு…?”

“அவ கேரக்டர் சரியில்லை. அவளுக்கும் வேறு யார்க்குமாவது இல்லீகல் காண்டாக்ட் இருந்து அதன் காரணமாகவும் இந்தக் கொலை நடந்து இருக்கலாம்….”

“அப்படி இருந்திருந்தா மிருதுளா என்னை வலிய மீட் பண்ணி அவ வீட்டுக்குக் கூட்டிட்டுப் போயிருக்க மாட்டா…”

“நாளைக்கு நம்ம மேல போலீஸ் சந்தேகப்படக் கூடாதுங்கிறதுக்காக அவ நம்ம ரெண்டு பேரையும் வலிய மீட் பண்ணி வீட்டுக்குக் கூட்டிட்டுப் போயிருக்கலாமே…?”

“நீ நினைக்கிறது தப்பு ரூபி… என்னைப் பொறுத்தவரைக்கும் மிருதுளா ஒரு ஹார்ம்லெஸ் லேடி. தன்னோட கணவர் கோவிந்த் வர்மா தேச நலனுக்கு விரோதமா ஏதோ காரியங்கள் பண்றார்னு அவ மனசுக்குள் பட்டிருக்கு. அதை நேரிடையா போலீஸ்ல சொல்லவும் பயம், அந்த நேரத்துல கணவரோட ஆக்டிவிட்டீஸுக்கும் முட்டுக்கட்டை போடணும். இந்தக் குழப்பத்துலதான் மிருதுளா என்னோட உதவியை நாடியிருக்கா… பட், எதிரிகள் கொஞ்சம் வேகமா செயல்பட்டிருக்காங்க, அதாவது கோவிந்த் வர்மாவையே இல்லாமே பண்ணியிருக்காங்க…”

“அதெப்படீங்க... பூட்டின வீட்டுக்குள்ளே கோவிந்த் வர்மா இறந்து கிடக்கார். சாவிக்கொத்து மிருதுளாகிட்ட இருக்கு.”

விவேக் புன்னகைத்தான்.

“இந்தஇரண்டாயிரத்து ஒண்ணுல லாக், சாவிக்கொத்து இதெல்லாம் ஒரு பிரமாதமே கிடையாது. எதிரிகள் மாற்றுச் சாவிகளை உபயோகப்படுத்தியிருக்கலாம்...”

“இன்னிக்கு நாம ஹோட்டலை விட்டுப் புறப்பட்டப்ப நேரமே சரியில்லை. பாலிகஞ்ச் மார்க்கெட்ல நிறைய ஷாப்பிங் பண்ணணும்ன்னு நினைச்சுட்டிருந்தேன். அந்தனையும் வீண்...”

“இதுக்குத்தான் ஒரு போலீஸ் ஆபீஸரை கல்யாணம் பண்ணிக்கக்கூடாதுன்னு சொல்றது...”

விவேக் சொல்லி சிரித்துக் கொண்டிருக்கும்போதே டெல்லி ரயில்வே ஸ்டேஷன் வெளிச்சத்தோடு வந்தது.

ஸ்டேஷன் கட்டிடம் பூராவும் ஒரு கல்யாண பெண்ணின் உடம்பில் இருக்கும் நகைகளைப் போல நியான் விளம்பரங்கள் வண்ணமாய் மின்னியது.

விவேக் காரை ஸ்டேஷனின் முகப்பில் இருந்த பார்க்கில் ஓரம் கட்டிவிட்டு ரூபலாவோடு ஸ்டேஷனுக்குள் நுழைந்தான்.

ஸ்டேஷன் முழுக்க ஒரே இரைச்சல். புறப்படும் ரயில்களைப் பற்றிய அறிவிப்புகள், பெட்டி படுக்கைகளோடு ஓடும் பயணிகள், உருளும் ட்ராலி வண்டிகள்.

விவேக் டிக்கெட் புக்கிங் கௌண்டர் பக்கம் போய் புத்தக ஸ்டாலைத் தேடினான்.

கிடைத்தது.

‘ஆப் கா புக் ஸ்டால்.’

எல்லா மொழிகளிலும் புத்தகங்கள் காய்த்துக் தொங்கின. ஸ்டேஷனுக்கு முன்பாய் நின்று நான்கைந்து பேர் புத்தகங்களைப் புரட்டி பார்த்துக் கொண்டிருக்க, விவேக் கடைக்குள் பார்வையைப் போட்டான்.

கண்ணாடி அணிந்து தலை நரைத்த மனிதர் ஒருவர் புத்தகங்களை அடுக்கி வைத்துக் கொண்டிருக்க, விவேக் அவரை நெருங்கி “எக்ஸ்க்யூஸ் மீ” என்றான்.

அவர் நிமிர்ந்தார்.

நெற்றியில் சந்தனக் கீற்று, சர்ட் பட்டன் கழன்ற மார்பில் துளசி மணிமாலை.

விவேக் கேட்டான் மலையாளத்தில்.

“நீங்க கேரளாவா?”

அவர் தலையசைத்தார் “ஆமா…”

“நான் மெட்ராஸ்…”

“ஓ…! தமிழ் புஸ்தகம் வேணுமா? விகடன், குமுதம், கிரைம் நாவல் எல்லாமே இருக்கு..”

“ஸாரி… நான் புஸ்தகம் வாங்க வரலை. உங்ககிட்ட ஒரு விஷயம் பேசிட்டு போலாம்னு வந்தேன்…”

அவர் குழப்ப முகத்தோடு “சொல்லுங்க” என்றார்.

விவேக் குரலைத் தாழ்த்திக்கொண்டு கேட்டான்.

“புரபசர் கோவிந்த் வர்மா காலையில் இங்கே வந்திருந்தாரா…?”

அவர் சந்தேகமாய்ப் பார்த்தார்.

“எதுக்காக கேட்கறீங்க…?”

“இது ஓர் என்கொய்ரிதான்…”

“என்கொய்ரியா…? எதுக்காக என்கொய்ரி…?”

விவேக் புன்னகைத்தான்.

“நான் மெட்ராஸ்னு மட்டும்தான் உங்களுக்குத் தெரியும். ஆனா ஒரு போலீஸ் ஆபீஸர்ன்னு தெரியாது இல்லையா…?”

“என்னது… போலீஸ் ஆபீஸரா…?’

“ம்… க்ரைம் ப்ராஞ்ச்…” தன் உத்யோக அட்டையை எடுத்து அவர் முகத்துக்கு நேரே பிடித்தான் விவேக்.

அவர் பார்த்துவிட்டு மிரண்டார்.

“எ… எதுக்காக… இந்த என்கொய்ரி…?”

“அவர் இப்போ உயிரோடு இல்லை.”

“எ…ப்..படி..?” அவருடைய கண்கள் திக்கித்துப் போயிருந்தன.

“கொலை…”

இப்போது அவருடைய முகம் வியர்வை பூத்தது.

விவேக் புன்னகைத்தான். “இனிமேலாவது என்னோட கேள்விகளுக்குப் பதில் சொல்வீங்களா…?”

அவர் ஓர் இயந்திரம் போல் தலையசைத்தார்.

விவேக் தொடர்ந்தான்.

“இன்னிக்குக் காலையில் ஆறு மணியிலிருந்து ஏழு மணிக்குள்ளாக கோவிந்த் வர்மா உங்களை வந்து பார்த்தாரா?”

“ம்… பார்த்தார். ஜான்ஸி போறதுக்காக ரயில்வே ஸ்டேஷனுக்கு வந்தார். ஆனா போகலை…”

“ஏன்?”

“அவர் எப்போ ஜான்ஸிக்குப் போறதாயிருந்தாலும் என்கிட்ட வந்து ஒரு பத்து நிமிஷமாவது பேசிட்டு, படிக்கறதுக்காக கொஞ்சம் புக்ஸும் வாங்கிட்டுப் போவார். இன்னிக்கும் அதே மாதிரி வந்தார். என்கிட்ட பேசிட்டிருந்தார். திடீர்னு அவர்க்கு ஒரு செல்போன் வந்தது. பேசினார். பேசிட்டு என்னைப் பார்த்தார். முக்கியமான ஃப்ரெண்ட் ஒருத்தர் இறந்துட்டதா தகவல். இன்னிக்கு ஜான்ஸி பயணம் கான்ஸல், நாளைக்கு மறுபடியும் வர்றேன்னு சொல்லிட்டு கிளம்பிட்டார்…”

“யார் அந்த முக்கியமான ஃப்ரண்ட்?”

“தெரியலை. அவரும் சொல்லலை. நானும் கேட்கலை, செல்போன்ல பேசிட்டு அவரும் உடனடியாக் கிளம்பிட்டார்.”

“உங்களுக்கு கோவிந்த் வர்மா எப்படி பழக்கம்…?”

“அவர் என்னோட ஆரம்பகால கஸ்டமர். அந்த நெருக்கம் கொஞ்சம் கொஞ்சமா அதிகமாகி அவர் ஒரு ஃப்ரண்ட் மாதிரியே பழக ஆரம்பிச்சுட்டார்.”

“உங்க பேர்…?”

“தங்கப்பன். சொந்த ஊர் எர்ணாகுளம்.”

“எத்தனை வருஷமா இந்த புக் ஸ்டால் வியாபாரம்?”

“இருபது வருஷமா…! ஃபேமிலி எல்லாம் கேரளாவில்தான். வருஷத்துக்கு ரெண்டு தடவை ஊர்க்குப் போயிட்டு வருவேன்…”

“சரி! கோவிந்த் வர்மா எதுக்காக அடிக்கடி ஜான்ஸி போய்ட்டு வர்றார்ன்னு தெரியுமா…?”

“தெ…ரி…யும்…”

“எதுக்காக..?”

“அது… வந்த… வந்து…”

“ம்… சொல்லுங்க.”

“ஜான்ஸியில் அவர்க்கு வேண்டிய ஒரு பொண்ணு இருக்கு…”

“வேண்டிய பொண்ணுன்னா… இல்லீகல் டச்சா?”

“ம்… அதேதான்…”

“இந்த வயசிலா…?”

“பெண்கள் விஷயத்துல அவர் ரொம்பவும் வீக்…”

“கோவிந்த் வர்மாவோட ஒஃப் மிருதுளாவை நீங்க பார்த்து இருக்கீங்களா…?”

“இல்லை…”

“ஃப்ரண்ட்னு சொல்றீங்க… கோவிந்த் வர்மா வீட்டுக்கு நீங்க போனதே இல்லையா…?”

“போனதில்லை. பழக்கமெல்லாம் இந்த ரயில்வே ஸ்டேஷன் புக் ஸ்டாலோடு சரி… அவரும் என்னைக் கூப்பிட்டதில்லை. நானும் அவரைத் தேடிக்கிட்டு வீடு வரைக்கும் போனது இல்லை. ஆனா மிருதுளாவைப் பத்தி அவர் என்கிட்ட சொல்லியிருக்கார்.”

“என்ன சொல்லியிருக்கார்…?”

“அவளுக்கு லேசா மெண்டல் டிஸ்ஆர்டராம். ஒரு நேரம் மாதிரி இன்னொரு நேரம் பிஹேவ் பண்ண மாட்டாளாம். இந்திய நாட்டு மேல அவளுக்கு அபாரமான பற்றாம். இந்தியா கிரிக்கெட்ல தோத்தா டி.வி பெட்டியையே அடிச்சு நொறுக்கித் தூள்தூளா பண்ணிடுவாளாம். இப்படி ஏதேதோ என்கிட்ட சொல்லியிருக்கார்.”

“கோவிந்த் வர்மாவுக்கு இந்த ஊர்ல வேற யார் யாரெல்லாம் ப்ரண்ட்ஸ்…?”

“எனக்குத் தெரியாது…”

“சரி! ஜான்ஸியில அவர் இல்லீகல் டச் வெச்சிருக்கிற பெண் யார்னு தெரியுமா…?”

“தெரியாது..”

“இதோ பார்ங்க தங்கப்பன்! கோவிந்த் வர்மாவைப் பத்தி உங்களுக்கு என்னென்ன உண்மைகள் தெரியுமோ அதுல எதையுமே மறைக்காமே என்கிட்ட சொல்லிடறது

உத்தமம். அவரைப் பத்தின உண்மைகள் வெளியே வந்தாத்தான் கொலையாளி யார்னு கண்டு பிடிக்க முடியும்... ஸோ, உங்களுக்குத் தெரிஞ்ச உண்மைகளை இப்பவே சொல்லிட்டா நல்லது..."

"எனக்குத் தெரிஞ்ச எல்லாத்தையும் சொல்லிட்டேன், இனிமே சொல்றதுக்கு எதுவும் இல்லை."

"சரி... ஜான்ஸியில இருக்கிற அந்தப் பெண்ணைப் பத்தி யார்கிட்ட விசாரிச்சா தகவல் கிடைக்கும்?"

"மிருதுளாவுக்கே ஒருவேளை தெரிஞ்சிருக்கலாம்."

"கோவிந்த் வர்மா எதுக்காக ஜான்ஸி போறார்ன்னு மிருதுளாவுக்குத் தெரியலை.."

"ஸாரி... ஐ ஹேவ் நோ எனி ஐடியா, கோவிந்த் வர்மாவோட பர்சனல் அறையைக் கிளறிப் பார்த்தீங்கன்னா ஒருவேளை அந்த ஜான்ஸி பெண்ணைப் பற்றிய தகவல் ஏதாவது கிடைக்கலாம்..."

விவேக் யோசனையாய் மோவாயைத் தேய்த்தான்.

# 12

ஹோட்டல் ப்ருத்விராஜ் இண்டர்நேஷனல்.

விவேக்கும் ரூபலாவும் வரவேற்பறைக்குள் நுழையும்போது ராத்திரி மணி ஒன்பது.

ரிசப்ஷனிஸ்ட்டிடம் விவேக் அறை சாவியை வாங்கப்போக, அவள் புன்னகையோடு சோபாவைக் கைகாட்டி சொன்னாள்.

"ஸார்…! ஒன் மிஸ்டர் ஆன்டனி ஈஸ் வெயிட்டிங் ஃபார் யூ…."

விவேக் திரும்பிப் பார்த்துக் கொண்டிருக்கும்போதே ஆன்டனி எழுந்து வந்தான்.

"ஹல்லோ…"

விவேக் நெற்றியில் திகைத்தான்.

"என்ன ஆன்டனி இந்த நேரத்துல…?"

"உங்ககிட்ட கொஞ்சம் பேசணும் ஸார், சாயந்தரத்துலயிருந்து உங்களை ட்ரை பண்றேன். நீங்க ரூம்ல இல்லை…"

"சரி வா, ரூம்ல போய் பேசுவோம்… விவேக் ஆன்டனியின் தோளில் கை வைத்தபடி நடந்தான். ரூபலாவுக்கும் அறிமுகப்படுத்தி வைத்தான்.

"ரூபலா… ஹி ஈஸ் ஆன்டனி, நம்ம கோகுல்நாத்துக்கு ஃபேமிலி ஃப்ரண்ட்."

ரூபலா புன்னகைத்தாள்.

"தெரியும், பார்த்திருக்கேன். கோகுல்நாத் அங்கிள் வீட்ல ஒரு ஃபங்ஷன் நடந்தப்போ பார்த்திருக்கேன்…"

"ஆன்டனி இப்போ டெல்லியிலேயே செட்டில். அமெரிக்கன் எம்பஸியில் வேலை… எக்கச்சக்க டாலர் சம்பளம்…"

லிஃப்டில் பயணப்பட்டார்கள்.

"என்ன ஆன்டனி, ஃபேமிலி லைஃப் எப்படி இருக்கு?"

"ஃபைன் ஸார்…"

ஒரே இஷ்யூதானே…!"

“ஆமா ஸார்…”

“பையனா… பொண்ணா?”

“பொண்ணு ஸார்…”

“என்ன பேர்?”

“ப்ளாரன்ஸ் ஸார்…”

ஐந்தாவது மாடியைத் தொட்டுக் கொண்டு லிஃப்ட் நின்றது.

வெளிப்பட்டு வராந்தாவில் நடந்தார்கள்.

“என்ன பிரச்னை ஆன்டனி… உன்னோட முகம் அவ்வளவு சுரத்தாவே இல்லை…”

ஆன்டனி மெல்லிய குரலில் ராணி, ஸ்ரீராம், பூமா பிரச்னையைப் பற்றி சொல்ல ஆரம்பித்தான்.

அறைக்குள் போய் பத்து நிமிஷப் பேச்சு.

விவேக் ஆன்டனி சொல்வதை உன்னிப்பாய் கேட்டுவிட்டு நிமிர்ந்தான். கேட்டான்.

“ஸ்ரீராம் இப்போது உயிரோடு இருக்கிறாரா இல்லை ஆக்ஸிடெண்டில் இறந்துட்டாரா…? ராணி டெல்லியில் பார்த்தது ஸ்ரீராமையா, இல்லை வேறு யாராவதையா…? இதுதானே இப்போதைக்கு உன்னோட குழப்பம் ஆன்டனி…?”

“ஆமா ஸார்…”

“உனக்கு எப்போ மிரட்டல் போன் வந்ததோ அதே நிமிஷம் ஒரு உண்மை பட்டவர்த்தனமா தெரிஞ்சு போச்சு”

“என்ன உண்மை ஸார்…?”

“அந்த ஸ்ரீராம் கலிபோர்னியாவில ஒரு கார் விபத்தில இறந்து போயிட்டதா வந்த செய்தி பொய். ராணி ஸ்ரீராமை டெல்லியில் பார்த்தது உண்மை. அது உண்மையா இருக்கப் போய்த்தான் உன்னை டெலிபோன்ல மிரட்டியிருக்காங்க.”

ஸ்ரீராம் விஷயத்தில் எதுக்காக ஸார் இப்படியொரு நாடகம்…?”

“கொஞ்சம் கிளறிப் பார்க்கணும். அந்த ராணியை நாளைக்கு காலையில் இங்கே கூட்டிட்டு வர முடியுமா?”

“எத்தனை மணிக்கு ஸார்…?”

“நாளைக்குக் காலையில் ஏழு மணிக்கு.”

“இப்பவே வேணும்னாலும் வரச் சொல்லட்டுமா ஸார். அவ வீட்டுக்கு போன் இருக்கு. ஏன்னா இந்த விஷயத்தை லேட் பண்ற ஒவ்வொரு நிமிஷமும் ஆபத்துன்னு என் மனசுக்குப் படுது ஸார்.”

“ஆன்டனி! நான் வேற ஒரு கேஸ் விஷயமா அடுத்த ஒரு மணி நேரத்துக்குள்ளே வெளியே போக வேண்டியிருக்கு. புரபசர் கோவிந்த் வர்மான்னு ஒருத்தர் பூட்டின வீட்டுக்குள்ளே மர்மமான முறையில் கொலை செய்யப்பட்டிருக்கார். அது சம்பந்தமா நான் மறுபடியும் ஒரு விசாரணைக்காக வெளியே போக வேண்டியிருக்கு. அதனால்தான் நாளைக்குக் காலையில் ராணியை வரச் சொல்றேன்....”

“ராணிக்கு போன் பண்ணினா ஒரு கால் மணி நேரத்துக்குள்ளே வந்துடுவா ஸார்...”

“சரி... போன் பண்ணு...! அதுக்குள்ளே நான் ஒரு குளியல் போட்டுட்டு வந்துடறேன் ரூபி! ஆன்டனிக்கு சாப்பிட ஏதாவது ஆர்டர் பண்ணு...”

விவேக் குளிக்கப் போய்விட, ஆன்டனி டெலிபோனைத் தொட்டு ரிஸீவரை எடுத்து காதில் பொருத்திக் கொண்டு டயல் செய்தான்.

ரிங் போய் ரிஸீவர் எடுக்கப்பட்டது.

“ஹலோ” மறுமுனையில் ஆண் குரல் ஒன்று கேட்டது.

“மிஸ் ராணி ப்ளீஸ்...”

“நீங்க யாரு...?”

“நான் ஆன்டனி...”

“ஓ... ஆன்டனியா...? எம்பஸியில் வேலை பார்க்கிற ஆன்டனிதானே...?”

“ஆமா...”

“ஸாரி மிஸ்டர் ஆன்டனி. ராணி இப்போ உங்ககூட பேசக்கூடிய நிலையில் இல்லை...”

“ஏன்...?”

“ஒரு ரெண்டு நிமிஷத்துக்கு முன்னாடிதான் அவளைக் கத்தியால குத்திக் கொலை பண்ணினோம். போலீஸுக்கு விஷயத்தைச் சொல்லிட்டு நீயும் வந்து பாரு...”

மறுமுனையில் பெரிய சத்தத்தோடு ரிஸீவர் சாத்தப்பட்டது.

# 13

ராணி மிகவும் கொடூரமான முறையில் கொலை செய்யப்பட்டு சுவரோரமாய் ரத்தக் குவியலாய்க் கிடந்தாள்.

ஆன்டனி அழுகையைக் கட்டுப்படுத்திக் கொள்ள கைக்குட்டையின் உதவியை நாடியிருக்க, விவேக் இறுகிய முகத்தோடு பக்கத்தில் நின்றிருந்த ராணியின் அப்பா கீர்த்தி வாசனிடம் பேசிக் கொண்டிருந்தாள். போலீஸும் பாரன்சிக் பீப்பிளும் இயங்கிக் கொண்டிருந்தார்கள்.

“சம்பவம் நடந்தப்ப நீங்க வீட்ல இல்லையா...?”

“இ... இல்லை... ஒரு மருந்து வாங்கறதுக்காக கன்னாட் ப்ளேஸ் வரைக்கும் போயிருந்தேன், நான் போயிட்டு வர்றதுக்குள்ளே என்னோட மகளை பாவிங்க கொன்னுட்டுப் போயிட்டாங்க..” சொன்னவர் அழுகையைக் கட்டுப்படுத்திக்கொள்ள முடியாமல் இரண்டு கைகளாலும் முகத்தைப் பொத்திக் கொண்டு ஒரு குழந்தையைப் போல் தேம்பித் தேம்பி அழ ஆரம்பித்தார்.

ஆன்டனி அழுகையோடு குறுக்கிட்டான்.

“சார்...! ராணி கொலை செய்யப்படக்கூடிய அளவுக்கு எந்தத் தப்பும் பண்ணலை. அவ செஞ்ச ஒரே தப்பு இந்த டெல்லியில் ஸ்ரீராமைப் பார்த்ததாய் சொன்னதுதான். இந்த விஷயத்தில் எதிரிகள் என்னையும் குறி வெச்சிருக்காங்க...”

விவேக் ஆன்டனியின் தோள்மேல் கையை வைத்து வெளியே கூட்டிப் போய் ஒரு மரத்துக்குக் கீழே நிறுத்திக் கொண்டான்.

“ஆன்டனி! ராணி உன்கிட்ட சொன்ன எல்லா விஷயமும் ஞாபகம் இருக்கா...?”

“இருக்கு ஸார்...”

“நேத்துக் காலையில் பத்து மணிக்கு அக்பர் ரோட்டில் இருக்கற ஒரு டிபார்ட்மென்டல் ஸ்டோர் வாசல்ல ஸ்ரீராமை ராணி பார்த்திருக்கா... இல்லையா...? இந்த டிபார்ட்மென்டல் ஸ்டோர் பேர் என்ன...?”

“சூஸ் அண்ட் டேக் டிபார்ட்மென்டல் ஸ்டோர்...”

“ஸ்ரீராம்கூட ராணி பேசலை...?”

“பேசலை. காரணம் ஸ்ரீராம் வேற ஒரு நபர்கூட மும்முரமா பேசிட்டுக் கார்ல ஏறிப் போயிட்டாராம்..”

“கார் ஒயிட் காண்டஸான்னு ராணி சொன்னதா நீங்க சொன்னீங்க...?”

“ஆமாம் ஸார்…”

“ராணி காரோட நெம்பரை நோட் பண்ணியிருந்தா இந்நேரம் காரை மடக்கியிருக்கலாம். காண்டஸா ஒயிட் என்கிற ஒரு தடயத்தை மாத்திரம் வெச்சுக்கிட்டு காரை எப்படி கண்டு பிடிக்கிறது…? டெல்லியிலும் அதைச் சுத்தி இருக்கிற ஊர்களிலும் ஏகப்பட்ட ஒயிட் காண்டஸாக்கள். இதுல எதைன்னு போய் கண்டுபிடிக்கறது…?”

“எனக்கும் அதே பிரமிப்புதான் ஸார்…”

விவேக் சில விநாடிகளை யோசனையில் கரைத்து விட்டு ஆன்டனியை ஏறிட்டான்.

“அந்த டிபார்ட்மென்டல் ஸ்டோர்க்கு நீ போயிருக்கியா ஆன்டனி?”

“நிறைய தடவ போயிருக்கேன் ஸார். டெல்லியிலேயே மிகப் பெரிய டிபார்ட்மென்டல் ஸ்டோர் அது.”

“அந்த டிபார்ட்மென்டல் ஸ்டோர்ஸ் ஓனர் யாரு…?”

“தெரியலை ஸார்…”

“நாளைக்குக் காலையில் முதல் காரியமா அந்த டிபார்ட்மென்டல் ஸ்டோர்ஸுக்குப் போறோம்…”

விவேக் சொல்லிக் கொண்டிருக்கும்போதே அவன் சர்ட் பாக்கெட்டில் நீட்டிக் கொண்டிருந்த செல்போன் ஒரு ஹாட்லைன் ம்யூஸிக் கொடுத்தது.

எடுத்துக் காதுக்குக் கொடுத்தான்.

“எஸ்…”

“மிஸ்டர் விவேக்…?”

“ஹோல்டிங்..”

“கமிஷனர் ஆபீஸிலிருந்து பேசுகிறோம்.”

“சொல்லுங்கள்…”

“கமிஷனர் உங்களை உடனடியாய் பார்த்துப் பேச விரும்புகிறார்…”

“இடம்…?”

“கமிஷனர் அலுவலகம்…”

“இதோ புறப்பட்டு விட்டேன்.”

விவேக் செல்போனை அணைத்து விட்டு ஆன்டனியை ஏறிட்டான்.

“ஆன்டனி! நாளைக்குக் காலையில் நாம மீட் பண்ணலாம். இப்போ நான் கொஞ்சம் கமிஷனர் ஆபீஸுக்குப் போக வேண்டியிருக்கு..”

ஆன்டனி தலையசைக்க, விவேக் அவன் தோளைத் தொட்டு சொன்னான், “நீ கொஞ்சம் பாதுகாப்பா இருக்கணும். வீட்டுக்கு செக்யூரிட்டி காப்ஸ் போட்டிருக்கா இல்லையா...?”

“போட்டிருக்கு ஸார்...”

“சரி வா... உன்னை உன்னோட வீட்ல கொண்டு ட்ராப் பண்ணிட்டு நான் அப்படியே கமிஷனர் ஆபீஸுக்குப் போறேன்.”

விவேக் ஸ்பாட்டில் இருந்த இன்ஸ்பெக்டரைக் கூப்பிட்டு இன்ஸ்ட்ரக்ஷன் கொடுத்துவிட்டு ஆன்டனியுடன் கிளம்பி வாசலில் நின்றிருந்த கார்க்கு வந்தான்.

# 14

டெல்லி ஆர்.ஏ.எஃப் போலீஸ் கமிஷனர் மொஹிந்தர் அந்த முன்னிரவு வேளையில் தூக்கம் கெட்ட கண்களோடு தன் ஆபீஸ் அறையில் காத்திருந்தார். சதைப்பிடிப்பான அவரது சதுர முகத்தில் தாடியும், மீசையும் ஐம்பது சதவீத இடப்பரப்பைக் குத்தகைக்கு எடுத்திருந்தது. அவர் உட்கார்ந்திருந்த மேஜைக்குப் பின்புறம் இந்திய மேப்பும், டெல்லி நகர மேப்பும் பார்வைக்குக் கிடைத்தது.

“டொக்... டொக்...”

கதவில் சத்தம் எழ-மொஹிந்தர் குரல் கொடுத்தார் “ப்ளீஸ்... கெட் இன்...”

விவேக் உள்ளே நுழைந்து சல்யூட் ஒன்றை வைக்க, மொஹிந்தர் சின்னதாய் மலர்ந்து, “வெல்கம் மிஸ்டர் விவேக்” என்று சொல்லிக் கையைப் பற்றிக் குலுக்கிவிட்டு பி.வி.சி நாற்காலியொன்றைக் காட்டினார்.

விவேக் உட்கார்ந்ததும் மொஹிந்தரும் தன் இருக்கைக்கு சாய்ந்துகொண்டு கவலையான குரலில் சொன்னார்.

“கண்ட்ரோல் ரூமிலிருந்து சிறிதுநேரத்துக்கு முன்புதான் எனக்குத் தகவல் வந்தது. புரபசர் கோவிந்த் வர்மா என்பவரும், ராணி என்கிற ஒரு பெண்ணும் கொலை செய்யப்பட்டிருப்பதாகவும், அந்தக் கொலைகளைப் பற்றிய விசாரணையை நீங்கள் மேற்கொண்டு இருப்பதாகவும் சொன்னார்கள். இந்தக் கொலைகளில் நீங்கள் ஆர்வம் காட்டுகிறீர்கள் என்றால் ஏதாவது ஒரு காரணம் இருக்கும் என்று நினைக்கிறேன்...”

விவேக் இடைமறித்தான்.

“யூ ஆர் கரெக்ட் ஸார்.. அந்த இரண்டு கேஸ்களும் என்னிடம் வலிய வந்தவை. இதில் கோவிந்த் வர்மா கொலை நான் டெல்லிக்கு எந்த விஷயத்தை டீல் பண்ண வந்தேனோ அதோடு சம்பந்தப்பட்டது...”

மொஹிந்தர் நிமிர்ந்தார்.

“விவேக்! நீங்கள் என்ன சொல்கிறீர்கள்...?”

“ஸார்... ரெட் டாட்ஸ் மேட்டர் என்கிற நமக்கு மட்டுமே தெரிந்த ஒரு சங்கேத வார்த்தை இறந்து போன புரொபசர் கோவிந்த் வர்மாவால் சொல்லப்பட்டிருக்கிறது...”

மொஹிந்தர் கொஞ்சம் நிமிர்ந்தார்.

“ஈஸிட்...?”

“எஸ் ஸார்...”

“அது எப்படி உங்களுக்குத் தெரியும்?”

“கோவிந்த் வர்மாவின் மனைவி மிருதுளா இந்த ரெட் டாட்ஸ் மேட்டர் என்கிற சங்கேத வார்த்தையை அவர் டெலிபோனில் பேசும்போது கேட்டிருக்கிறாள். கணவனின் நடவடிக்கைகளில் சந்தேகப்பட்ட மிருதுளா அதை என்னிடம் சொல்லி வருத்தப்பட்டாள். நானும் கோவிந்த் வர்மாவின் பர்சனல் அறையைக் கிளறிப் பார்ப்பதற்காக அவருடைய வீட்டுக்குப் புறப்பட்டுப் போனேன். அப்போதுதான் பூட்டியிருந்த வீட்டுக்குள் கோவிந்த் வர்மா கொலையாகிக் கிடந்தது தெரிந்தது.”

மொஹிந்தர் கவலையாய் நெற்றியைத் தேய்த்தார். “அப்படியானால் கோவிந்த் வர்மாவுக்கும் ரெட் டாட்ஸ் மேட்டர் விவகாரத்துக்கும் ஒரு லிங்க் இருக்கிறது…”

“எஸ் ஸார்… கோவிந்த் வர்மாவின் வீட்டை சீல் வைக்கச் சொல்லியிருக்கிறேன். நாளைக்கு காலையில் போய் வீட்டைத் துருவிப் பார்க்க வேண்டும்…”

“சரி, இந்த ராணியின் மரணம் எதற்காக?”

“இது வேறு ஒரு பிரச்னை ஸார். எம்பஸியின் வேலை பார்க்கும் ஆன்டனி என்பவர் கொண்டு வந்த பிரச்னை. கம்ப்யூட்டர் சம்பந்தப்பட்ட தொழில்நுணுக்கங்களைக் கற்றுக் கொள்வதற்காக கலிபோர்னியா சென்ற ஸ்ரீராம் என்ற இளைஞன் கார் விபத்தில் இறந்து விட்டதாக அங்கேயிருந்து செய்தி வந்தது. ஆனால் ராணி என்கிற ஒரு பெண் நேற்றுக் காலை பத்து மணியளவில் அக்பர் ரோட்டில் உளள் சூஸ் அண்ட் டேக் டிபார்ட்மென்டல் ஸ்டோர்ஸுக்கு முன்பாக ஸ்ரீராம் வேறு ஒரு நபருடன் காரில் ஏறிப் போனதைப் பார்த்து இருக்கிறாள். ராணி இதை ஸ்ரீராம் மனைவி பூமாவிடமும், எம்பஸியில் வேலை பார்க்கும் ஆன்டனியிடமும் சொல்லி விவகாரத்தை வெளிச்சத்துக்குக் கொண்டு வர, எதிரிகளுக்கு கோபம். ஸோ! ராணியை முடிச்சுட்டாங்க. ஆன்டனிக்கும் போன் பண்ணி மிரட்டியிருக்காங்க…”

மொஹிந்தர் சில விநாடிகள் யோசனையாய் இருந்து விட்டு கேட்டார்.

“கோவிந்த் வர்மாவின் கொலைக்கும், ராணியின் கொலைக்கும் ஒரே எதிரிதான் காரணமா?”

“தெரியலை ஸார்… ரெண்டு கொலைகளுக்கும் உள்ள ஒரே ஒற்றுமை ரெண்டும் ஒரே நாள்ல நடந்திருக்கிறதுதான்… விசாரணையை இன்னமும் ஸ்க்ரூட்னைஸ் பண்ணிப் பார்த்தாதான் ரெண்டுக்கும் உள்ள தொடர்பு தெரிய வரும்…”

“விவேக்! நாளைக்கு உங்களை சந்தித்து ஒரு முக்கியமான விபரத்தைப் பற்றி சொல்லலாம் என்று இருந்தேன். நடக்கிற நிகழ்ச்சிகளையெல்லாம் பார்த்தால் இப்போதே உங்களிடம் சொல்லி விடலாம் என்றிருக்கிறேன்.”

“சொல்லுங்கள் ஸார்…”

மொஹிந்தர் தன்னுடைய லாக்கர் கேபிளைத் திறந்து உள்ளேயிருந்து ஒரு ஃபைலை எடுத்தார்.

“இது ஒரு ரகசிய ஃபைல், அந்நிய நாட்டு தீவிரவாத சக்திகளை உன்னிப்பாய் கவனித்துக் கொண்டிருக்கும் இன்டலிஜென்ஸ் பீரோ ஸ்பைஸ் மூலம் சேகரித்த சில அதிர்ச்சியான தகவல்கள் இதில் இருக்கின்றன. படித்துப் பாருங்கள்....”

மொஹிந்தர் நீட்டிய ஃபைலை வாங்கிய விவேக் அதை மேஜை விளக்கு வெளிச்சத்தில் மெல்லப் புரட்ட ஆரம்பித்தான. படிக்கப் படிக்க இருதயத்துக்குள் ஒரு நடுக்கம் ஓடியது.

இந்திய உளவுத்துறை நிறுவனம் ரகசியமாய் கண்காணித்து அனுப்பியுள்ள சில திடுக்கிடும் தகவல்கள். நூறு சதவீத அளவுக்கு அந்தத் தகவல்கள் நம்பும்படியாக உள்ளன.

தகவல்களை கீழே வரிசை படுத்தியுள்ளோம்.

1. இந்தியாவில் வன்முறைகளைக் கட்டவிழ்த்து விடவும், பொருளாதாரத்தை சீர்குலைக்கவும் திரைமறைவு வேலைகள் ஆரம்பமாகியுள்ளன.

2. இந்த 2001-ஆவது வருஷத்துக்குள் தலைநகரான டெல்லியை முற்றிலுமாக அழிக்க, மிகப் பெரிய சதித்திட்டம் ஒன்று அண்டைய எதிரி நாடுகளால் உருவாக்கப்பட்டுள்ளது. இந்தச் சதித் திட்டத்துக்கு ‘ரெட் டாட்ஸ்’ என்ற பெயர் வைக்கப்பட்டுள்ளது.

3. இந்தியத் தேசப்படத்தில் இனி டெல்லி இருக்கக் கூடாது என்பது தீவிரவாதிகளின் எண்ணம்.

4. டெல்லியை முற்றிலுமாக அழிக்க ஒரு விபரீதமான திட்டம் தீட்டப்பட்டுள்ளது. அது என்னவாக இருக்கும் என்று தெரியவில்லை. தீவிரவாதிகளில் யாரவாது பிடிபட்டால்தான் அந்தத் திட்டம் என்ன என்பது தெரியும் காரணம், பேச்சுவார்த்தைகள் எல்லாமே சங்கேத மொழியில் நடைபெற்று வருகிறது.

5. கடைசியாகக் கிடைத்த தகவல்படி டெல்லியை முற்றிலுமாக அழிக்கும் எண்ணத்தோடு நூற்றுக்கும் மேற்பட்ட தீவிரவாதிகள் உல்லாசப் பயணிகள் போல் இந்தியாவுக்குள் ஊடுருவி விட்டனர். அவர்களைக் கண்டுபிடித்து களை எடுக்க வேண்டியது காவல்துறையின் கடமை.

விவேக் ஃபைலில் உள்ள வாசகங்களைப் படித்து விட்டு வியர்வை பூத்த முகத்தோடு நிமிர்ந்தான்.

“ஸார்... ‘இந்த இண்டலிஜென்ஸ் பீரோ’ ரிப்போர்ட் உங்கள் கைக்கு வந்து எவ்வளவு நாட்களாயிற்று?”

“ஒரு வார காலம்...”

“எந்தத் தீவிரவாதியாவது பிடிபட்டானா...?”

“இல்லை... டெல்லிக்கு வரும் உல்லாசப் பயணிகளை உன்னிப்பாய் கவனிக்க ஸ்பெஷல் ஸ்க்வார்ட்ஸ் போட்டிருக்கிறது. ஆனால் இதுவரைக்கும் சந்தேகப்படும்படியாய் யாரும் சிக்கவில்லை.”

“ஸார்...! இந்த ‘ரெட் டாட்ஸ்’ என்கிற சங்கேத வார்த்தை கோவிந்த் வர்மா உபயோகப்படுத்தியதாய் அவருடைய மனைவி மிருதுளா சொல்லியிருக்கிறாள். அந்த வீட்டை உடனடியாய் ஒரு சோதனைக்கு உட்படுத்தினால் ஏதேனும் தகவல் பெயரலாம்.”

“டு இட் இம்மீடியட்லி..”

விவேக் எழுந்து கொண்டான்.

# 15

அந்த நள்ளிரவில், மிருதுளாவின் முன்னிலையில் சீல் வைத்த பூட்டு திறக்கப்பட, விவேக்கும், இரண்டு இண்டலிஜென்ஸ் பீரோவைச் சேர்ந்த அதிகாரிகளும் உள்ளே நுழைந்தார்கள்.

மிருதுளா ஒவ்வொரு அறையாய் காட்ட, விவேக் அந்த அறையையே கவிழ்த்துப் போட்ட மாதிரி துருவ ஆரம்பித்தான்.

கைக்குக் கிடைத்ததெல்லாம் வீட்டு உபயோகப் பொருள்கள்தான்.

சுவரில் பதிக்கப்பட்டிருந்த ஷெல்ப்புகள், பாத்ரூம் டப்ஸ், டாய்லட் ஸிங்க்ஸ் எல்லாமே அப்ஜெக்ட் டிடெக்டரால் தடவிப் பார்க்கப்பட்டன.

எந்தத் தடயமும் கிடைக்கவில்லை.

விவேக் களைத்துப் போன முகத்தோடு மிருதுளாவை ஏறிட்டான்.

“ரெட் டாட்ஸ் மாதிரியான சங்கேத வார்த்தைகளை உங்க கணவர் என்னிக்கு டெலிபோனில் பேசினார்?”

“ரெண்டு நாளைக்கு முன்னாடி.”

“அப்போ என்ன நேரம் இருக்கும்?”

“ராத்திரி எட்டு மணியிலிருந்து ஒன்பது மணிக்குள்ளே இருக்கலாம்.”

“அவர்க்கு அடிக்கடி போன் பண்ணக்கூடிய நபர் யார்னு தெரியுமா?”

“தெரியாது.”

“டயரி எழுதற பழக்கமே அவர்க்குக் கிடையாது போலிருக்கே...?”

“அதைப் பத்தியும் எனக்குத் தெரியாது. அவர் டயரி எழுதி நான் பார்த்ததும் கிடையாது.”

“தீவிரவாத அமைப்புகளோடு அவர்க்குத் தொடர்பு இருந்தா ஏதாவது ஒரு சின்னத் தடயமாவது இங்கே எங்களுக்குக் கிடைச்சிருக்கும். கடந்த ஒரு மணிநேரமா வீட்டையே புரட்டிப் பார்த்துட்டோம். அவர் மேல சந்தேகப்படற மாதிரி எதுவும் கிடைக்கலையே...!”

“எனக்கும் அதே குழப்பம்தான் ஸார். என்னோட கணவர் கோவிந்த் வர்மா சாமான்யப்பட்டவர் கிடையாது. இந்த வீட்டிலேயே அவர்க்கு ஏதாவது ஒரு ரகசிய இடம் இருக்கலாம். அங்கே அவர் சம்பந்தப்பட்ட நிழலான விஷயங்களுக்குரிய தடயம் கிடைக்கலாம்.”

விவேக் பக்கத்தில் நின்றிருந்த அந்த இண்டலிஜென்ஸ் பீரோ அதிகாரிகளிடம் திரும்பினான்.

“மறுபடியும் ஒரு தடவை வீட்டை செக் பண்ணிப் பார்த்துடலாமா...?”

அவர்கள் தலையாட்டிக் கொண்டிருக்கும்போதே பக்கத்து அறையில் இருந்த டெலிபோன் முணுமுணுப்பாய்க் கூப்பிட்டது.

மிருதுளா ரிஸீவரை எடுக்கப் போக, விவேக் கையமர்த்தினான். பின் மெதுவாய் நடந்து போய் பக்கத்து அறைக்குள் நுழைந்து வீறிட்டுக் கொண்டிருந்த டெலிபோனைத் தொட்டு ரிஸீவரை எடுத்து ‘ஹலோ’ சொல்லாமல் மௌனமாய்க் காதில் வைத்தான்.

மறுமுனையில் நிசப்தம்.

பத்து விநாடிகளுக்குப் பிறகு -

ஒரு குரல் கிசுகிசுப்பாய் கேட்டது. ஆண்குரல்.

“மிருதுளா...?”

விவேக் கேட்டான்.

“யார் நீங்க...?”

“டொக்...”

ரிஸீவர் வைக்கப்பட்டுவிட்டது.

# 16

மறுநாள் காலை பத்துமணி.

ஹோட்டலை விட்டுக் கிளம்பிக் கொண்டிருந்தான் விவேக்.

"ரூபி...! நானும் ஆன்டனியும் இப்போது சூஸ் அண்ட் டேக் டிபார்ட்மென்டல் ஸ்டோர்ஸுக்குப் போயிட்டிருக்கோம். ராணி ஸ்ரீராமைப் பார்த்த இடம்."

ரூபலா கேட்டாள்.

"அங்கு போறதினால ஏதாவது பிரயோஜனம் இருக்கும்னு நினைக்கிறீங்களா? ஸ்ரீராமை அந்த இடத்துல பார்த்த ராணியும் இப்போ உயிரோடு இல்லை..."

விவேக் புன்னகைத்தான்.

"கலிபோர்னியாவிலிருந்து இந்தியாவுக்கு வந்த ஸ்ரீராம் அந்த டிபார்ட்மென்டல் ஸ்டோர்க்குப் போயிருக்கான்னா அங்கே அவனுக்கு வேண்டிய யாரோ இருந்திருக்காங்கன்னு அர்த்தம். அது யார்னு கண்டுபிடிச்சா... கேஸுக்கு ஒரு ட்யூப்லைட் வெளிச்சம் கிடைக்கும்."

"அது யார்னு கண்டுபிடிக்க முடியுமா?"

"பார்க்கலாம். ஒரு சின்னக் க்ளூ கிடைச்சாலும் ஆளை ட்ரேஸ் பண்ணிடலாம்."

"சரி...! நேற்றைய கேள்விக்கு பதில் கண்டுபிடிச்சீங்களா..?"

"எந்தக் கேள்வி...?"

"நேத்து ராத்திரி மிருதுளா வீட்ல நீங்க செக் பண்ணிட்டிருக்கும்போது அவளுக்கு ஒரு போன் வந்ததே?"

"ம்..."

"அந்தப் போனைப் பண்ணியது யாரு?"

"தெரியலை. இனிமேத்தான் கண்டுபிடிக்கணும்."

"அந்த மிருதுளாவைக் கேட்டிருக்கலாமே...?"

"கேட்கக்கூடாது. சில விஷயங்கள் மறைவா இருந்தாத்தான் உண்மைகள் வெளியே எட்டிப் பார்க்கும். அதான் நேத்து ராத்திரி மிருதுளா போன் யார்கிட்டயிருந்து வந்ததுன்னு கேட்டப்பகூட அது ராங் நெம்பர்ன்னு சொல்லிட்டேன்..."

விவேக் கண்ணாடி முன் நின்று டையை இறுக்கிக் கொண்டு புறப்பட்டான்.

“ரூபி! ரூமை உள் பக்கமா நல்லா லாக் பண்ணிக்கோ. டி.வி-யில டிஸ்கவரி சானல் பார்த்துட்டிரு. நான் போய்ட்டு ஒரு மணி நேரத்துக்குள்ள திரும்பி வந்துடறேன்.”

ரூபலா தலையாட்ட, விவேக் வராந்தாவில் வேக நடை போட்டு-லிஃப்டில் கீழே இறங்கி வரவேற்பறைக்கு வந்த போது-அந்த வழுக்கைத் தலை மனிதர் எதிர்ப்பட்டார். கையில் ஒரு ஃபைல்.

“குட்மார்னிங் ஸார்.”

விவேக் பதிலுக்கு குட்மார்னிங் சொல்லிவிட்டுக் குழப்பமாய்க் குரலை இழுத்தான்.

“நீங்கள்…?”

“ஸார்…! நான் ரீஜனல் ட்ரான்ஸ்போர்ட்டிலிருந்து வருகிறேன். என் பெயர் பட்டேல். நீங்கள் நேற்று இரவு ஆர்.டி ஆபீஸர்க்கு போன் செய்து ஒரு விவரம் கேட்டிருந்தீர்களாம். நீங்கள் கேட்டது சம்பந்தமான விபரங்களைத் திரட்டிக்கொண்டு வந்திருக்கிறேன். பேசி விடலாமா ஸார்?”

“வாருங்கள்! காரில் போய்க்கொண்டே பேசலாம்” விவேக் சொல்லிவிட்டுக் கார் பார்க்கிங்கை நோக்கி நடக்க ஆரம்பித்துவிட-பட்டேலும் பின்தொடர்ந்தார்.

காரில் இருவரும் ஏறிக் கொண்டார்கள். கார் ஹோட்டல் காம்பௌண்டைத் தாண்டியதும் விவேக் கேட்டான்.

“எல்லா விபரம் கொண்டு வந்திருக்கிறீர்கள் மிஸ்டர் பட்டேல்?”

“ஸார்…! டில்லியில் மட்டும் எவ்வளவு ஒயிட் கலர் காண்டஸாக்கள் இருக்கிறது? அந்தக் கார்கள் யார் யார்க்கு சொந்தமானது என்ற விவரத்தை நீங்கள் கேட்டிருந்தீர்கள்.”

“ஆமாம்.”

“உங்களுடைய அந்த இரண்டு கேள்விகளுக்கான பதில்கள் இந்த ஃபைலில் இருக்கிறது ஸார்.”

“விவரங்களைப் படியுங்கள் பார்க்கலாம்.”

பட்டேல் படிக்க ஆரம்பித்தார்.

“ஸார்! டெல்லியில் மட்டும் 599 வெள்ளை நிற காண்டஸாக்கள் இருக்கின்றன. இதில் கிட்டத்தட்ட இருநூறு கார்கள் அரசு அதிகாரிகளால் பயன்படுத்தப்படுபவை. மீதியுள்ள கார்கள் தனி நபர்களுக்கும், தனியார் நிறுவனங்களுக்கும் உரிமையுள்ளவை. இதில் தொழில் அதிபர்கள், சினிமா நடிகர்கள், கலைஞர்கள் உள்ளனர்.”

“ஒவ்வொருவரின் முழு முகவரியும் உள்ளதா?”

“உள்ளது ஸார்.”

“பிரைவேட் பார்ட்டீஸ் முகவரிகளை மட்டும் படித்துக் கொண்டு வாருங்கள்.”

கார் போய்க் கொண்டிருக்க-பட்டேல் ஒவ்வொரு முகவரியாய் படித்துக் கொண்டே வந்தார்.

கார் அரை மணிநேர பயணத்திற்குப் பிறகு அக்பர் ரோட்டில் இருந்த ‘சூஸ் அண்ட் டேக்”டிபார்ட்மென்டல் ஸ்டோர்ஸுக்கு முன்பாய் இருந்த கார் பார்க்கிங்குக்குள் நுழைந்து நின்றது, வாசல் முகப்பிலே காத்திருந்த ஆன்டனி வேக வேகமாய் வந்து பக்கத்தில் நின்றான்.

“குட்மார்னிங் ஸார்.”

விவேக் பட்டேலை காரிலேயே இருக்கச் சொல்லிவிட்டு ஆன்டனியுடன் நடந்து டிபார்ட்மென்டல் ஸ்டோர்ஸுக்குப் போகும் மார்பிள் படிகளில் ஏறினான்.

“ஆன்டனி”

“ஸார்…”

“இந்த டிபார்ட்மென்டல் ஸ்டோர்ஸின் லொகேஷன் சார்ட் எந்த இடத்துல இருக்கு?”

“கம் திஸ் சைட் சார்!”

ஆன்டனி கூட்டிப்போய் ப்ளாஸ்டிக் எழுத்துக்கள் பதிக்கப் பெற்ற லொகேஷன் சார்ட்டுக்கு முன்பாய் நிறுத்தினான்.

விவேக் அந்த ராட்சத சைஸ் சார்ட்டின் மேல் பார்வையை போட்டான். மொத்தம் பதினாறு மாடிகள்.

முதல் மாடி-பேன்ஸி அயிட்டங்கள்.

2, 3, 4 மாடிகள்- க்ரோஸரி ஷாப்ஸ்.

5, 6, 7 மாடிகள்-டெக்ஸ்டைல்ஸ் ஷாப்ஸ்.

8, 9, 10 மாடிகள்-ஜுவல்லரி மார்ட்ஸ்.

11, 12 மாடிகள்-ப்ரைவேட் கன்சர்ன்ஸ்.

13 ஆவது மாடி-ரெஸ்டாரெண்ட்.

14 ஆவது மாடி-வீடியோ கேம்ஸ்.

விவேக் ஆன்டனியிடம் திரும்பிக் கேட்டான்: “லிப்ட் எங்கே இருக்கு?”

ஆன்டனி கூட்டிக் கொண்டு போனான்.

லிஃப்ட் காத்திருந்தது.

உள்ளே நுழைந்தார்கள். விவேக் 11-ஆவது மாடிக்குரிய பட்டனைத் தட்டினான்.

லிஃப்ட் மேலே உயர்ந்து அடுத்த இருபது விநாடிகளில் 11-ஆவது மாடியைத் தொட்டுக் கொண்டு நின்றது.

வெளிப்பட்டார்கள்.

மார்பிள் வராந்தாவில் நடந்தார்கள்.

11-ஆவது மாடியில் மொத்தம் நான்கு தனியார் கம்பெனிகள்.

ஒரு ஏஜென்ஸி கம்பெனி. வாஷிங்மெஷின் ஷோரூம், ஒரு விளம்பரக் கம்பெனி ஒரு டெக்ஸ்டைல் மில்லின் நிர்வாக அலுவலகம்.

விவேக் லிஃப்டை பயன்படுத்தாமல் மாடிப்படிகள் வழியாக ஏறி 12-ஆவது மாடிக்கு வந்தான்.

12-ஆவது மாடியில் இரண்டே கம்பெனிகள்.

எண்ட்லஸ் நைலான் பெல்ட்டுகளை விற்பனை செய்யும் ஒரு கம்பெனி, ராஜேஷ் ட்ரேடர்ஸ் என்ற போர்டை தாங்கியிருந்தது. இன்னொரு கம்பெனி நியூ எரா கம்ப்யூட்டர்ஸ்.

விவேக் அந்தக் கம்ப்யூட்டர் கம்பெனிக்குள் நுழைந்தான். அரைவட்ட கண்ணாடி கௌண்டர்க்குள் சிக்கியிருந்த ரிசப்ஷனிஸ்ட் ஒருத்தி மினி ஸ்கர்ட்டில் எழுந்து நின்று “எஸ்” என்றாள்.

விவேக் கேட்டான்.

“இங்கே ப்ரொப்ரைட்டர் யார்?”

“ப்ரொப்ரைட்டர் இங்கே இல்லை. மிஸ்டர் தினகர் ஈஸ் த இன்சார்ஜ்.”

“பார்க்க வேண்டும்.”

“நீங்கள்?”

“போலீஸ் டிபார்ட்மெண்ட்.”

“உட்காருங்கள். கேட்டுச் சொல்கிறேன்.”

விவேக்கும் ஆன்டனியும் ரிசப்ஷன் ஹாலில் சுவரோரமாய் இருந்த சோபாவுக்குப் போய்ச் சாய்ந்தார்கள்.

ஆன்டனி கிசுகிசுப்பான குரலில் கேட்டான். “ஸார்.. இந்த டிபார்ட்மென்டல் காம்ப்ளக்ஸுக்குள் குறிப்பாய் இந்த கம்ப்யூட்டர் கம்பெனிக்கு வந்திருக்கீங்களே? ஏதாவது க்ளு கிடைச்சுதா?”

“ஒரு சின்ன க்ளு…”

“என்ன?”

“ஸ்ரீராம் ஒரு கம்ப்யூட்டர் என்ஜினியர்ன்னு நீங்க சொன்னீங்க?”

“ஆமா ஸார்…”

“ஒரு கம்ப்யூட்டர் என்ஜினியர் கலிபோர்னியாவிலிருந்து சோப்பு பௌடர் வாங்கவோ மளிகை சாமான் வாங்கவோ இந்த டிபார்ட்மென்டல் ஸ்டோர் காம்ப்ளக்ஸுக்குள் வந்திருக்க மாட்டார். அவர் தொழில் சம்பந்தப்பட்ட ஏதாவது ஒரு கன்சர்னுக்கு வந்துட்டுப் போயிருக்கலாம்னு யூகம் பண்ணினேன். இந்த காம்ப்ளக்ஸின் 11, 12-ஆவது மாடிகள் பிரைவேட் கன்சர்ன்னு போட்டிருந்தது. 11-ஆவது மாடியில் ஸ்ரீராம் சம்பந்தப்பட்ட கன்சர்ன் எதுவும் இல்லை. இந்த 12-ஆவது மாடியில் இருக்கிற கம்ப்யூட்டர் கம்பெனிதான் கொஞ்சம் பொருந்துது. ட்ரை பண்ணிப் பார்க்கலாமே?”

விவேக் பேசி முடித்த விநாடி -

அந்தப் பெண் பக்கத்தில் வந்து நின்றாள்.

“ஸார்… மிஸ்டர் தினகர் ஈஸ் வெயிட்டிங் ஃபார் யூ…”

விவேக், ஆன்டனி இருவரும் எழுந்து போனார்கள். அலுமினிய பிரேமிட்ட கண்ணாடிக் கதவைத் திறந்து கொண்டு உள்ளே போக-எக்ஸிக்யூட்டிவ் நாற்காலியில் ஃபுல் சூட்டில் புதைந்து போய் உட்கார்ந்திருந்த அந்த இளைஞன் எழுந்து கை நீட்டினான்.

“வெல்கம்!”

விவேக் அவனுடைய கையைப் பற்றிக் குலுக்கி விட்டு எதிர் நாற்காலியில் உட்கார்ந்தான்.

“அயாம் விவேக்! க்ரைம் ப்ராஞ்ச்!”

தினகர் ஆங்கிலத்தில் கேட்டான். “என்ன விஷயமாய் என்னைப் பார்க்க வந்திருக்கிறீர்கள் என்று நான் தெரிந்து கொள்ளலாமா?”

“ஷ்யூர்… மிஸ்டர் தினகர்…” என்று பேச்சை ஆரம்பித்த விவேக் கேட்டான்.

“உங்களுக்கு ஸ்ரீராம் தெரியுமா?”

“எந்த ஸ்ரீராம்?”

“கம்ப்யூட்டர் என்ஜினியர்.”

“அப்படி யாரையும் தெரியாது.”

“நேற்று காலை பத்து மணிக்கு மிஸ்டர் ஸ்ரீராம் இங்கே வந்ததாக எங்களுக்குத் தகவல்.”

“ஸாரி! நீங்கள் சொல்கிற மாதிரி யாரும் வரவில்லை.”

“இது கம்ப்யூட்டர் ஷோரூம்தானே?”

“ஆமாம்.”

“மேனுபாக்சரிங் யூனிட் எங்கே?”

“அவுட்டர் டில்லியில்.”

“எங்கே?”

“தில்குஷ் நகர் தொழிற்பேட்டை.”

“ப்ரொப்ரைட்டர் யார்?”

“மிஸ்டர் கியான்.”

“இப்போது ஃபாக்டரிக்குப் போனால் இருப்பாரா?”

“நோ ஐடியா. போன் செய்து அவர் இருக்கிறாரா இல்லையா என்பதைத் தெரிந்து கொண்டு யூனிட்டுக்குப் போனால் சரியாக இருக்கும்...”

“வேண்டாம். நாங்கள் நேரிடையாய் யூனிட்டுக்கே போய் பார்த்துக் கொள்கிறோம்.”

விவேக் எழுந்தான். தினகரோடு கைகுலுக்கி விட்டு வெளியே வந்தான். ஆன்டனி தொடர்ந்தான். லிஃப்ட்டில் இறங்கும்போது விவேக் சொன்னான்.

“ஆன்டனி! சரியான இடத்தைத் தொட்டு விட்டோம். இந்த நியூ எரா கம்ப்யூட்டர் கம்பெனிக்குத்தான் ஸ்ரீராம் வந்துவிட்டுப் போயிருக்கிறார்.”

“தினகர் இல்லையென்று சொன்னானே, ஸார்.”

“அது பொய்.”

“எப்படி ஸார்?”

விவேக் காரணத்தைச் சொல்ல, ஆன்டனி திகைத்தான்.

“ஸார்… யூ மே பி கரெக்ட்…!”

“அது செண்ட் பர்ஸண்ட் கரெக்டா இல்லையான்னு நியூ எரா பேக்டரி யூனிட்டுக்குப் போனாத்தான் தெரியும்.”

லிஃப்ட் கீழே கொண்டு வந்து சேர்க்க, பார்க்கிங்கில் இருந்த கார்க்கு வந்தார்கள்.

காரில்-பட்டேல் காத்திருந்தார்.

“மிஸ்டர் பட்டேல்.”

“ஸார்…”

“ஒயிட் காண்டஸா கார்கள் பற்றிய விவரம் அடங்கிய ஃபைலை என்னிடம் கொடுத்துவிட்டு நீங்கள் புறப்படுங்கள். ஃபைலை பிறகு உங்கள் அலுவலகத்திற்கு அனுப்பி விடுகிறேன்.

“எஸ்… ஸார்…”

பட்டேல் தன் கையில் இருந்த ஃபைலைக் கொடுத்து விட்டு ஒரு சல்யூட்டோடு வெளியேற-விவேக் காரைக் கிளப்பினான்.

# 17

குதுப்மினார் போகும் ரோட்டில்-டெல்லியின் அவுட்டரில் ஆயிரம் ஏக்கர் பரப்பில் தில்குஷ் நகர் தொழிற்பேட்டையில் பெரிய பெரிய கட்டிடங்களோடு தெரிய-தொழிற்பேட்டையின் கோடியில் நியூ எரா கம்ப்யூட்டர்ஸ் யூனிட் அசோகா மரங்களுக்கு மத்தியில் தெரிந்தது.

கார் காம்பௌண்ட் கேட்டில் தடுக்கப்பட்டு பின் விவேக் தன் உத்யோக அட்டையைக் காட்டியதும் கார் உள்ளே போக அனுமதிக்கப்பட்டது.

காரை போர்டிகோவில் நிறுத்துவிட்டு கீழே இறங்க உயரமான ஓர் ஆண் எதிர்கொண்டான்.

“நான் மிஸ்டர் கியானின் பி.ஏ. அவரை நீங்கள் பார்க்க விரும்புவதாக தினகர் போன் பண்ணியிருந்தார். மிஸ்டர் கியானும் உங்களை எதிர்பார்த்து காத்திருக்கிறார்.”

பி.ஏ விவேக்கையும் ஆண்டனியையும் கூட்டிக் கொண்டு உள்ளே போனான்.

சென்ட்ரலைஸ்ட் ஏ.ஸி கட்டிடத்தின் எல்லா பக்கங்களையும் ஊட்டியின் குளிர்ச்சிக்குக் கொண்டு வந்திருந்தது.

வராந்தாவின் இரண்டு பக்கங்களிலும் கண்ணாடி சுவர்கள் தெரிய, அதற்கப்பால் கம்ப்யூட்டர்களுக்கு முன்பாய் உட்கார்ந்திருந்த சிலர் பார்வைக்குக் கிடைத்தார்கள். அதில் பாதிப்பேர் பெண்கள்.

வராந்தா வழி நீண்டு கொண்டே போய்-மூடியிருந்த ஒரு அறைக்கதவுக்கு முன்பாய் போய் முட்டிக் கொண்டது.

பி.ஏ பவ்யமாய்க் கதவைத் திறந்து-“ப்ளீஸ் கெட் இன் ஸார்?” என்று சொல்ல, விவேக்கும் ஆன்டனியும் உள்ளே போனார்கள்.

செல்போனை காதுக்கு ஒட்ட வைத்து யாருடனோ பேசிக் கொண்டிருந்த அந்த ஐம்பது வயது கியான் பேச்சை சீக்கிரமாய் முடித்துக் கொண்டு விவேக்கைப் பார்த்து புன்னகைத்தார்.

“ப்ளீஸ் பி ஸீட்டட்...”

உட்கார்ந்தார்கள்.

கியான் பேச்சை ஆரம்பித்தார்.

“ஏதோ என்கொய்ரிக்காக வந்திருப்பதாக சொன்னார்கள்.”

“ஆமாம்...”

“என்ன என்கொய்ரி...?”

“கலிபோர்னியாவில் கம்ப்யூட்டர் பயிற்சிக்காக சென்ற ஸ்ரீராம் நேற்று காலை பத்து மணிக்கு டில்லிக்கு வந்திருக்கிறார். சூஸ் அண்ட் டேக் டிபார்ட்மென்டல் ஸ்டோரில் உள்ள உங்கள் கம்ப்யூட்டர் ஷோரூமுக்கு வந்து போயிருக்கிறார். இது உண்மையான செய்தியா...?”

கியான் புன்னகைத்தார்.

“நீங்கள் சொல்கிற ஸ்ரீராம் யார் என்றே எங்களுக்குத் தெரியாது. இது ஒரு ராங் என்கொய்ரி...”

“நோ... மிஸ்டர் கியான்...! இது ஒரு சரியான என்கொய்ரிதான்...! சிறிது நேரத்திற்கு முன்பு உங்கள் ஷோரூம் இன்சார்ஜ் தினகரோடு பேசிக் கொண்ருந்தபோது-ரிச்பஷனிஸ்ட் பெண் எங்கள் பேச்சை வெளியே இருந்தபடி ஒட்டுக்கேட்டதைப் பார்த்தேன். மேலும் ரீஜினல் ட்ரான்ஸ்போர்ட் ஆபீஸர் கொடுத்த ஃபைலில் உங்கள் கம்பெனிக்குச் சொந்தமான ஒயிட் கலர் காண்டஸா இருக்கிறது. எல்லாவற்றிற்கும் மேலாக கலிபோர்னியாவில் உள்ள ‘ப்யூச்சர் க்ளான்ஸ்’ கம்ப்யூட்டர் கம்பெனியிலிருந்து உங்களுக்காக இறக்குமதி செய்யப்பட்ட கம்ப்யூட்டரின் உதிரிப் பாகங்கள் அடங்கிய அட்டைப் பெட்டிகளை உங்கள் ஷோரூமில் பார்த்தேன். ஸ்ரீராம் கம்ப்யூட்டர் பயிற்சிக்காக சென்ற கலிபோர்னியா கம்ப்யூட்டர் மையத்தின் பெயர் ப்யூச்சர் க்ளான்ஸ், ஸோ... உங்கள் கம்பெனியான நியூ எரா, கம்ப்யூட்டர் பயிற்சிக்காக சென்ற ஸ்ரீராம், கலிபோர்னியாவில் உள்ள ப்யூச்சர் க்ளான்ஸ் கம்பெனி, இந்த மூன்றுக்கும் இடையே ஏதோ ஒரு பாண்ட் இருக்கிறது. ஸ்ரீராம் எதற்காக கலிபோர்னியாவிலிருந்து டெல்லி வந்தார்? அவர் ஒரு கார் விபத்தில் இறந்து விட்டதாக ப்யூச்சர் க்ளான்ஸ் கம்ப்யூட்டர் மையம் ஏன் பொய் சொல்ல வேண்டும்?”

கியான் கையமர்த்தினார்.

“மிஸ்டர் விவேக்...! நீங்களாகவே எதையாவது கற்பனை செய்து கொண்டு பேசுவது சரியில்லை. எங்களுக்கு ஸ்ரீராம் என்று யாரையும் தெரியாது... நீங்கள் போகலாம்.”

விவேக் சிரித்தான்.

“இப்படி நீங்கள் சொன்னால் உடனடியாய்ப் போய்விடுவதற்காக நான் இங்கே வரவில்லை மிஸ்டர் கியான். எனக்கு உண்மை வேண்டும். இல்லாவிட்டால் உங்களைக் கைது செய்து ஸ்டேஷனுக்குக் கொண்டு போய் உண்மையை வரவழைக்க வேண்டிய நிலைமை வந்துவிடும்... உண்மைகளை இங்கேயே ஒத்துக் கொள்கிறீர்களா இல்லை ஸ்டேஷனுக்கு வந்து லாக்கப் ட்ரீட்மெண்ட்டுக்குப் பிறகு ஒத்துக் கொள்கிறீர்களா...?”

கியான் சிரித்தார்.

“என்னைப் போலீஸ் ஸ்டேஷனுக்குக் கூட்டிப் போக உங்களால் முடியாது மிஸ்டர் விவேக்...”

“சட்டத்துக்கு முன்னால் எல்லோரும் சமம். எவ்வளவு பெரிய பதவியில் யார் இருந்தாலும் சரி, தப்பு செய்தவர்கள் ஸ்டேஷன் படியை மிதித்தேயாக வேண்டும்...”

“இந்த 2001-இல் அப்படியெல்லாம் நடக்கும் என்று நீங்கள் எதிர்பார்ப்பது தப்பு. ஆர்.ஏ.எஃப்-பைச் சேர்ந்த டெல்லி போலீஸ் கமிஷனர் மொஹிந்தர் இப்போது என் பாக்கெட்டில். இந்த அழைப்பு மணியைத் தட்டினால் போதும் என் எதிரே வந்து நிற்பார்.”

விவேக்கிற்குள் கோபம் சுர்ரென்றது.

“என்ன உளறுகிறாய்...?”

“உளறவில்லை இதோ...” சொன்ன கியான் மேஜையின் மேல் இருந்த அழைப்பு மணியைத் தட்ட, பக்கவாட்டுக் கதவு மெல்லத் திறந்தது. ஆர்.ஏ.எஃப் கமிஷனர் மொஹிந்தர் வெள்ளை, பைஜாமா சட்டையில் மார்புக்குக் குறுக்காகக் கைகளைக் கட்டிக் கொண்டு புன்னகையோடு வெளிப்பட்டார்.

விவேக் திகைப்பாய் எழுந்தான்.

“ஸ... ஸ... ஸார்...”

மொஹிந்தர் சிகரெட் ஒன்றைப் பற்ற வைத்துக் கொண்டார்.

“மிஸ்டர் விவேக்...! இந்த 2001-இல் டெல்லி என்கிற ஒரு பிராந்தியம் இருக்கக்கூடாது என்று ஆசைப்பட்டவர்களில் நானும் ஒருவன். காரணம் இந்தத் தேசம் சரியில்லை. இங்கே திறமைக்கும் உண்மைக்கும் மதிப்பு கிடையாது. போலி அரசியல்வாதிகளும், கிரிமினல்களும் மந்திரிகளாகி ஆட்சி செய்ய ஆரம்பித்துவிட்டார்கள். எனக்கு நியாயமாய் கிடைக்க வேண்டிய பதவிஉயர்வுகூட கிடைக்கவில்லை. என்னைப் பிடிக்காத ஒரு மந்திரி எனக்கு எல்லா வகைகளிலும் தொந்தரவு கொடுத்து ஆறு மாதத்துக்கு ஒரு தடவை ட்ரான்ஸ்பர் கொடுத்துப் பந்தாடினான். இந்த நன்றிகெட்டவர்களால் எனக்கு இந்தத் தேசமே பிடிக்காமல் போயிற்று. அப்போதுதான் மிஸ்டர் கியான் எனக்கு அறிமுகமானார்.”

கியான் இப்போது குறுக்கிட்டார்.

“மிஸ்டர் விவேக்...! இனி நீங்கள் இந்த இடத்தை விட்டு உயிரோடு வெளியே போகமுடியாது என்கிற ஒரே ஒரு காரணத்துக்காக இப்போது உங்களிடம் சில உண்மைகளைச் சொல்லப் போகிறேன். கலிபோர்னியாவில் இருந்த ஸ்ரீராம் என்கிற கம்ப்யூட்டர் என்ஜினியரை வலுக்கட்டாயமாகத் கொண்டு வந்தது நாங்கள்தான். ஷோரூமில் ஒரு நாள் முழுக்கத் தங்க வைத்துப் பின்பு இங்கே கொண்டு வந்தோம். ஸ்ரீராமை மிரட்டி இங்கிருந்தே மனைவி பூமாவோடு இயல்பாய்ப் பேசவைத்ததும் நாங்கள்தான். கலிபோர்னியாவில் ஒரு கார் விபத்தை நிகழ்த்தி அதில் ஒரு இந்தியரை உருத் தெரியாமல் இறக்க வைத்து, இறந்தது ஸ்ரீராம்தான் என்று சொல்ல வைத்ததும் நாங்கள்தான். காரணம் ஸ்ரீராம் போன்ற திறமையான கம்ப்யூட்டர் என்ஜினியர்கள் சில

பேராவது எங்களுக்கு வேண்டும். காலம் பூராவும் எங்கள் கட்டுப்பாட்டில் வைத்து அவர்களுடைய கம்ப்யூட்டர் அறிவை எங்களுடைய அழிப்பு சக்திகளுக்குப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும். ஸ்ரீராம் மாதிரி இன்னும் சில பேர் கிடைத்தால் இந்த இந்தியாவை அழிப்பது எங்களுக்குச் சுலபமான வேலையாகிவிடும்."

கியான் பேச்சை நிறுத்த, கமிஷனர் மொஹிந்தர் தொடர்ந்தார்.

"விவேக்... கியான் நீ நினைப்பது போல் சாதாரண நபர் இல்லை. அணுக் கதிரியக்கத்தை எப்படி காற்றில் பரப்பி மனித உயிர்களை ஆயிரக்கணக்கில் சாய்ப்பது என்கிற கலை அவருக்குத் தெரியும். இன்னும் ஒரு வார காலத்தில் டெல்லியின் காற்று மண்டலத்தில் அணுக் கதிரியக்கம் கலக்கப் போகிறது. இந்தக் கதிரியக்க அபாயத்தை செய்யப் போவது இங்கே நிர்மாணித்து வைத்து இருக்கிற சில கம்ப்யூட்டர்கள்தான். இந்த கதிரியக்கம் டெல்லியைத் தாக்கும்போது எங்களுக்குத் தப்பித்துக் கொள்ளும் வழி தெரியும். இந்த அணுக்கதிரியக்க அபாயம் டெல்லியை விழுங்கிட்டிருக்கும்போதே சில முக்கியமான கட்டிடங்கள் ஆர்.டி.எக்ஸ் வெடிகுண்டுகளால் செங்கல் செங்கல்லாய் சிதறி ஏகப்பட்ட உயிர்களைப் பலி வாங்கும். இதில் முதன்முதலில் சிதறப் போகும் கட்டிடம் எது தெரியுமா மிஸ்டர் விவேக்...?"

விவேக் திகைப்பாய் பார்க்க, இப்போது கியான் தொடர்ந்தார்.

"நாளை மறுநாள் ஒரு மணி சுமார்க்கு டெல்லியில் வெடித்து சிதறப்போகிற முதல் கட்டிடம் டெல்லி ரயில்வே ஸ்டேஷன். அந்த நேரத்துல ரயில்வே ஸ்டேஷனின் எல்லா ப்ளாட்பாரங்களிலும் ரயில்கள் இருக்கும். ஜனக்கூட்டமும் அலைமோதும். சேதம் எப்படி இருக்கும் என்பதைக் கொஞ்சம் கற்பனை செய்து பாருங்கள். ரயில்வே ஸ்டேஷன் தகர்க்கப்பட்டதும் அடுத்ததாய் எங்கள் குறி ரீகல் சர்க்கிள் கட்டிடங்கள். ஒரு பக்கம் குண்டு வெடிப்புகள். இன்னொரு பக்கம் அணுக் கதிரியக்கம், டெல்லி ஒரே வாரத்துக்குள் மயானமாகி விடாதா என்ன?"

விவேக் முகம் சிவக்கக் கத்தினான்.

"நோ...ஓ...ஓ...ஓ... ஓ..."

"ஸாரி மிஸ்டர் விவேக்! இந்த தேசத்து மேல அதிகப்படியான பற்றும் பாசமும் வைத்திருக்கிற உங்களால் இந்த அதிர்ச்சியை தாங்க முடியாதுதான்... உங்களுக்கு இன்னொரு அதிர்ச்சியான விஷயத்தை சொல்லட்டுமா...? டெல்லி ரயில்வே ஸ்டேஷனில் குண்டை வெடிக்க வைக்கப் போறது யார் தெரியுமா? ரயில்வே ஸ்டேஷன்ல புக் ஸ்டால் வெச்சிருக்கிற தங்கப்பன். புத்தக பண்டல்களுக்கு மத்தியில் இந்த நிமிஷமும் வெடிகுண்டு தூங்கிட்டிருக்கு. நாளை மறுநாள் பகல் ஒரு மணிக்கு வெடிக்கும்படியா குண்டை செட் பண்ணிட்டு தங்கப்பன் கேரளா போயிருவார். இதுல இன்னொரு விஷயம் பாக்கியிருக்கு. கோவிந்த் வர்மாவும் தங்கப்பனும் இந்தத் தீவிரவாதக் கொள்கைகளில் நிரம்பவும் தோஸ்த். பட் ரெண்டு பேர்க்கும் ஜான்ஸியில் இருக்கும் ஒரு பெண் விஷயமா தகராறு. இந்தத் தகராறு முற்றிப்போய்தான் கொலையில் முடிந்தது. அந்தக் கைங்கர்யத்தை பண்ணியதும் தங்கப்பன்தான். ட்யூப்ளிகேட் சாவிகளைத் தயார் பண்ணி கோவிந்த் வர்மாவை வீட்டுக்குள் கமுக்கமாய் கொலை செய்தது தங்கப்பன்தான்."

விவேக் உறைந்து போயிருக்க, கியான் ஒரு புன்சிரிப்போடு தொடர்ந்தார்.

"மிருதுளா மேல் போலீஸுக்கு சந்தேகம் ஏற்பட வேண்டும் என்பதற்காகத்தான் நேற்று இரவு நீங்கள் கோவிந்த் வர்மா வீட்டில் சோதனை நடத்திக் கொண்டிருந்தபோது எங்கள் ஆட்களில் ஒருவர் போன் செய்து நீங்கள் ரிஸீவரை எடுத்தபோது மிருதுளாவை கேட்டு விட்டு ரிஸீவரை வைத்தது."

கியான் பேசிக் கொண்டிருக்கும்போதே கமிஷனர் மொஹிந்தர் தன் இடுப்புப் பகுதியைத் தொட்டு ரிவால்வரை எடுத்துக் கொண்டார்.

"ஸாரி... மிஸ்டர் விவேக். நீங்களும் ஆன்டனியும் இனிமே உயிரோடு வெளியே போக முடியாது. நீங்கள் இதுவரைக்கும் எத்தனையோ சிக்கலான கேஸ்களை டீல் பண்ணி ஜெயித்து இருப்பீர்கள். எதிரிகளைக் கைது செய்தும் இருப்பீர்கள். ஆனால் இங்கே நீங்கள் ஜெயிக்க முடியாது. உயிரோடவும் திரும்ப முடியாது."

விவேக் புன்னகை செய்தான்.

"கமிஷனர் ஸார். நானும் ஆன்டனியும் இங்கேயிருந்து உயிரோடு தப்பிக்க முடியாது என்று நீங்கள் நினைக்கிறீர்களா?"

"நிச்சயமாய்..."

"எனக்கு ஒரு ஐந்து நிமிஷம் அவகாசம் கொடுத்தால் யாரையும் தாக்காமல், உங்களோடு சண்டை போடாமல் நின்ற இடத்தை விட்டு அசையாமல் ஆன்டனியும், நானும் தப்பித்துக் காட்டுகிறோம்."

கியானும் மொஹிந்தரும் திகைப்போடும் ஒருத்தரையொருத்தர் பார்த்துக் கொண்டார்கள்.

கியான் புருவங்களை உயர்த்தினார்.

"ஐந்து நிமிஷம் அவகாசம் கொடுத்தால் நீங்கள் இருவரும் நின்ற இடத்தை விட்டு அசையாமல் தப்பித்துக் கொள்வீர்களா?"

"நிச்சயமாய்."

கமிஷனர் மொஹிந்தர் பதட்டமாய்க் குறுக்கிட்டார். "வேண்டாம் மிஸ்டர் கியான். இந்த விளையாட்டெல்லாம் நமக்கு வேண்டாம். இவர்கள் இரண்டு பேரையும் சுட்டுத் தள்ளிவிட்டுப் போய்க் கொண்டேயிருக்கலாம்..."

கியான் மறுத்தார்.

"நோ... நோ! இப்படிப்பட்ட சேலஞ்சுகள் எனக்குப் பிடிக்கும். விவேக்கும் ஆன்டனியும் இப்போது நிராயுதபாணிகள். நின்ற இடத்தைவிட்டு அசையாமலேயே அதுவும் ஐந்து நிமிஷ அவகாசத்தில் தப்பித்துக் கொள்ள முடியும் என்று விவேக்

சொல்வது ஓர் ஆச்சரியமான விஷயம். விவேக்கால் முடிகிறதா என்று பார்ப்போமே…? ஐந்து நிமிஷம் என்பது முந்நூறு நொடிகள். முந்நூத்தியோராவது நொடியில் சுட்டு விடலாம். நீங்கள் விவேக்கை சுடுங்கள். நான் ஆன்டனியைச் சுடுகிறேன்.”

கியான் தன் கோட் பாக்கெட்டுக்குள் மறைத்து வைத்து இருந்த அந்த வெளிநாட்டு ஜாதி துப்பாக்கியை எடுத்துக்கொண்டார். விவேக்கை ஏறிட்டார்.

“இந்த நிமிஷத்திலிருந்து உங்களுடைய ஐந்து நிமிஷக் கணக்கு ஆரம்பமாகிறது. சரியாய் ஐந்து நிமிஷம் முடிந்து ஆறாவது நிமிஷம் பிறக்கும் விநாடி நீங்கள் இருவரும் சுட்டுத் தள்ளப்படுவீர்கள்.”

விவேக் புன்னகைத்தான்.

“ஐ அக்ரி வித் யூ…”

மார்புக்குக் குறுக்காகக் கைகளைக் கட்டிக் கொண்டு அப்படியே நின்றான். ஆன்டனிக்கு மட்டும் இங்கிருந்து எப்படித் தப்பிக் போகிறோம் என்கிற பயத்தில் அந்த ஏ.ஸி அறைக்குள்ளும் வியர்த்து விட்டிருந்தது.

# 18

கியான் கையிலும் மொஹிந்தர் கையிலும் இருந்த துப்பாக்கிகள் விடாப்பிடியாய் விவேக்கையும், ஆன்டனியையும் பார்த்துக் கொண்டிருக்க -

விநாடிகள் வேகமாய் விழுந்து ஐந்து நிமிஷ அவகாசத்தைக் கரைத்துக் கொண்டிருந்தது.

கியான் தன் மணிக்கட்டில் இருந்த வாட்ச்சைப் பார்த்துக் கொண்டு சொன்னார்.

“ஒரு நிமிஷம் முடிந்துவிட்டது விவேக். இன்னும் இருப்பது நான்கு நிமிஷம்தான்...”

விவேக் புன்னகைத்தான்.

விநாடிகள் மறுபடியும் காணாமல் போயிற்று.

மொஹிந்தர் குரல் கொடுத்தார்.

“இனி மூன்று நிமிடங்கள்தான்.”

விவேக் கைகளைக் கட்டிக்கொண்டு அதே பொஸிஷனில் நின்றான். ஆன்டனி இருப்புக் கொள்ளாமல் தவித்தான்.

“இப்ப மூன்று நிமிடங்களில் இங்கிருந்து எப்படித் தப்பித்துப் போக முடியும்...?”

விநாடிகள் வேகமாய் விழுந்தன.

இப்போது கியான் குரல் கொடுத்தார்.

“இனி இரண்டு நிமிடங்கள்”அப்படி அவர் சொல்லக் கொண்டிருக்கும்போதே, பக்கத்தில் நின்றிருந்த மொஹிந்தர் பிடிப்பு இல்லாமல் ஒரு மரக்கட்டையைப் போல் முன் பக்கமாய்க் கீழே சரிந்தார்.

“க... கமிஷனர் ஸார்...” கியான் பதறிக் கொண்டே மொஹிந்தர்க்குப் பக்கத்தில் போக முயல, அவருடைய தலைக்கு எதுவோ கிர்ரென்று மிக்ஸி வேகத்தில் சுழன்றது. கண்கள் இருட்டிக் கொண்டு வர, கைகளை நீட்டி எதையோ பற்றிக்கொள்ள முயன்று முடியாமல் ஒரு பக்கமாய் சரிந்து விழுந்தார்.

விவேக் ஆன்டனியைப் பார்த்து கண் சிமிட்டினான்.”எப்படி...?”

“எ... எப்படி ஸார்...?”

“இப்படி…” விவேக் தன் வலதுகால் ஷூவை உயர்த்திக் காட்டினான். பாலிவினைல் உடம்பாலான ஒரு ட்யூப் ஷூவின் உட்பாகத்தில் புதைந்து போய் தெரிந்தது.

“இது என்ன ஸார்…?”

“ஆன்டனி…! இது ஒரு இன்விஸிபிள் ஸ்மோக்கி வெப்பன். இந்தப் பாலிவினைல் ட்யூப்புக்குள் ஒரு ஸெடடீவ் லிக்விட் பேஸ்ட் மாதிரி இருக்கும். இந்த ஷூவை அழுத்திப் ப்ரஸ் பண்ணினா… பேஸ்ட் கரைஞ்சு உடனே காத்துல கலந்து ஆவியாகி பரவும். இது கண்ணுக்குத் தெரியாத புகை. எவ்வளவு பெரிய ஹாலாக இருந்தாலும் சரி, மூணே நிமிஷம் போதும். எதிரிகள் எவ்வளவு பேர் இருந்தாலும் சரி, இதை சுவாசிச்ச உடனேயே மரக்கட்டை மாதிரி சாய வேண்டியதுதான்…”விவேக் சிரித்துக் கொண்டு சொல்ல, ஆன்டனி கேட்டான்.

“அந்தப் புகை நம்மை ஒண்ணும் பண்ணலையே…?”

“பண்ணாது..”

“ஏன் ஸார்…?”

“இந்த இடத்துல வர்றதுக்கு முந்தியே கார்ல வரும்போது உனக்கு சாப்பிட ஒரு பெப்பர்மிண்ட் குடுத்தேன். ஞாபகம் இருக்கா…?”

“ஆமா ஸார்…”

“அந்தப் பெப்பர்மிண்ட் சாப்பிட்ட இருபத்திநாலு மணி நேரத்துக்கு இந்த இன்விஸிபிள் ஸ்மோக் எதுவும் பண்ணாது. ஸ்காட்லாண்ட் யார்ட் போலீஸோட சமீபத்திய கண்டுபிடிப்பு இது. நான் இன்னிக்குத்தான் இதைப் ப்ராக்டிகலா யூஸ் பண்ணிப் பார்த்திருக்கேன்…”

“ஃபென்டாஸ்டிக் ஸார்…”

“பாராட்டறதையெல்லாம் அப்புறமா வெச்சுக்கலாம். கியானுக்கும் மொஹிந்தர்க்கும் மயக்கம் தெளியறதுக்கு முந்தி போலீஸுக்குத் தகவல் போய் அதிரடிப்படை இங்கே வரணும். நீ அந்தப் பிஸ்டல்களை எடுத்துக்கோ... நான் ஆர்.ஏ.எஃப் போலீஸுக்குப் போன் பண்றேன்…”

ஆன்டனி வேக வேகமாய்ப் பிஸ்டல்களைப் பொறுக்கிக் கொள்ள, விவேக் தன் பாக்கெட்டில் இருந்த செல்போனை எடுத்துப் போலீஸின் ஆர்.ஏ.எஃப். பிரிவுக்கு டயலில் எண்களை ஒற்றி எடுக்க ஆரம்பித்தான்.

# 19

“அப்புறம்....?”

ரூபலா தன் மோவாய்க்கு இரண்டு கைகளையும் முட்டுக்கொடுத்து பெரிய கண்களில் கவலை மிதக்க கேட்டாள்.

விவேக், கப்பில் இருந்த காப்பியை சாஸரில் ஊற்றிக் கொண்டே சொன்னான்.

“அப்புறம் என்ன...? கியான் தீவிரவாதக் கும்பலைச் சேர்ந்த நூத்துக்கும் மேற்பட்ட ஆட்கள் இப்போ பாதுகாப்புச் சட்டப்படி உள்ளே இருக்காங்க...”

“மொஹிந்தர்...?”

“அவரைத் தனிப்பட்ட விதத்தில் விசாரணை செய்யறதுக்காக பாம்பே கொண்டு போயிருக்காங்க.”

“அவர் இப்படி தீவிரவாதியா காக்கி யூனிஃபார்ம்க்குள்ள இருப்பார்ன்னு கொஞ்சம்கூட நினைச்சுப் பார்க்கலைங்க...”

“இந்த நாட்ல இன்னும் எத்தனை பேர் இப்படி இருக்காங்களோ? 2001-ஆவது வருஷம் முடியறதுக்குள்ளே களை எடுத்தாகணும்.”

“ஸ்ரீராம், பூமா எப்படி இருக்காங்க...?”

“பூமாவுக்கு கோமா ஸ்டேஜ்லிருந்து ரிலீஃப் கிடைச்ச பத்து நிமிஷ நேரத்துக்குள்ளே கியானின் ஃபேக்டரியில் தனியறையில் அடைக்கப்பட்டிருந்த ஸ்ரீராமைக் கூட்டிப்போய் பூமா முன்னாடி நிறுத்திட்டோம். இன்னிக்கு டெல்லியிலேயே சந்தோஷமான பெண் பூமாதான்...”

“எப்படியோ டெல்லியை ஒரு பெரிய அழிவிலிருந்து காப்பாத்திட்டீங்க...”

“காப்பத்தினது நானில்லை ரூபி...”

“பின்னே...?”

“மிருதுளா…! மிருதுளா மட்டும் உன்னையும் என்னையும் பாலிகஞ்ச் மார்க்கெட்ல ஃபாலோ பண்ணி தன்னோட கணவர் கோவிந்த் வர்மாவைப் பத்தி சொல்லாமலே இருந்திருந்தா நான் இவ்வளவு வேகமா செயல்பட்டிருக்கமாட்டேன்…”

“மிருதுளா இப்போ எங்கே…?”

“வீட்ல…”

“பார்க்கப் போலாமா…?”

“கிளம்பு.. ஒரு பொக்கேயைக் குடுத்து வாழ்த்துக்கள் சொல்லிட்டு வரலாம்….”

**(முற்றும்)**

# ஆசிரியர் குறிப்பு

ராஜேஷ்குமார் - கிரைம் நாவல் மன்னன்; தமிழகத்தின் ஆல்பிரட் ஹிட்ச்காக். இவரது ஒவ்வொரு நாவலிலும், குற்றவாளியை வித்தியாசமான கோணத்தில் அடையாளம் காட்டும் விதம் படிப்பவர்களை அசரவைக்கும். இப்படியொரு கோணம் இருப்பதே படிப்பவர் பெரும்பாலோருக்குத் தோன்றவே தோன்றாது. அவர்கள் எதிர்பார்க்காத வகையில் இருக்கும்படி எழுதுவது இவரது சிறப்பு. இவரது ஒவ்வொரு நாவலும் விறுவிறுப்பாகவும், திடீர் திருப்பங்கள் நிறைந்தாகவும் இருக்கும். சஸ்பென்ஸை நாவலின் இறுதிவரை கொண்டு செல்லும் திறமை இவருக்கு பல லட்சக்கணக்கான வாசகர்களை சம்பாதித்துக் கொடுத்துள்ளது. ராஜேஷ்குமார் பள்ளி ஆசிரியராக இருந்து எழுத்தாளராக மாறியவர். இவருடைய முதல் நாவல் 1980 இல் மாலைமதியில் வெளிவந்தது. இவர் 18 வருஷ காலத்தில் 1000 நாவல்கள் எழுதியது ஒரு சாதனை. இவரது ஆயிரமாவது நாவல் டைனமைட் - 98. 1970 இல் இலக்கிய சாதனை விருதும், 1990 இல் வாசகர் பேரவையின் சார்பில் சிறந்த எழுத்தாளர் விருதும், 1991 இல் யுவரத்னா விருது, அவுட் ஸ்டேண்டிங் யங் பர்சன் அவார்ட் ஆகிய விருதுகளைப் பெற்றுள்ளார். மதுரை பல்கலைக்கழகத்திலும், சிதம்பரம் அண்ணாமலை பல்கலைக்கழகத்திலும் சில மாணவர்கள் இவருடைய நாவல்களை ஆய்வு செய்து ‘டாக்டர்’ பட்டம் பெற்றிருக்கின்றனர். தெலுங்கு, மலையாளம், கன்னடம், ஹிந்தி ஆகிய மொழிகளில் இவருடைய நாவல்கள் மொழி பெயர்க்கப்பட்டுள்ளன.